# அன்பொடு புணர்ந்த ஐந்திணை

– சங்கப் பாடல்கள் –

## நெய்தல்

தொகை – வகை – உரை

*இலக்கிய வல்லுநர்*

புலவர் த. கோவேந்தன்

**வேமன் பதிப்பகம்**

*19, நியூ காலனி - சோசியர் தெரு,*
*நுங்கம்பாக்கம்*
*சென்னை - 600 034*

## நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | அன்பொடு புணர்ந்த ஐந்திணை |
| ஆசிரியர் | : | த கோவேந்தன் |
| பதிப்பு | : | 24 08 2002 |
| பொருள் | : | சங்க இலக்கியம் - நெய்தல் |
| அளவு | : | 1 X 8 தெம்மி |
| எழுத்து | : | 11 புள்ளி |
| கட்டமைப்பு | : | சாதா அட்டைக் கட்டு |
| விலை | : | ரூ. |
| பக்கங்கள் | : | 305 |
| வெளியீடு | : | வேமன் பதிப்பகம்<br>19, நியூ காலனி, சோசியர் தெரு<br>சென்னை - 34<br>தொலைபேசி 28211134 |
| ஒளியச்சு | : | அன்பு - சகுராம் கிராபிக்ஸ்<br>சென்னை - 24<br>தொலைபேசி 24727236 |
| மறுதோன்றி | : | ரவிராஜா ஆப்செட்<br>சென்னை - 14 |

# அன்பொடு புணர்ந்த ஐந்திணை

தொல்பழங்கால நாகரிக நாடுகளில் தமிழகம் தலைசிறந்த ஒன்றாகும் சீனமும் தமிழும்தான் இன்றும் உயிர்ப்போடு உள்ளன தமிழிலக்கிய வரலாறு மிகமிகத் தொன்மையானது கிமு 3000-த்திலிருந்து கிபி 300 வரை பரப்புக்குட்பட்டது நாகரிக முதிர்ச்சியிலும் பண்பாட்டு நிலையிலும் இயற்கையோடியைந்த காலங்கள் முச்சங்கங்கள் நிலவின காலம்

ஈராயிரமாண்டு காலப் புலமைச் சான்றோர்களின் பாடல்களைக் கடற்கோளுக்கும் வந்தேறிகளின் அழிவுக்கும் பின்னும் அகம் என்றும் புறம் என்று தொகுக்கப்பட்டன அவை:

**நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று**
**இத் திறத்து எட்டுத் தொகை.**

**முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய**
**கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி, பட்டினப்**
**பாலை கடாத்தொடு பத்து**

பாட்டும் தொகையுமாகப் பாடினோர் ஒருகாலத்தவர், ஒரு நாட்டவர் அல்லர் ஓர் ஊரினர் அல்லர்.. குமரி முதல் வடவேங்கடம் வரை பல்வேறு காலங்களில் வாழ்ந்தவர்கள்

இன்று நமக்குக் கிடைத்துள்ள பாடல்கள் தொகை - பாட்டு நூற்படி மொத்தம் 2279 ஆகும் அகம் புறம் இரண்டும் பாடிய சங்கச் சான்றோர்கள் 238 பேர் ஆவர் மொத்தப் பாடல்களில் 102 புலவர்களின் பெயர் தெரியவில்லை இவர்களை நீக்கிப் பெயர் தெரிந்தவர்கள் 472 பேர் ஆவர்

அகப் பாடல்கள் அடி எல்லையைக் கொண்டும் பாவகையைக் கொண்டும் தொகுக்கப் பெறறவை ஐங்குறுநூறு 500, குறுந்தொகை 401, நற்றிணை 400, கலித்தொகை 149, பரிபாடல் 8, பத்துப்பாட்டு 4 - ஆக 1862 பாடல்கள் அகத்திணை வாழ்வு பற்றியவை

இயறகை நெறிக்காலமாகிய சங்ககால ஆண் பெண் அன்புறவு நட்பில் மலர்நது தோழமையில தோய்ந்து காதலில் இன்புற்று அறநெறி தவறா ஒழுக்க வாழ்வாகும் நானிலத்தின் பாகுபாட்டோடு வாழ்ந்த தமிழினத்தினர் களவில் தொடங்கி கற்புடை இல்லறவாழ்வில் இனிது வாழ்ந்தனர் வாழ்வோடும் நிலைத்தணை இயங்குதிணையோடும் இரண்டறக் கலந்து துய்த்தனர்

தோழர் தங்கப்பா கூறுவதுபோல "பாலுறவு அதன் முழுமையான பயனையும் நுண்சுவையினையும் நல்குவது அன்பு நிலையில்தான் ஒருவரில் ஒருவர் உண்மை அன்பு பூண்ட ஆணும் பெண்ணும் தம்முள் கூடி வாழும் வாழ்வில்தான் பாலுறவு வாழ்வின் மலர்ச்சிக்குத் துணை புரிகிறது" என்கிறார் இதனின் மணிச்சுருக்கம் தான் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்பதும் - 'மலரினும் மெல்லியது காமம், சிலர் அதன் செவ்வி தலைபடுவார்' என்பதுமாகும்

பிற உயிர்களிடத்தும் ஆண்பெண் அன்புறவு உள்ளதெனினும் அஃது இயற்கையின் இயல்பூக்க உணர்ச்சியே தவிர, மனமலர்ச்சியின் பேரின்பம் நுகரவில்லை அதனால் தான் தொல்காப்பியன்,

'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வருஉம் மேவற்றாகும்'

என்றான் இந நூற்பாவின் பொருள் உயர்திணை மாந்தர்க்கு மட்டுமின்றி பிற உயிரினங்கட்கும் பொருந்தும் அஃறிணைகள் மொழியைப் படைக்கத் தெரியாததால் தம்தம் இன்ப உணர்வுகளை வெளிப்படுதத முடியவில்லை மாநதன உணர்ந்ததை உணர்த்தும் படைப்பாற்றல் உள்ளவன் ஆதலால் மொழி முதல் உளிவரை உள்ளது சிறக்கும் மனத்தறிவால் உணாச்சி வெளிப்பாட்டினை மொழியில் வெளிப் படுத்தியவையே இலககியங்கள் இதில் அகமும புறமும் அடங்கும்

தமிழர் வாழவிலும் சங்க இலககியங்களிலும் 'அன்பொடு புணர்ந்த ஐந்திணைதான் உண்டே தவிர தொல்காப்பியன் கூறும் கைக்கிளையும் பெருந்திணையும் தமிழர் வாழ்விலே இல்லை இவ் இரண்டும் ஆரியர்களின் அழிம்பு நிலைகள் எனவே தான் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வகுத்தனர் இப் பாகுபாடு அறிவியலுக்கும் சமூக மனவியலுக்கும் பொருததமானவை

எந்தையர் வே மு தங்கவேலனார் தமிழ், தெலுங்கு சமற்கிருதம் ஆகிய மும் மொழிகளில் வல்லுநராய் இருந்தும் சங்க இலக்கியங்கள்

கற்றிருந்தாலுமசைவ சமயத்தவராகவே வாழ்ந்ததாலும் என் கல்வி விட்டு விட்டுத் தொடர்ந்ததால் எட்டாம் வகுப்பு படிக்கையில் தான் சங்க நூல்கள் அறிமுகமாயின காரணம 'செந்தமிழ்ச் செல்வி' 'தமிழ்ப் பொழில்' வீட்டுககு வநதன பாடநூல்களிலும் சங்கப்பாடல்கள பாடப்பகுதியில் வந்திருந்தன இவற்றுக்கும் மேலாய் வேலூர் கு மு அண்ணல்தங்கோவின் மாணவர் படையின் தலைவனாய் இருந்ததால் 40-50-களில் நடந்த தைப் பொங்கலின் ஒரு வார விழாவில் அக் காலத்தில் சிறந்தோங்கி யிருநத பல பெருபுலமைச் சான்றோர்களின் சொறபொழிவுகளாலும் அவர் களுக்குத் தொணடு செயதபோது பெற்ற செவிச செல்வமும் செழுந்தமிழ் நூற்படிப்பும் என்னை மதுரைத் தமிழச்சங்கத் தேர்வில் புகுத்தியது பாவேந்தர் தொடர்பும் அறிவுரையும் சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், சமய இலக்கியங்கள் சிற்றிலக்கியங்கள் பாரதி - பாரதிதாசன் சு.சு சோமசுந்தர பாரதி, வெளளை வராணனார், வேங்கட ராமையா, மயிலை வேங்கடசாமி, ந மு வேங்கடசாமி நாடடாா, கரந்தைக் கவியரசு, பெரும்புலவா வேணு கோபால நாய்கர் - பாலசுந்தர நாய்க்கர், உரைவேந்தர் அவ்வை சு துரை சாமி பிளளை, மு வ போன்ற பலரின் தொடர்பும் என்னைப் பிற இலக்கியங்களிலிருந்து சங்க இலக்கியத்தில மேலும மேலும் தோயச் செய்தன 1957-இல் தோழா தங்கப்பாவின் நட்பு சங்க இலககிய ஐந்தருவி யில் திளைத்தின்புறச் செய்தது

செனனை வாழ்கனகை என்னைப் பிறர்கசெழுதிப் பலர் பேரும் புகழும் பட்டமும் பெற முன்னிறுத்தியது என் வாழக்கைக்குரிய வருவாய் அதில் வநதது அப்பொழுது சங்க ஆய்வுக் களத்தில் மருதம் பற்றி ஆய்வு செய்தேன அதறகு முன்பே அகப்பொருள நூல்கள எவையும் ஏனோ குறிஞசி, முலலை, மருதம், நெய்தல் - பாகுபாடு நூலுககு நூல வேறுபட்டிருப்பதை அறிநது தெரிந்திருந்த எனக்கு அகப் பொருள பாடல்கள் அனைததையும் இப் பாகுபாட்டில் பிரிக்க வேண்டும் என்ற உந்தாற்றல் என் மனப் பண்ணையில் உயிர்த்தெழுந்தது

தொகை நூல்களில் முதன்முதல தொகுக்கப்பட்டது குறுந்தொகையும் அடுத்து நறறிணையும ஆகும் எனவே இரு நூல்கள குறிஞசி, முலலை, மருதம், நெய்தல் பாடலகள காவனததில் உலாவும் பல்வகை அஞசிறைத்தும்பிகளாக முறையின்றி ஊடுருவியுளளன அரிமா நோக்காக நற்றிணையில் ஒவ்வொரு பத்தாம் பாடடும் பல மருதத்திணையாகிறது பின்னர் தொகுககப்பட்ட ஐங்குறுநூறு மருதம் - நெய்தல் - குறிஞசி

பாலை - முல்லை எனறு கார்கானாறறாய்த் திசைமாறி சிறகுகின்றன அக நானூற்றிலோ களிற்றுயானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை யென முப பிரிவாகி ஒறறை எண் 1, 3, 5, 7, 9 எனப் பாலைப் பாடல்களும் 4, 14, 24, 34 என 4 - இல் முடியும் முல்லைப் பாடல்களும், 6, 16, 26, 36 என 6-இல் முடியும் பாடல்கள் மருதப் பாடல்களாகவும், 10, 20, 30, 40 - எண் பாடல்கள் நெய்தலாகவும் எண் அடிப்படையில் கலம்பகமாகவே உள்ளன பிற்கால நூலான கலைத்தொகையோ பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் எனப் பூமஞ்சரியாக விளங்குகின்றன.

சங்க நூல்களைப் பதிப்பித்த அறிஞர் பெருந்தகைகளும் நூலாராய்ச்சி வல்லுநர்களும் இம் முறை மாறி நிற்பவற்றை ஏனோ எண்ணவில்லை பேராசிரியர் சு வையாபுரிப் பிள்ளை துணிந்து சங்கப் பாக்களை ஆசிரியர் அகவரிசையில் முறைப்படுத்தியது போல - சீரிய கூரிய செம்மொழி அறிஞர் பேரா வ சுப மாணிக்கனார் தம் முனைவர் ஆய்வேடான ‘தமிழ்க் காதல்’ ஏட்டில் இம் முறை மாற்றம் பற்றிச் சுட்டிக் காட்டியது பற்றி நேரில் வினவுகையில் நீங்கள் முறைப்படுத்துங்களேன் என்று 1962-லேயே என்னிடம் கூறினார் அவ் வகையில் என்னை முழுமையாகச் செயல்படச் செய்தவர் தோழர் ம இல தங்கப்பா

ஒவ்வொரு திணைக்கும் நூற்பெயர் - ஆசிரியர் பெயர் பாட்டின் கீழ் தந்துள்ளேன் முதலில் வரிசை எண்ணும் ஒவ்வொரு திணைக்கும் தனித்துத் தந்துள்ளேன் பாடல் ஆசிரியர் பெயர் தெரியாதவிடத்து பாட்டுக்கடியில் உவமையாலோ அருந்தொடராலோ பாடினார் பெயர் சூட்டாமல் ‘பாடினார்?’ என்று வினாகுறி இட்டுள்ளேன் நற்றிணையில் மட்டுமே பாடினார் பெயர் தெரியாத பாடல்கள் மிக்குள்ளன

நெடுநாளைய என் திட்டத்தை செயல்படுத்தப் போய் நான் இழந்த பேரிழப்பைச் சொல்லி மாளாது அதாவது என் அன்புக்குரிய தோழர் தங்கப்பாவுடன் மடல் தொடர்புகளை இழந்தேன் இப் பணியில் ஒரு வெறியனைப் போல் இருந்ததால் அவரிடமிருந்து ஆறுமடல்களை இழந்தேன் இது ஒரு தனி மாந்தனுக்கு ஏற்பட்ட இழப்பன்று தமிழுக்கும் நாட்டிற்கும் உலகுக்கும் ஏற்பட்ட இழப்பாகும் அவ்விழப்பை என் தொகை வகை - உரைப் பணி ஈடு செய்யுமா என்பது ஐயமே என் வருவாயையுமஇழந்தேன் அது எனக்குப் பேரிழப்பில்லை நண்பரின் வாழ்வியக்க எண்ணங்களை மடலாகப் பெறாமையே ஈடிலாப் பேரிழப்பு

என் இவ் இலக்கியப் பணியினை மற்றவரும் வழிகாட்டினால் செய்தல் கூடும் ஆனால், கல்லூரி, பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் தொன்னூற்கஞ்சி தடுமாறுளத்தராயினர் வருவாயோ புகழோ பெறமுடியாத பணியென மடியின் மடியில் மகிழ்பவராய் உளளனர் பட்டிமன்ற சொற் பொழிவுத் தொழில் வணிகப் பரத்தராக விளங்கும் இரு மனத்தராகவும், தன்மையே விற்கும் வேடிக்கை மாந்தராகவும் நாளுக்கொரு பேச்சும், வேளைக்கொரு பேச்சு என வலியுருக்கி நோயின் வாயில்களாக வாழ்கின்றனர் எனவே பாடுபட்டுழைக்கும் பண்பிலிகளாயினர்

இந் நூலைத் தொகை - வகை - உரையுடன் கொண்டு வருவதில் ஓர் ஆர்வமும் அக்கறையும் உண்டு இதற்கு முன் சங்க இலக்கியத்திற்கு என் உரைகள வேறு வேறு மாந்தர்களின் பெயரால் வெளிவந்துள்ளன பெயரிடப் படாமல் மற்றொரு நிறுவனம் அரைகுறையாய் வெளியிட்டது. இரண்டாண்டுகளுக்கு நான் புதுக்கிய உரைகள் பணம் தந்தன ஆனால் இருவர் - மூவர் பெயரில் மலிவு விலையைப் போலவே பிழைகளும் மலிந்து வெளிப்பட்டன உழைப்புக்குக் கூலி கிடைத்தது அதற்குரிய பேரும் புகழும் யார் யாரோ உரிமை கொண்டாடினர். அதற்காக நான் வருந்தவில்லை ஏனெனில் சங்க இலக்கியம் பரவுவதில் எனக்குள்ள ஈடுபாடே காரணம்

திரை உலகில் பின்னணிப் பாடகர் பெயர் போடப்பட்டாலும் வாய் அசைப்பவரான கதை மாந்தருக்கன்றோ பேரும் புகழும்! பாடு பட்டுப் பயன் விளைவிக்கும் வேளாளரை எவர் நினைக்கின்றனர்? (தேவையும் இல்லை) ஆனால், சிற்றுண்டிப் பேருண்டிச் சாலைகளுக்குத் தானே பெயரும் புகழும் தாயையே மறக்கின்ற உலகத்தில் தந்தையை மறப்பது உலகத்தியற்கைதானே?

* * *

அகப் பாடல்கள் அடி மிகமிக முதல் இக உரிப்பொருள்கள் விரி வடைகின்றன அவையே போல் தமிழ் மன்னர்கள், அவர் தம் மற, அறச் செயல்கள் பிற மாந்தர் செயல்கள் தொழில்கள் வரலாறு நானல் வாழ்க்கை ஆகியவற்றின் குறிப்புகள் மிகுகின்றன

ஆனால் கலித் தொகையிலோ, ஆரியரின் தொன்மச் செய்தி களும், பாண்டியனைப் பாடலிலுமில்லை குறிக்கப்படுகின்றன ஆனால் எந்தப் பாண்டியன் என்று ஒரு பத்தியிலுமில்லை மேலும் மருதத்திலும் வரும் பரத்தையர், ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை,

கலித் தொகையில் பரத்தையர் புனலாடலும், தலைவி ஊடலும், எங்கும் சுட்டப் பெறவில்லை பரிபாடல் இதில் முதன்மை வகிக்கிறது பரத்தை யர்கள் பெரும்பாலும் பார்பணத்திகளே என்பது என் ஆய்வின் முடிவு

கலித் தொகை முல்லைத் திணையில் கொல்ஏறு அடக்குதல் வருகின்றது ஆனால், பிற சங்க அகநூல்களில் மாடுபிடி போர் இல்லை இது பிற்காலத் தமிழக வாழ்வில் இணைந்தது போலும் இந் நூலின் திணை வரிசைக்கேற்ப ஆய்வு செய்தால் பெருகும் என்பதனை விடுத்து, இத் தொகை - வகை உரை நூலை முறைப்படுத்துங்கால் என்னை இடையறாது ஆக்கப் பணிக்கு ஊக்குவித்த கலைஞன் பதிப்பகம் திரு மாசிலாமணி அவர்களுக்கும், ஆங்கில அறிஞர் திரு சகதீசன் அவர்களுக்கும், என் மகன் சிற்பி கோ வீரபாண்டியனுக்கும் வெளியீட்டாளர் திரு வேலாயுதம் அவர் களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி தமிழகம் இப் புதிய வார்ப்பினை ஏற்று பயனடையும் என்பது என் நம்பிக்கை

சங்கத் தமிழ்ச்சான்றோர் நூற்றொகைத் தந்துவக்கத் தங்கத்தைத் தேடுதல்போல் தம்வாழ்வைத் தாமிழந்து செங்கதிராய்த் தென்தமிழ்ச் செல்வத்தை நானிலத்தில் எங்கும் இருந்தமிழே உன்னால் இருந்தேன் ஓ, தங்கும் உயிர் வானோர் விருந்தமிழ்தம் வேண்டேம்என இங்குழைத் தார்க்கெல்லாம் நன்றி இயம்பிடுவன் பொங்குகடல் வீறலை போல்

**அன்பன்**

***த. கோவேந்தன்***

*காதலினால் உயிர் தோன்றும் - இங்குக்*
*காதலினால் உயிர் வீரத்தில் ஏறும்;*
*காதலினால் அறிவெய்தும் - இங்குக்*
*காதல் கவிதைப் பயிரை வளர்க்கும்*

*செவ்விது, செவ்விது, பெண்மை - ஆ!*
*செவ்விது செவ்விது செவ்விது காதல்*

- பாரதி

# நெய்தல்

## ஐங்குறு நூறு

### தாய்க்கு உரைத்தல்

#### 1. கணவன் தேர் வந்தது

அன்னை, வாழி! வேண்டு அன்னை! உதுக் காண் –
ஏர் கொடிப் பாசடும்பு பரியஊர்பு இழிபு
நெய்தல் மயக்கி வந்தன்று, நின் மகள்
பூப் போல் உண்கண் மரீஇய
நோய்க்கு மருந்து ஆகிய கொண்கள் தேரே.

– *அம்மூவனார் ஐங்குறு நூறு 101*

*தோழி செவிலியை நோக்கி, "தாயே! யான் கூறும் இதனை விரும்பிக் கேட்பாயாக. நின் மகளின் நீலநிறம் வாய்ந்த மலரைப் போன்ற மை பூசப்பெற்ற கண்ணில் பரவிய பசலை நோயானது அகல்வதற்குரிய மருந்தான தலைவனின் பெரிய தேர் நீண்ட கொடிகளையுடைய பசுமையான அடம்பங் கொடி சிதையும்படி நெய்தல் நிலப்பகுதியைச் சிதைத்துக் கொண்டு வருகிறது. அதை அங்குப் பார்ப்பாயாக!" என்று சுட்டிக் காட்டினாள்.*

#### 2. தேர்மணி ஒலி ஒலிக்கின்றது

அன்னை, வாழி! வேண்டு அன்னை! நம் ஊர்
நீல் நிறப் பெருங் கடல் புள்ளின் ஆனாது,
இன்புற இசைக்குமவர் தேர் மணிக் குரலே. – *ஐங் 102*

*தோழி, செவிலித் தாயைப் பார்த்து, "தாயே! நான் கூறும் இதை விரும்பிக் கேட்பாய். நம்மூரில் நீல நிறம்*

*உடைய பெரிய கடற்கரையில் வாழும் பறவைகளின் ஒலியைப் போன்ற, மணம் செய்து கொள்ளுதற் பொருட்டுப் பிரிந்து இப்போது திரும்பி வரும் தலைவருடைய தேரில் கட்டிய மணி ஒலி, துன்பத்தை மிகுதிப்படுத்தும் பிரிவுத் துயர் நீங்கவும் இன்பம் மிகவும், இடைவிடாது ஒலிக்கின்றது, கேட்பாய்!" என்று சொன்னாள்.*

## 3. மாமை அழகு பொருந்தியது

**அன்னை, வாழி! வேண்டு அன்னை! – புன்னையொடு**
**ஞாழல் பூக்கும் தண்ணந் துறைவன்**
**இவட்கு அமைந்தனனால் தானே;**
**தனக்கு அமைந்தன்று இவள் மாமைக் கவினே.** – *ஐங் 103*

*தோழி, செவிலித் தாயை நோக்கி, "தாயே! விருப்புடன் கேட்பாய், புன்னையுடன் ஞாழலும் பூக்கின்ற குளிர்ந்த அழகிய துறைவன் இவளுக்கு அமைந்தான். ஆதலால் இவளது மாமை அழகும் தானே பொருந்துவதாயிற்று" என்று உரைத்தாள்.*

## 304. செல்வனது ஊர்

**அன்னை, வாழி! வேண்டு அன்னை! நம் ஊர்ப்**
**பலர் மடி பொழுதின் நலம் மிகச் சாஅய்**
**நள்ளென வந்த இயல் தேர்ச்**
**செல்வக் கொண்கன் செல்வஃது ஊரே.** – *ஐங் 104*

*தோழி, செவிலித் தாயை நோக்கி, "யான் கூறும் இதனை விரும்பிக் கேட்பாய். நம் ஊரில் பலரும் மடிந்து உறங்கும் பொழுதான நள்ளிருள் பரந்த நடு யாமத்தில், தன் நலம் மெலிந்து போந்த தேரினை உடைய செல்வம் மிக்க கொழுநனுக்கு மகனான செல்வனது ஊர் அதுவே ஆகும்" என்று தலைவனது ஊரைக் காட்டிச் சொன்னாள்.*

## 5. நெற்றிப் பொன்னினும் சிவந்தது

**அன்னை, வாழி! வேண்டு அன்னை! – முழங்குகடல்**
**திரை தரு முத்தம் வெண் மணல் இமைக்கும்**
**தண்ணந் துறைவன் வந்தெனப்,**
**பொன்னினுஞ் சிவந்தன்று; கண்டிசின் நுதலே.** – *ஐங் 105*

*தோழி, செவிலித் தாயை நோக்கி, "தாயே! யான் கூறு வதை விரும்பிக் கேட்பாயாக, ஒலிக்கும் கடல் அலைகள் கொணர்ந்த முத்துகள் வெண்மையான மணலில் கிடந்து விளங்கும். குளிர்ந்து துறையையுடைய தலைவன் வந்தான் அதனால் இவளது நெற்றி பொன்னை விடச் சிவந்து விளங்கலாயிற்று" என்று சொன்னாள்.*

## 6. இவள் மேனி பசக்கின்றது

**அன்னை, வாழி! வேண்டு அன்னை – அவர் நாட்டுத்**
**துதிக்கால் அன்னம் துணை செத்து மிதிக்கும்**
**தண் கடல் வளையினும் இலங்கும் இவள்**
**அம் கலிழ் ஆகம் கண்டிசின் நினைந்தே.** *– ஐங் 106*

*தோழி, செவிலியை நோக்கி, "தாயே! இதனை விரும்பிக் கேட்பாயாக: அவர் நாட்டில் தோற்பை போன்ற கால்களை யுடைய அன்னப் பறவை தன் பெடையன்னம் என எண்ணித் தன் காலை வைத்து மிதித்து நோக்கும் குளிர்ந்த கடற் சங்கினை விட இவள் தன் அழகொழுகும் மேனி அவனை எண்ணி வேறுபட்டுப் பசலை வரப்பெற்றுத் தோன்று கின்றாள்" என்று சொன்னாள்.*

## 7. அலைஒலி கேட்டு வருந்துகிறாள்

**அன்னை, வாழி! வேண்டு அன்னை! – என் தோழி**
**சுடர் நுதல் பசப்பச் சாஅய்ப் படர் மெலிந்து,**
**தண் கடற் படு திரை கேட்டொறும்**
**துஞ்சாள் ஆகுதல் நோகோ யானே.** *– ஐங் 107*

*தோழி, செவிலித் தாயை நோக்கி, "தாயே! நான் சொல்வதை விருப்பத்துடன் கேள்: என் தோழி தனது ஒளி யுடைய நெற்றி பசலை கொள்வதால் மெலிந்து அவனையே நினைந்து மேனி வாடிக் குளிர்ந்த கடலின் அலை ஒலி கேட்குந் தோறும் அவன் தேர் மணியோசை எனக் கருதி உறங்காது வருந்துதலால் யான் வருந்துகின்றேன்" என்றாள்.*

## 8. எம் தோள்களைக் துறந்தால்...

**அன்னை, வாழி! வேண்டு அன்னை! கழிய**
**முண்டகம் மலரும் தண் கடற் சேர்ப்பன்**

எம் தோள் துறந்தனன் ஆயின்
எவன்கொல் மற்று அவன் நயந்த தோளே? — ஐங் 108

*தோழி, செவிலியை நோக்கி, "தாயே! நான் கூறுவதை விருப்பத்துடன் கேட்பாய். நீர்க் கழியில் உள்ளனவாகிய முள்ளிகள் மலரும் கடற் சேர்ப்பன் எம் தோளைக் கூடுவதனை விட்டு நீங்குவானாயின் அவனால் விரும்பப்பட்ட தோள்கள் என்னவாகும்?" என்று வினவினாள்.*

## 9. தலைவன் சொற்கள் மனத்தில்

அன்னை, வாழி! வேண்டு அன்னை! நெய்தல்
நீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவன்
என் தோள் துறந்த காலை எவன்கொல்
பன்னாள் வரும், அவன் அளித்த போழ்தே? — ஐங் 109

*தோழி, "தாயே! நான் சொல்வதைக் கேட்பாயாக நெய்தலின் நீர்க்குள் படர்ந்து ஓடிப் பூக்கும் கொடியினுடைய மலர்கள் பொருந்திய துறைவனான தலைமகன் பண்டு கூடி எம்மைத் தலையன்பு செய்தபோது அவன் தெளியச் சொன்ன சொற்கள் வரைவிடை வைத்துப் பிரிந்த இப்போது பின் முறையும் எம் மனத்தில் எழுந்தபடியே உள்ளன காரணம் யாதோ கூறுக" என்று வினவினாள்*

## 10. வாழிய பாலே!

அன்னை, வாழி! வேண்டு அன்னை! – புன்னை
பொன்னிறம் விரியும் பூக் கெழு துறைவனை
'என்னை' என்றும், யாமே; இவ் ஊர்
பிறிது ஒன்றாகக் கூறும்,
ஆங்கும் ஆக்குமோ, வாழிய, பாலே? — ஐங் 110

*தோழி, "தாயே! இதை விரும்பிக் கேள்: புன்னையின் பொன் நிறம் உடைய மலர்கள் எங்கும் பரந்து உதிர்ந்து கிடக்கும் துறையை உடையவன் தலைவன். அத் தகையவனை யாம் என்ன என்று சொன்னோமாக, இவ் ஊரில் உள்ளவர் வேறொன்றாகக் கூறுவர் ஆதலால், ஊழ் அவ் வண்ணமும் ஆக்குமோ?" என்று செவிலிக்குச் சொன்னாள்*

## தோழிக்கு உரைத்தது

### 11. பிரிவுத் தாங்கி வாழ்கின்றோம்!

அம்ம வாழி, தோழி! பாணன்
சூழ் கழிமருங்கின் நாண் இரை கொளீஇச்
சினைக் கயல் மாய்க்கும் துறைவன் கேண்மை
பிரிந்தும் வாழ்துமோ நாமே –
அருந் தவம் முயறல் ஆற்றாதேமே? – ஐங் 111

*தலைவி, "தோழியே, இதனைக் கேள். சுற்றியுள்ள கழியில் வாழும் சினையுடன் கூடிய கயல் மீன்களைப் பாணன் தூண்டிற் கயிற்றால் இரை கொள்ளுமாறு செய்து பிடிக்கும் துறைவனின் நட்பைப் பிரியாது பெறுவதற்குரிய அரிய தவத்தைச் செய்திலேமாகலின் பிரிவுத் துன்பத்தைத் தாங்கி இங்கு உயிர் வாழ்வோம் ஆனோம்" என்று சொன்னாள்.*

### 12. வரக் காண்போம்!

அம்ம வாழி, தோழி! பாசிலைச்
செருந்தி தாய இருங் கழிச் சேர்ப்பன்
தான் வரக் காண்குவம் நாமே;
மறந்தோம் மன்ற, நாணுடை நெஞ்சே. – ஐங் 112

*தலைவி தன் தோழியை நோக்கி, "தோழியே கேள், பசுமையான இலைகளை உடைய செருந்தி மரத்தின் கிளைகள் பரவிய பெரிய கழியையுடைய சேர்ப்பன் நம்மைத் தெளிவித்த போது கூறியவற்றை நாணம் உடைமையால் நாம் முழுதும் மறந்தோம் நம்மை என்றும் மறவாத மாண்புடைய மனம் உடையவனாதலால், இனி நாமே அவன் வரக் காண்போம். அஞ்சாதே!" என்று உரைத்தாள்.*

### 13. நிகழ்ந்தது இதுவே!

அம்ம வாழி, தோழி! நென்னல்
ஓங்குதிரை வெண் மணல் உடைக்கும் துறைவற்கு
ஊரார் 'பெண்டு' என மொழிய, என்னை
அது கேட்டு 'அன்னாய்' என்றனள், அன்னை;
பைபய 'எம்மை' என்றனென், யானே. – ஐங் 113

*தலைவி தன் தோழியை நோக்கி, "தோழியே கேட்பாயாக, வெண்மையான மணல் பொருந்திய கரையை அலைக்கும் உயர்ந்த அலைகளையுடைய துறைவனுக்குப் பெண்டா யினாள் என்று என்னை இவ் ஊரினர் நேற்றுப் பழி கூறினர். அதைக் கேட்டாள் அன்னை. சினம் கொண்டாள். அன்னாய் என என்னை அழைத்தாள் யான் அப்போது வெம்மை என்று மெல்லச் சொன்னேன் இதுவே நிகழ்ந்தது!" எனச் சொன்னாள்*

## 14. அவன் நாட்டுக்குப் போவோமா?

**அம்ம வாழி, தோழி! கொண்கன்**
**நேரேம்ஆயினும், செல்குவம்கொல்லோ –**
**கடலின் நாரை இரற்றும்**
**மடல்அம் பெண்ணை அவனுடை நாட்டே?** – *ஐங் 114*

*தலைவி, "தோழியே கேள்! நெய்தல் தலைவன் உள்ள வழி நாமே போய் அடைவதற்கு ஏற்ற உரிமை நமக்கு இல்லை. ஆயினும் கடல் நாரை வந்து தங்கி ஒலிக்கும் மடல் பொருந்திய பனை மரங்கள் நிறைந்த அவன் நாட்டுக்குப் போய் வருவோமா?" என்று தோழியிடம் உரைத்தாள்.*

## 15. தலைவன் இற்புறத்தான்

**அம்ம வாழி, தோழி! பல் மாண்**
**நுண் மணல் அடைகரை நம்மோடு ஆடிய**
**தண்ணம் துறைவன் மறைஇ,**
**அன்னை அருங் கடி வந்து நின்றோனே!** – *ஐங் 115*

*தலைவி, "தோழியே கேட்பாயாக: பலவகை மாட்சிமைப் பட்ட நுட்பமான மணல் செறிந்த கடற்கரையில் நம்மோடு கூடி ஆடிய குளிர்ந்த துறைவன் மறைந்து, அன்னையின் கடத்தற்கரிய காவல் அமைந்த இற்புறத்தே வந்து நின்றாள்" என்று தோழியிடம் கூறினாள்.*

## 16. மாலைப் போதே இது!

**அம்ம வாழி, தோழி! நாம் அழ**
**நீல இருங் கழி நீலம் கூம்பும்**

மாலை வந்தன்று, மன்ற –
காலை அன்ன காலை முந்துறுத்தே. – *ஐங் 116*

*தலைவி தன் தோழியை நோக்கி, "தோழி! கேள், நீல நிறம் பொருந்திய கழியில் நீல மலர்கள் குவிகின்ற இருள் மாலைப் போது, நாம் அழுது வருந்துமாறு, நாட்காலைப் போது போலும் ஒளி மாலைப் போதினை முன்னால் அனுப்பி விட்டு, பின் வருவதாயிற்று. தெளிவாகக் காண்பாயாக" என்று கூறினாள்.*

## 17. நன்றி மறத்தல் கூடாது!

அம்ம வாழி, தோழி! நலனே
இன்னது ஆகுதல் கொடிதே! – புன்னை
அணி மலர் துறைதொறும் வரிக்கும்
மணி நீர்ச் சேர்ப்பனை மறவாதோர்க்கே. – *ஐங் 117*

*தலைவி, "தோழியே கேட்பாயாக, புன்னை மரத்தின் அழகிய மலர்கள் துறைதோறும் படிந்து கோலம் செய்யும் தெளிந்த நீரை உடைய சேர்ப்பன் தந்த நலத்தை உடையோம் யாம். ஆதலால் அந்த நலம் இத் தன்மை உடையதாதல் கொடியது. ஆகவே, அதை மறந்து கூறுபவர் கூறுவனவற்றைக் கூறாதே!" என்றாள்.*

## 18. வருத்தத்துடன் மீண்டேன்!

அம்ம வாழி, தோழி! யான் இன்று
அறனிலாளற் கண்ட பொழுதில்,
சினவுவென் தகைக்குவென் சென்றனென்;
பின் நினைந்து இரங்கிப் பெயர்தந்தேனே. – *ஐங் 118*

*தலைவி, "தோழியே கேட்பாயாக யான் இன்று அந்த அறம் அற்ற தலைவனைக் கண்ட போது சினந்து, இனி இங்கு வராதே எனத் தடுத்திடச் சென்றேன். பின்பு அது செய்வதால் நமக்கே இழிவாம் என்று கருதி வருத்தம் கொண்டு மீண்டேன்" என்று தோழிக்குச் சொன்னாள்*

## 19. அன்பற்றவன்!

அம்ம வாழி, தோழி! நன்றும்
எய்யாமையின் ஏதில பற்றி,

அன்பு இலன் மன்ற பெரிதே —
மென் புலக் கொண்கன் வாராதோனே! — ஐங் 119

*தலைமகள் தன் தோழியை நோக்கி, "தோழியே, கேள்: நெய்தல் நிலத்தையுடைய தலைமகன் மணந்து கொள்வதற் குரிய நல்ல நெறியை அறியாமையால் அதற்குக் காரணமான வற்றை மேற்கொண்டு ஒழுகுகின்றமையால் அவன் பெரிதும் அன்பற்றவன் ஆவான். அன்புடையவனாயின், இவை செய்யாது மணத்தற்கு வேண்டுவனவற்றைக் கொண்டு வாராதிரான்" என்று சொன்னாள்*

## 20. தோள்கள் நலம் பெற்றன!

அம்ம வாழி, தோழி! நலம்மிக
நல்ல ஆயின, அளிய மென் தோளே —
மல்லல் இருங்கழி நீர் அறல் விரியும்
மெல்லம் புலம்பன் வந்தமாறே. — ஐங் 120

*தலைவி, "தோழியே, கேட்பாயாக. வளமான பெரிய கழியில், நீர் மிகுந்து பரவும். நெய்தல் புலங்களையுடைய தலைவன் வந்ததால், நலம் கெட்டு அளிக்கத் தக்கவாகிய எம்முடைய மென்மையான தோள்கள் முன்பு போல் நலம் மிக்கனவாயின" என்று சொன்னாள்.*

## தலைவனுக்கு உரைத்தது

## 21. கடலில் ஆடினாள்

கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே? —
முண்டகக் கோதை நனையத்,
தெண் திரைப் பௌவம் பாய்ந்து நின்றோளே! — ஐங் 121

*"நெய்தல் நிலத்தலைவனே, நின் நட்பாயினாளை யாம் நன்கு அறிந்துள்ளோம். அவள் கழிமுள்ளி மலரை அணிந்த தன் கூந்தல் நனையும் வண்ணம் தெளிவான திரையை உடைய கடலில் படிந்து விளையாடினாளாகலான் என்றாள் பரத்தை*

## 22. அவளை நன்கு அறிவோம்!

கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே?
ஒள் இழை உயர் மணல் வீழ்ந்தென,
வெள்ளாங்குருகை வினவுவோளே! — ஐங் 122

*தலைவ! நின் நட்பாயினளை யாம் தெளியக் கண்டுள் ளோம். அவள் மிக்க மணல் பரப்பில் விளையாடினாள். அக் காலை தன் ஒளியுடைய அணி அம் மணலுக்குள் வீழ்ந்தது. அதனால் அவள் தேடிக் கொள்ளும் பொருட்டு, பக்கத்தில் மேய்ந்து கொண்டிருந்த வெள்ளாங்குருகினை நோக்கி, 'நீ என் அணியைப் பார்த்தாயோ!' என்று வினவியபடி நின்றாள். ஆதலால் அவளை நாங்கள் நன்கு அறிவோம்" என்று பரத்தை தலைவனுக்குக் கூறினாள்.*

## 23. கடலில் பாய்ந்தாடுவாள்!

கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே?
ஒண்ணுதல் ஆயம் ஆர்ப்பத்,
தண்ணென் பெருங் கடல் திரை பாய்வோளே! — ஐங் 123

*"நெய்தல் நிலத்தலைவனே, நினக்கு உறவானவளை யாம் கண்டிருக்கின்றோம். அவள் ஒளி பொருந்திய நெற்றியை யுடைய தோழியர் கூட்டம் ஆரவாரிப்பக் குளிர்ந்த பெரிய கடலில் பாய்ந்தாடுவாள். ஆதலால் அவளை நன்கு அறி வோம்" என்று பரத்தை தலைவனைப் பார்த்துச் சொன்னாள்.*

## 24. கடலில் மண்ணை வீசினாள்

கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே?
வண்டல் பாவை வௌவலின்
நுண் பொடி அளைஇக் கடல் தூர்ப்போளே! — ஐங் 124

*"தலைவ, கடலின் நீர் [illegible]க்கு வந்து, தான் செய்து வண்டலகத்தில் வைத்து ஆடிய பாவையைக் கவர்ந்து சென்றால் சினந்து நுண்ணிய மணற்பொடியை அள்ளி யெடுத்துக் கடலில் வீசி அதைத் தூர்த்து நின்றவள் ஆதலால் நின் கேள் ஆயினவளை யாங்கள் நன்றாக அறிவோம்" என்று பரத்தை உரைத்தாள்.*

## 25. சிற்றிலைக் கடல் அலைத்தது

**கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே! –**
**தெண் திரை பாவை வௌவ,**
**உண்கண் சிவப்ப அழுது நின்றோளே!** *– ஐங் 125*

*"நெய்தல் தலைவனே! நினக்கு நட்பானவளை யாங்கள் கண்டோம். தான் செய்த வண்டற் பாவையைக் கடல் அலைகள் அழிக்கவே அவை அதைக் கவர்ந்து கொண்டன என்று மயங்கிக் கண்மை பூசப் பெற்ற விழிகள் சிவக்குமாறு அழுது நின்றாளாதலால்!" எனப் பரத்தை தலைவனை நோக்கியுரைத்தாள்.*

## 26. நீராடுவாள் நின் உறவினள்!

**கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே?**
**உண் கண் வண்டினம் மொய்ப்பத்,**
**தெண் கடல் பெருந் திரை மூழ்குவோளே!** *– ஐங் 126*

*"தலைவா! நின் உறவாயினவளை நாம் கண்டோம். அவள் மை பூசப்பெற்ற கண்களை மலர் என எண்ணி வண்டுகள் மொய்த்து ஆரவாரம் செய்ய, தெளிந்த கடலில் பெரிய அலைகளின் நடுவே மூழ்கி ஆடினாளாதலால்!" எனப் பரத்தை தலைவனை நோக்கியுரைத்தாள்.*

## 27. மாலை அணிந்த இளமுலையாள்

**கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே?**
**தும்பை மாலை இள முலை**
**நுண் பூண் ஆகம் விலங்குவோளே!** *– ஐங் 127*

*"நெய்தல் நிலத் தலைவனே, நின் உறவானவளை யாம் கண்டோம். அவள் தும்பைப் பூவால் தொடுக்கப்பட்ட மாலை அணிந்த தன் இளமுலைகள் பொருந்திய நுண்ணிய பூண் அணிந்த மார்பு தழுவுவதற்கண் பொருந்தா வகையில் விலங்கி நீங்குகின்றாளாகலின்!"*

## 28. மரப்பாவைக்குத் பாலை ஊட்டுபவள்!

**கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே?**
**உறாஅ வறுமுலை மடாஅ,**
**உண்ணாப் பாவையை ஊட்டுவோளே!** *– ஐங் 128*

*"தலைவனே! நினக்கு உறவாயினவளை யாம் பார்த்தோம். அவள் உண்ணும் செயல் அற்ற மரப்பாவைக்குத் தன் நன்கு வெளிப்படாத வறிய கொங்கையை வைத்துப் பாலூட்டி விளையாடுபவள் ஆவாள்!" என்றாள் பரத்தை.*

**பாடல்கள் 129, 130 மூலம் கிடைக்கவில்லை.**

## பாணற்கு உரைத்தது

### 29. கொண்கன் நட்பு சிறந்தது!

**நன்றே, பாண! கொண்கனது நட்பே –**
**தில்லை வேலி இவ் ஊர்க்**
**கல்லென் கௌவை எழாஅக் காலே.** *– ஐங் 131*

*தலைவி, "பாணனே, தில்லை மரங்களால் ஆன வேலி சூழ்ந்த இவ் ஊரில் 'கல்' என்னும்படி அலர் எழுந்து பரவா தாயின் தலைவனின் நட்புப் பெரிதும் நன்றே ஆகும்!" என்று உரைத்தாள்.*

### 30. அலர் எழுந்தது!

**அம்ம வாழி, பாண! – புன்னை**
**அரும்பு மலி கானல் இவ் ஊர்**
**அலர் ஆகின்று அவர் அருளுமாறே.** *– ஐங் 132*

*தலைவி பாணனை நோக்கி, "பாண, கேள் புன்னையின் அரும்புகள் மிக்குள்ள சோலையையுடைய இவ் ஊரில் அவர் அருள் செய்யும் திறம் அலராகி நின்றது. அங்ஙனமாக அவர் அருளுடையராதல் எவ்வாறு பொருந்தும்?" என வினவினாள்.*

### 31. தோள்கள் மெலிந்தன

**யான் எவன் செய்கோ? பாண! – ஆனாது**
**மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்,**
**புல்லென்றன, என் புரிவளைத் தோளே!** *– ஐங் 133*

*தலைவி பாணனை நோக்கி, "பாணனே, மென்மையான நிலத்தையுடைய தலைவன் மனைப் புறத்தே சிறிது பிரிந்தான்.*

*அவ்வளவில் என் வளையல் அணிந்த தோள்கள் அதனை ஆற்ற இயலாது மெலிந்தன. ஆகையால் யான் என்ன செய்வேன்?" என்று வருந்தி சொன்னாள்*

## 32. அழகு திரும்பியது!

**காண்மதி, பாண! இருங்கழிப்**
**பாய்பரி நெடுந் தேர்க் கொண்கனோடு**
**தான்வந்தன்று, என் மாமைக் கவினே.** *– ஐங் 134*

*தலைவி பாணனை நோக்கி, "பாணனே, பெரிய கழியில் பாய்ந்து போகும் குதிரைகள் பூட்டப்பட்ட நீண்ட தேரை யுடைய தலைவன் வந்தனன் அதனால் அவனுடன் பிரிந்தது போல மாந்தளிரின் தன்மையுடைய என் அழகும் தானே வந்து பொருந்தியது காண்க!" என்று மகிழ்ந்து கூறினாள்*

## 33. பைதலம் அல்லேம்!

**பைதலம் அல்லேம், பாண! பணைத் தோள்,**
**ஐது அமைந்து அகன்ற அல்குல்**
**நெய்தல் அம் கண்ணியை நேர்தல் நாம் பெறினே!**

*– ஐங் 135*

*தலைவி, "பாணனே, மூங்கிலைப் போன்ற தோள் களையும், மென்மை அமைந்த அல்குலையும் நெய்தல் மலர் போன்ற கண்களையும் உடையவளை நாம் காணப் பெறுவோமாயின் வருத்தத்தை அடையமாட்டோம்!" என்று கூறினாள்.*

## 34. நீ நாணிலை பாண!

**நாண்இலை மன்ற, பாண! – நீயே**
**கோள்நேர் இலங்கு வளை நெகிழ்த்த**
**கானம்அம் துறைவற்குச் சொல் உகுப் போயே.** *– ஐங் 136*

*தலைவி, "பாணனே, வளைந்த அழகிய வளைகள் நெகிழும்படி பிரிந்த கடற்கானல் சோலையையுடைய துறைவன் பொருட்டுப் பயன் படும் சொற்களை வறிதே கூறுகின்றாய். ஆதலால் நீ தெளிவாக நாணம் அற்றவன் ஆவாய்!" என்று இடித்துச் சொன்னாள்*

## 35. முன்போல் தந்நலம் பெறமுடியுமா?

நின் ஒன்று வினவுவல், பாண! நும் ஊர்த்
திண் தேர்க் கொண்கனை நயந்தோர்
பண்டைத் தம்நலம் பெறுபவோ மற்றே? — *ஐங் 137*

*தலைவி பாணனை நோக்கிப், "பாணனே, உன்னை ஒன்று வினவுகின்றேன் திண்மையான தேர்களை உடைய தலைவனை விரும்பிய மகளிருள், உம் ஊரில் இழந்த தம் நலத்தைத் திரும்பவும் முன்புபோல் பெறுபவர் உண்டோ! சொல்!" என்று வினவினாள்*

## 36. தாராதோய் பண்பிலை!

பண்புஇலை மன்ற, பாண! — இவ் ஊர்
அன்புஇல் கடிய கழறி,
மென் புலக் கொண்கனைத் தாராதோயே! — *ஐங் 136*

*தலைவி பாணனை நோக்கி, "பாணனே, இவ் ஊரில் மெல்லிய புலங்களையுடைய தலைவனைக் கண்டு அவனிடம் அன்பற்றவையும் கடியத் தக்கவையுமான இடிக்கும் சொற்கள் சில கூறி, அவனை இன்றியமையேமாகிய எம்மிடம் கொண்டு வராது போயின், உறுதியாக நீ பண்பில்லாதவன் ஆனாய்!" என்று வருந்தி சொன்னாள்.*

## 37. பாணன் நலத்தை அழிக்கின்றான்!

அம்ம வாழி, கொண்க! — எம் வயின்
மாண் நலம் மருட்டும் நின்னினும்,
பாணன் நல்லோர் நலம் சிதைக்கும்மே. — *ஐங் 139*

*தலைவி, "தலைவ, கேள், எம்மிடம் எம் சிறந்த நலத்தைக் கலங்கச் செய்யும் நின்னைவிட, நினக்கு வாயிலாய் வரும் பாணன், மகளிர் நலத்தை அழிக்கின்றான்" எனக் கூறினாள் தலைவனிடம்.*

## 38. வளை நெகிழக் காண்க!

காண்மதி, பாண! — நீ உரைத்தற்கு உரியை —
துறை கெழு கொண்கன் பிரிந்தென,
இறை கேழ் எல் வளை நீங்கிய நிலையே! — *ஐங் 140*

தலைவி பாணனை நோக்கி, "பாணனே! தலைமகன் உள்ள இடத்தைத் தேடிச்சென்று உரைக்கும் உரிமையை நீ உடையாய். ஆதலால் துறையையுடைய கொழுநன் என்னைப் பிரிந்தானாக, எம்முடைய வளைகள் நெகிழ்ந்து நீங்கும்; இம் மெலிவைக் காண்பாயாக!" என்று சொன்னாள்.

## புலி நகக்கொன்றை

### 39. துன்பம் இன்றி இருப்பது எப்படி?

எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண் துளி வீசிப்
பயலைசெய்தன பனி படு துறையே. — *ஐங் 141*

தலைவி, "தோழியே, நீரினால் அடித்து வரப்பட்ட மணல் பரந்த நிலத்தில் ஞாழலின் மலர் செருந்திப் பூவுடன் மணம் கமழக், குளிர்ந்த நீர்த்துறையில் துவலையாகிய குளிர்ந்த துணிகளை வீசிப் பசை கொள்ளச் செய்தன. ஆதலால் யான் துன்பம் இன்றி ஆற்றியிருப்பது எப்படி?" என்று வினவினாள்.

### 40. என் கண்கள் உறங்குக

எக்கர் ஞாழல் இறங்கு இணர்ப் படு சினை
புள் இறை கூரும் துறைவனை
உள்ளேன் – தோழி – படீஇயர் என் கண்ணே! — *ஐங் 142*

தலைவி, "தோழியே, எக்கரில் நின்ற புலிநகக் கொன்றையின் தாழ்ந்த மலர்க் கொத்துகள் பொருந்திய சினையில் பறவைகள் வந்து தங்கும் துறையையுடைய தலைமகனை நீ சொன்னபடியே நினையாமல் இருப்பேன். இனி, என் கண்கள் உறங்குக!" என்று தோழிக்குச் சொன்னாள்

### 41. முனிவு செய்த தடமென்தோள்!

எக்கர் ஞாழல் புள் இமிழ் அகன் துறை
இனிய செய்த; நின்று, பின்
முனிவு செய்த – இவள் தட மென் தோளே! — *ஐங் 143*

"மணல் மேட்டில் வளர்ந்து உள்ள ஞாழலில் தங்கிய பறவைகள் அதில் இருந்து ஒலியைச் செய்யும் அகன்ற துறை

*யில், இவளுடைய பெரிய தோள்கள் களவில் ஒழுகிய காலத்தில் நினக்கு இனியவற்றைச் செய்து பின்பு அதை விடுத்து நினக்கு வெறுப்பனவற்றைச் செய்தன" என்று தோழி தலைவனுக்குச் சொன்னாள்.*

## 42. மாந்தளிர்மை மாறிற்று

**எக்கர் ஞாழல் இணர் படு பொதும்பர்த்**
**தனிக் குருகு உறங்கும் துறைவற்கு**
**இனிப் பசந்தன்று – என் மாமைக் கவினே.** *– ஐங் 144*

*. "எக்கரில் நின்ற ஞாழலின் மலர்க் கொத்துகள் பொருந்திய சோலையில், துணையிற் பிரிந்து தனிமை அடைந்த குருகு உறக்கம் கொள்ளும் துறைவன் பொருட்டாக, இது காறும் நிறம் ஊரப்பெற்று அழகு குன்றாதிருந்த என் மாந்தளிரின் தன்மையை உடைய அழகு இப்போது பசலை எய்துவ தாயிற்று" என்று தலைவி தன் தோழிக்குச் சொன்னாள்.*

## 43. வருத்தம் போக்கினன்

**எக்கர் ஞாழல் சிறியிலைப் பெருஞ் சினை**
**ஓதம் வாங்கும் துறைவன்**
**மாயோள் பசலை நீக்கினன், இனியே!** *– ஐங் 145*

*"மணல் மேட்டு புலிநகக்கொன்றை சிறிய இலை களையுடைய பெரிய கிளையைக் கடல்நீர் பெருகி வந்து வளைக்கும் துறைவன், இப்போது மாமை நிறம் கொண்ட தலைவி அடைந்த பசலை நோயை நீக்கலானாள்" என்று தோழி தலைலி கேட்கும்படி சொன்னாள்.*

## 44. நிறயழகு இனியது

**எக்கர் ஞாழல் அரும்பு முதிர் அவிழ் இணர்**
**நறிய கமழும் துறைவற்கு**
**இனியமன்ற – என் மாமைக் கவினே.** *– ஐங் 146*

*தலைவி, "மணல் மேட்டில் உள்ள ஞாழலின் அரும்பு முற்றி மலர்ந்த மலர்க்கொத்துகள் நறுமணம் கமழும் துறைவன் பொருட்டு என் நிறயழகு தெளிவாக இனிமை யுடையன ஆயின" என்று தோழிக்குச் சொன்னாள்.*

## 45. தழையுடைக்கு நாடு நல்கினன்

எக்கர் ஞாழல் மலர் இல் மகளிர்
ஒண் தழை அயரும் துறைவன் –
'தண் தழை விலை' என – நல்கினன், நாடே. – ஐங் 147

*"மணற்குன்றிடம் வளர்ந்துள்ள ஞாழல் மரத்தில் மலர் இல்லாததைக் கண்ட மகளிர், அதன் குழையைப் பறித்து ஒள்ளிய தழை தொடுத்து, அணிந்து மகிழும் துறையை யுடைய தலைமகன், நீ உடுக்கும் தழையுடைக்கு விலையாய் நாடு களைத் தந்தான்" என்று தலைவிக்குத் தோழியுரைத்தாள்.*

## 46. முயங்குக இனிது

எக்கர் ஞாழல் இகந்து படு பெருஞ் சினை
வீ இனிது கமழும் துறைவனை
நீ இனிது முயங்குமதி, காதலோயே! – ஐங் 148

*தோழி, "அன்புடையவளே, மணல்மேட்டு ஞாழலில் ஓங்கும் பெரிய கிளையில் மலர்ந்த மலர்கள் இனிய மணம் கமழும் துறைவனை, நீ நன்றாகப் புணர்ந்து மகிழ்க!" என்று தலைவியிடம் இயம்பினாள்*

## 47. வருத்தம் உண்டாக்காதிருக்க!

எக்கர் ஞாழல் பூவின் அன்ன
சுணங்கு வளர் இள முலை மடந்தைக்கு
அணங்குவளர்த்து அகறல் வல்லாதீமோ! – ஐங் 149

*தோழி தலைவியை நோக்கி, "மணல் திட்டில் உள்ள ஞாழல் மரத்தின் மலரைப் போல் தேமல் வளர்கின்ற இளங் கொங்கைகளையுடைய மடந்தையான இவளுக்கு வருத்தம் உண்டாக்கிக் பிரியாது இருப்பாயாக!" என்று சொன்னாள்*

## 48. இணைந்தாலும் இணையாதவன்!

எக்கர் ஞாழல் நறு மலர்ப் பெருஞ் சினைப்
புணரி திளைக்கும் துறைவன்
புணர்வின் இன்னான், அரும் புணர்வினனே. – ஐங் 150

தலைவி, "கடற்கரையில் உள்ள ஞாழல் மரத்தின் நறுமண மலர்கள் பொருந்திய பெரிய கிளையைக் கடலின் திரைகள் வந்து கலக்கும் துறைவன் புணர்ச்சியிலும் துன்பமே விளைத்தலால், இன்று நம்மைப் புணர்ந்தாலும் புணராத வனே ஆவான். ஆதலால் நீ அவளை வினவுவதில் பயன் ஒன்றும் இல்லை" என்று தோழிக்குத் தலைமகன் கேட்பச் சொன்னாள்.

## வெள்ளை நாரை

### 49. உடைந்தது நெஞ்சம்!

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை
மிதிப்ப, நக்க கண் போல் நெய்தல்
கள் கமழ்ந்து ஆனாத் துறைவற்கு
நெக்க நெஞ்சு நேர்கல்லேனே. *– ஐங் 151*

*தலைவி, "வெள்ளாங்குருகின் குஞ்சு வினைத் தன் பார்ப்பு என்று எண்ணி அதைப் பார்ப்பதற்குச் சென்ற மடப்பம் பொருந்திய நடையையுடைய நாரை தன் காலால் மிதிப்ப, அதன் காரணமாக இதழ் விரியப் பெற்ற, கண்ணைப் போலும் நெய்தல் மலர்கள் தேன் மணம் வீசுதல் குறையாத துறைவன் பொருட்டாக என் நெஞ்சு உடைந்தது. ஆதலால் யான் அவற்குத் தூதாகச் செல்லுதல் ஆற்றேனாயினேன்" என்று தோழியிடம் உரைத்தாள்.*

### 50. அறவன், அருளன்

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை
கையறுபு இரற்று கானல்அலம் புலம்பந்
துறைவன் வரையும் என்ப;
அறவன் போலும்; அருளுமார் அதுவே. *– ஐங் 152*

*தலைவி "வெண் நாரையின் குஞ்சுவினைத் தனது பார்ப்பு என்று எண்ணி அதனைப் பார்ப்பதற்குச் சென்ற மடப்பம் உடைய நடைபொருந்திய நாரை செயலற்று ஒலித்தலைச்*

*செய்யும் கானலைச் சேர்ந்த கடல்நிலத் தலைவன், அப் பரத்தையை மணப்பன் எனப் பலரும் கூறுகின்றனர். ஆதலால் அவன் அறம் உடையவன். அஃது அவனுக்கு அருளும் ஆகும்!" என்று இகழ்ந்து தோழியிடம் சொன்னாள்.*

## 51. நம் நட்பு நாடுமோ?

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மடநடை நாரை
உளர, ஒழிந்த தூவி குவவு மணற்
போர்வில் பெறூஉம் துறைவன் கேண்மை
நல்னெடுங்கூந்தல் நாடுமோ – மற்றே? *– ஐங் 153*

*தோழி, "வெள்ளாஞ்குருகின் குஞ்சினைத் தன் குஞ்சு என்று எண்ணி அதைக் காண்பதற்குச் சென்ற மடப்பம் பொருந்திய நடைகொண்ட நாரை அலைப்ப வீழ்ந்த அதன் தூவி, காற்றில் திரண்டு உயர்ந்த மணற்குவியலில் பெறப்படும் துறைவனின் நேயம், நல்லவாய் நீண்ட கூந்தலை யுடைய தலைவியை நாடுமோ? நாடாது. ஆதலால் நீங்கள் தூதாக இணங்க வேண்டுவது ஏன்?" என்று தூதாக வந்த வரிடம் வினவினாள்*

## 52. பொய்க்கும் இவ் ஊர்!

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை
கானற் சேக்கும் துறைவனோடு
யான் எவன் செய்கோ? பொய்க்கும் இவ் ஊரே? *– ஐங் 154*

*தலைவி, "வெள்ளாங்குருகின் குஞ்சைத் தனது என்று எண்ணிக் காண்பதற்குச் சென்ற மடநடை நாரை 'கடற்கரைச்' சோலையில் தங்கும் துறைவனுடன் யான் என்ன செய்வேன்' இவ் ஊரார் பொய் கூறுகின்றனரே!" என்று வருந்திக் கூறினாள்.*

## 53. பைஞ்சாய்ப் பாவையைப் பெற்றேன்

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை

பதைப்பத், ததைந்த நெய்தல் கழிய
ஓதமொடு பெயருந் துறைவற்குப்
பைஞ்சாய்ப் பாவை ஈன்றனென், யானே! — ஐங் 155

*தலைவி, "வெள்ளாங்குருகின் குஞ்சினைத் தனதாக எண்ணிக் காண்பதற்குச் சென்ற நாரை இறகு அடித்து அசைகின்றது. ஆதலால் நெருங்கிய நெய்தல்கள் நீர்பரப்பில் பெருகி வரும் அலைகளுடன் நீங்கும் துறைவனுக்குக் களவில் யான் பஞ்சாய்ப் பாவையைப் பெற்றேன். ஆதலால் இது போதுமானது" என்று வாயில் வேண்டிய தோழிக்குக் கூறினாள்.*

## 54. காதலன் எனக்கோ அன்னைக்கோ!

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை
பதைப்ப, ஒழிந்த செம் மறுத் தூவி
தெண் கழிப் பரக்குந் துறைவன்
எனக்கோ காதலன்; அனைக்கோ வேறே! — ஐங் 156

*தோழி, "வெள்ளாங்குருகின் குஞ்சைத் தன் பார்ப்பு என்று எண்ணி அதைக் காண்பதற்குச் சென்ற மடப்பம் உடைய நாரை தன் இறகுகளைக் கோதியதால் உதிர்ந்த, செவ்விய வரிகளை யுடைய இறகு தெளிவான நீர்பரப்பில் போய்ப் பரவும் துறைவன், தலைவியிடம் மிக்க அன்புடையவன் என்பது எனக்கு உண்மை என்றே தோன்றுகிறது எனினும், என் தாய்க்கு வேறாய் விளங்குகின்றது. 'நான் என்ன செய்வேன்?' என்று வாயிலாக வந்தவர்க்கு மறுத்து உரைத்தாள்*

## 55. தனித்து வந்தான் மைந்தன்

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை
காலை இருந்து மாலைச் சேக்கும்
தெண் கடல் சேர்ப்பனொடு வாரான்,
தான் வந்தனன், எம் காதலோனே! — ஐங் 157

*"வெள்ளாங்குருகின் குஞ்சைத் தன் குஞ்சு என்று எண்ணி அதனைக் காண்பதற்குச் சென்ற மடநடை நாரை, காலை*

*தொடங்கி மாலை முற்றும் அங்கேயே தங்கும் தெளிந்த கடல்நிலத் தலைவனுடன் வாராமல் என் அன்புடைய மைந்தன் தான் தனித்து வந்தான்" என்று தலைவி வருந்தி சொன்னாள்.*

## 56. தோழியின் துயரைத் தீர்!

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை
கானல் அலம் பெருந் துறைத் துணையொடு கொட்கும்
தண்ணம் துறைவ! கண்டிகும்
அம் மா மேனி எம் தோழியது துயரே. *– ஐங் 158*

*"கடல் வெண்நாரையின் குஞ்சைத் தன் குஞ்சு என எண்ணி அதைக் காண்பதற்குச் சென்ற மடநடை நாரை, அஃது பொய் எனக் கண்டு, கானலின் பெரிய துறையில் தன் பெட்டையுடன் திரியும் குளிர்ந்த துறைவனே! அழகான மாந்தளிர் போன்ற மேனியை யுடைய எங்கள் தோழியான பரத்தையரின் துயரைக் கண்டு அதைப் போக்கி வருக எம்மைவிட அவள் ஆற்றாமை மிகவுடையவ்ள் ஆனாள்" எனத் தோழி தலைவனுக்கு உரைத்தாள்.*

## 57. இவளது நலத்தைத் திரும்பத் தருக

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை
பசி தின அல்கும் பனி நீர்ப் சேர்ப்ப!
நின்னொன்று இரக்குவென் அல்லேன்;
தந்தனை சென்மோ – கொண்ட இவள் நலனே.

*– ஐங் 159*

*"வெள்ளாங்குருகின் பார்ப்பைத் தன் பார்ப்பு என எண்ணி அதைக் காண்பதற்காகச் சென்ற மடநடை நாரை, பசி வருத்த வருந்தியிருக்கின்ற குளிர்ந்த நீரையுடைய நெய்தல் நிலத் தலைவனே! நினக்கே உரிய ஒன்றனை நான் இரக்க வில்லை! நீ கவர்ந்து கொண்டாயே இவள் நலம் அதைத் தந்து விட்டுப் போவாயாக!" என்று தோழி தலைவனைப் பார்த்துக் கூறினாள்*

### 58. விரைந்து போய் கூடுக

வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்,
காணிய சென்ற மட நடை நாரை
நொந்ததன் தலையும் நோய் மிகும் துறைவ!
பண்டையின் மிகப் பெரிது இனைஇ
முயங்குமதி, பெரும! மயங்கினன் பெரிதே! — *ஐங் 160*

*தலைவி, "வெள்ளாங்குருகின் குஞ்சைத் தன் குஞ்சு என்று எண்ணி அதைக் காண்பதற்காகச் சென்ற மடநடையை உடைய நாரை தன் குஞ்சு அதுவன்று என்பதைக் கண்டு வருந்தியதன் மேலும் வருத்தம் மிகும் துறைவனே, நின் காதற் பரத்தையின் புலவி தீராமையின் நின்னைவிட மிகவும் வருந்தி மயங்கினாளாதலால், பெரும, நீ விரைவாய்ப் போய் முன்பு போன்று அவளைக் கூடுவாயாக!" என்று தலைவனைப் பார்த்துக் கூறினாள்.*

## *சிறு வெண் காக்கை*

### 59. சொற்கள் வேறாயின

பெருங் கடற் கரையது சிறு வெண் காக்கை
கருங் கோட்டுப் புன்னைத் தங்கும் துறைவற்குப்
பயந்து நுதல் அழியச் சாஅய்,
நயந்த நெஞ்சம் நோய்ப்பாலஃதே! — *ஐங் 161*

*தலைவி, "பெரிய கடற்கரையில் உள்ளதான சிறு வெண் கடற் காக்கை நீந்தும் அளவு பெருகிய நீரையுடைய பெரிய கரையில் இரையான சிறு மீன்களை நாடியுண்டு மலர்கள் மணம் கமழும் சோலையில் தங்கும் துறைவனது சொற் களோ தமக்குரிய தன்மையில் வேறாக ஆயின" என்று ஆற்றாது சொன்னாள்*

### 60. சொற்கள் வேறுபட்டன!

பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை
நீத்து நீர் இருங் கழி இரை தேர்ந்து உண்டு,
பூக் கமழ் பொதும்பர்ச் சேக்கும்
துறைவன் சொல்லோ பிற ஆயினவே! — *ஐங் 162*

"பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண் காக்கை நீந்தும் அளவு பெருகிய நீரையுடைய பெரிய கடற்கழியில் இரை யான சிறிய மீன்களை நாடி உண்டு மலர்கள் மணம் கமழும் சோலையில் தங்கும் துறைவனின் சொற்களோ தமக்குரிய இயல்பினின்று வேறுபட்டவையாக உள்ளன." என்று தலைவி தன் தோழியைப் பார்த்துச் சொன்னாள்.

## 61. நெகிழ்ந்தன வளைகள்!

பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை
இருங் கழித் துவலை ஒலியின் துஞ்சும்
துறைவன் துறந்தெனத், துறந்து என்
இறை ஏர் முன் கை நீங்கிய, வளையே. – *ஐங் 163*

"பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண் காக்கை கரிய் நீர்க்கழியிலே எழும் துவலையின் ஒலி கேட்டுக் கண்ணுறங் கும் துறையை உடைய தலைவன், என்னைப் பிரிந்தானாக. என் திரட்சி பொருந்திய அழகான முன் கையில் அணிந்த வளைகள் என்னைத் துறந்து நீங்கின" என்று தலைவி தோழிக்குச் சொன்னாள்.

## 62. துறைவன் தகுதி அலராயிற்று!

பெருங் கடற் கரையது சிறு வெண் காக்கை
இருங் கழி மருங்கின் அயிரை ஆரும்
தண்ணம் துறைவன் தகுதி
நம்மோடு அமையாது அலர் பயந்தன்றே! – *ஐங் 164*

"பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண்காக்கை பெரிய நீர்க் கழியில் இருந்து அயிரை மீன்களை உண்ணும் தண்ணிய துறைவனின் தகுதி, நம்மிடம் அமைந்தொழியாது பரத்தை யரிடமும் சென்று அலர் தருவதாயிற்று" என்று தலைவி தோழிக்குக் கூறினாள்

## 63. வளையைக் கவர்ந்து கொண்டது

பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை
அறு கழிச் சிறு மீன் ஆர மாந்தும்
துறைவன் சொல்லிய சொல் என்
இறை ஏர் எல் வளை கொண்டு நின்றதுவே! – *ஐங் 165*

"பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண்காக்கை நீர் அற்ற கழியில் வாழ்கின்ற சிறு மீன்களை நிறைய உண்ணும் துறைவன் முன்பு நம்மைத் தெளிவிக்க வேண்டிச் சூளுற்றுக் கூறிய சொல் திரட்சி பொருந்திய அழகு விளங்கும் வளையைக் கவர்ந்து கொண்டது" என்றுதலைவி தோழியிடம் வருந்திக் கூறினாள்

## 64. நல்ல நல்லோள் கண்கள்

பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை
வரி வெண் தாலி வலை செத்து வெரூஉம்
மெல்லம் புலம்பன் தேறி,
நல்ல வாயின நல்லோள் கண்ணே. — *ஐங் 166*

"பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண்காக்கை வரி பொருந்திய வெண்மையான பலகறைகளை வலை என எண்ணி அஞ்சும் மெல்லிய கடற்கரைகளையுடைய தலை மகள் சொற்களைத் தெளிந்ததால், என் தலைமகளின் கண்கள் இளமை கொண்டு விளங்கின.

## 65. நமக்குக் கேள் ஆவான்!

பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை
இருங் கழி இனம் கெடிறு ஆரும் துறைவன்
நல்குவன் போலக் கூறி,
நல்கானாயினும், தொல் கேளன்னே. — *ஐங் 167*

"பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண்காக்கை உப்பங்கழியிடத்தில் வாழும் இனமாகிய கெளிற்று மீன்களை உண்ணும் துறைவன், நமக்குத் தலையளி செய்வதாகக் கூறிப் பின்பு அதைச் செய்யாமல் ஒழிந்தான். ஆயினும் அவன் நமக்கு முன்பே உறவான தன்மையுடையவன் என்று அறிக!" என்று தலைவி தோழிக்கு வருந்தி உரைத்தாள்

## 66. பாலுண்டு துன்பம் நீங்குவாள்!

பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை
துறை படி அம்பி அகமணை ஈனும்

தண்ணம் துறைவன் நல்கின்,
ஒண் நுதல் அரிவை பால் ஆரும்மே. – *ஐங் 168*

*"பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண்காக்கை துறையில் தங்கும் தோணியிலே கூடு அமைத்து முட்டையிட்டு வாழும் குளிர்ந்த துறைவன். அவன் வரைந்து கொண்டு தன் அன்பைச் செய்வானாயின், ஒளிபொருந்திய நெற்றியை யுடைய அரிவை பாலுண்டு துன்பம் நீங்கப் பெறுவாள்" என்று தோழி அறத்தோடு நின்று கூறினாள்*

## 67. என் கண்கள் பசந்தன!

பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை
பொன் இணர் ஞாழல் முனையின், பொதியவிழ்
புன்னைஅம் பூஞ் சினைச் சேக்குந் துறைவன்
நெஞ்சத்து உண்மை அறிந்தும்
என்செயப் பசக்கும் – தோழி! என் – கண்ணே? – *ஐங் 169*

*"பெரிய கடற்கரையில் வாழும் சிறு வெண்காக்கை பொன் போலும் மலர்க் கொத்துகளை உடைய ஞாழலை வெறுத்தால், அரும்பு அவிழும் புன்னையின் பெரிய கிளை யில் தங்கும் துறைவன், என் நெஞ்சத்து இருப்பதை அறிந்து வைத்தும், தோழி என் கண்கள் எதனால் பசலை கொண்ட னவோ! அறியேன்!" என்று தலைவி தோழியை நோக்கிக் கூறினாள்*

## 68. ஒளிமங்குதல் ஏன்?

பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை
இருங் கழி நெய்தல் சிதைக்கும் துறைவன்
'நல்லன்' என்றி ஆயின்;
பல் இதழ் உண்கண் பசத்தல் – மற்று எவனோ? – *ஐங் 170*

*"பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண்காக்கை கரிய உப்பங்கழியில் மலர்ந்த நெய்தலைச் சிதைக்கும் துறையை யுடைய தலைமகனை நல்லன் என்று கூறு கின்றாய் நல்லவன் என்றால் பல இதழ்களையுடைய மலர் போலும் என் மையுண்ட கண்கள் ஒளிமங்குதல் யாது கருதியோ! அறியேன்!" என்று தலைவி யுரைத்தாள்*

## தொண்டி நகர் போன்றாள்

### 69. மீண்டும் பெறுவது அரிது!

திரை இமிழ் இன் இசை அளைஇ, அயலது
முழவு இமிழ் இன் இசை மறுகுதொறு இசைக்கும்
தொண்டி அன்ன பணைத் தோள்,
ஒண் தொடி அரிவை – என் நெஞ்சு கொண்டோளே.

*– ஐங் 171*

*"கடல் அலைகள் ஒலிக்கும் இனிய ஒலியுடன் கலந்து அயலதாகிய முழவு முழங்கும் இனிய ஓசை தெருக்கள் தோறும் முழங்கும் தொண்டி. அத் தொண்டி நகரத்தைப் போன்ற பருத்த தோள்களையும் ஒளி பொருந்திய வளையலையும் உடைய பெண்ணான இவள், வன்மையுடைய என் நெஞ்சத்தைக் கவர்ந்து கொண்டாள் ஆதலால் இவளைத் திரும்பவும் கூடிப் புணர்ச்சி பெறுவது அரிது போலும்!" என்று தலைவன் கூறினான்.*

### 70. அலைபோல் இரவிலும் உறங்கேன்

ஒண் தொடி அரிவை கொண்டனன், நெஞ்சே!
வண்டு இமிர் பனித் துறைத் தொண்டி ஆங்கண்
உரவுக் கடல்ஒலித் திரையென
இரவினானும் துயில் அறியேனே! *– ஐங் 172*

*"ஒளி பொருந்திய தொடியை அணிந்த அரிவையானவள் என் நெஞ்சைக் கவர்ந்து கொண்டாள்: ஆகலின், வண்டுகள் ஒலிக்கும் குளிர்ந்த துறையையுடைய தொண்டி நகரத்துப் பரந்த கடலில் எழுந்து முழங்கும் அலைகளைப் போல் இரவிலும் உறக்கம் கொள்ளேன் ஆனேன்" எனப் பாங்கன் வினவத் தலைவன் என் தன் துயரைச் சொன்னான்.*

### 71. அறியாமை இருந்தவாறு என்னே!

இரவினானும் இன் துயில் அறியாது
அரவு உறு துயரம் எய்துப – தொண்டித்
தண் நறு நெய்தல் நாறும்
பின் இருங் கூந்தல் அணங்குற்றோரே. *– ஐங் 173*

"தொண்டி நகரத்தின் நீர்த் துறையில் மலர்ந்த குளிர்ந்த நல்ல நெய்தலின் மணம் கமழும் பின்னல் இடப்பட்ட கரிய கூந்தலையுடைய இவளால் வருத்தப்பட்டோன், இரவில் இனிய துயில் பெறாது அரிய மணியை இழந்துவிட்ட பாம்பின் மிக்க துயரத்தை அடைந்து வருந்துவன். இதனை அறியாது தலைவனை இகழ்ந்த என் அறியாமை இருந்தவாறு என்?" என்று பாங்கன் தனக்குள் கூறினான்.

## 72. அவளைச் சேர்தல் கூடும்!

அணங்குடைப் பணித் துறைத் தொண்டி அன்ன
மணங் கமழ் பொழிற் குறி நல்கினள் – நுணங்கு இழை
பொங்கு அரி பரந்த உண்கண்
அம் கலிழ் மேனி அசைஇய எமக்கே. – ஐங் 174

"தெய்வத்தையுடைய குளிர்ந்த துறை பொருந்திய தொண்டி நகரத்தைப் போன்ற, நறுமணம் கமழும் சோலையில், மெலிவுடைய எமக்கு, நுட்பமான அணியையும் மிகுந்த சிவந்த வரிகளையும் உடைய கண்ணையும் அழகு மிகும் மேனியையும் உடையவள் இனிமேல் கூடுதற்குரிய இடம் இஃது எனக் குறித்தனளாகலான், யான் போய் அவளைச் சேர்தல் தவறாது கை கூடும்" எனத் தலைமகன் தன் மனத்துள் கூறினான்.

## 73. தோழியுடன் வா

எமக்கு நயந்து அருளினை ஆயின், பணைத் தோள்
நல்நுதல் அரிவையொடு மென் மெல இயலி,
வந்திசின் வாழியோ! மடந்தை –
தொண்டி அன்ன நின் பண்பு பல கொண்டே. – ஐங் 175

"இப்போது எம்மை விரும்பி வந்து இன் நலத்தை தந்தருளினாய் எனினும், மங்கையே, இனி எல்லாச் சிறப்பையும் உடைய தொண்டி நகர் போலும் நின் பலவாகிய குணங்களைக் கைக் கொண்டு, பெருந் தோளாலுடன் மெல்ல வருவாயாக!" என்று தலைவன் தலைவியைப் பார்த்துச் சொன்னான்

## 74. செய்த தவறு யாது?

பண்பும் பாயலும் கொண்டனள் – தொண்டித்
தண் கமழ் புது மலர் நாறும் ஒண் தொடி,
ஐது அமைந்து அகன்ற அல்குல்,
கொய்தளிர்மேனி! – கூறுமதி தவறே. – *ஐங் 176*

*"தொண்டி நகரில் குளிர்ந்த புதிய மலரின் மணம் வீசும் தொடியையும், அழகிதாய் அகன்ற அல்குலையும், கொய்யப் பட்ட தளிர் போன்ற மேனியையும் உடையவளே, என் பண்பையும் உறக்கத்தையும் நின் தோழி கவர்ந்து கொண்டு என்னிடம் அவை இல்லாதவை ஆக்கினாள். ஆதலால் அவ்வாறு கொள்வதற்கு யான் செய்த தவறுதான் யாது?" என்று தலைவன் தோழியை நோக்கி வினவினாள்.*

## 75. தோள் கண்டவர் வருத்துவர்

தவறு இலர் ஆயினும், பனிப்ப மன்ற –
இவறு திரை திளைக்கும் இடு மணல் நெடுங் கோட்டு
முண்டக நறு மலர் கமழும்
தொண்டி அன்னோள் தோள் உற்றோரே. – *ஐங் 177*

*"ஒன்றை ஒன்று மேற்பட்டு எழும் அலை மோதலால் கொழித்திடப்பட்ட மணல் பரவிய உயர்ந்த கரையை உடைய துறையில், நீர் முள்ளியின் நறுமண மலர்களின் மணம் கமழும் சிறப்பையுடைய தொண்டி நகர் போன்றவளின் தோளைக் கண்டவர் தவறு ஒன்றும் செய்திலராயினும் தெளிவாக நடுக்கம் உற்று வருந்துவர். ஆகலின், யான் கூறு மாறு என்ன?" என்று தலைமகனுக்கு நகையாடி தோழி கூறினாள்.*

## 76. வாழ்தல் ஒல்லுமோ?

தோளும் கூந்தலும் பல பாராட்டி,
வாழ்தல் ஒல்லுமோ – மற்றே – செங்கோற்
குட்டுவன் தொண்டி அன்ன
எற்கண்டு நயந்து, நீ நல் காக்காலே? – *ஐங் 178*

*"செங்கோன்மையுடைய குட்டுவன் என்னும் சேர மன்னனுக்குரிய தொண்டி நகர் போன்ற என்னை, என் குறை*

மிகுந்த நிலையைக் கண்டும் நீ விரும்பி அருள் செய்யாது போயின், இவளுடைய தோளும் கூந்தலும் பாராட்டி வாழும் இவ் வாழ்க்கை எனக்கு இயல்வதோ? இயலாது!" எனத் தலைவன் தோழியிடம் சொன்னான்.

### 77. நெற்றி ஒளி கெடாதிருக்க அருள்வாய்!

நல்குமதி, வாழியோ! நளி நீர்ச் சேர்ப்ப!
அலவன் தாக்கத் துறை இறாப் பிறழும்
இன் ஒலித் தொண்டி அற்றே,
நின் அலது இல்லா இவள் சிறு நுதலே. — *ஐங் 179*

"*மிக்க நீரையுடைய துறையை உடையவனே! நின்னை அன்றியமையாத இவளது சிறிய நெற்றி, கரையில் வாழும் நண்டு தாக்குவதால் துறையில் வாழும் இறால்மீன் புரளும் இனிய ஒலியையுடைய தொண்டி நகர் போன்றதாதலால், நீ இவள் நெற்றி ஒளி கெடாதிருக்க அருள்வாயாக!" என்று தோழி தலைவனிடம் விரைந்து மணம் முடிக்க உரைத்தாள்.*

### 78. மணந்து நலன் துய்க்க!

சிறு நணி வரைந்தனை கொண்மோ – பெருநீர்
வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்
பறை தபு முது குருகு இருக்கும்
துறை கெழு தொண்டி அன்ன இவள் நலனே! — *ஐங் 180*

"*பரதவர் கடலினின்றும் பிடித்துக் கொணர்ந்த கொழுவிய மீனாகிய உணவின் பொருட்டுப் பறக்கும் வலி இல்லாத முதிர்ந்த குருகு தங்கியிருக்கும் துறை பொருந்திய தொண்டி நகர் போன்ற இவளை மிகக் குறுகிய போதில் மணந்து இவளது நலத்தைத் துய்ப்பாயாக!" எனத் தோழி தலைவனை நோக்கிக் கூறினாள்.*

## நெய்தல் பாட்டு

### 79. அருள் செய்தால் வாழ்தற்கு இனிது

நெய்தல் உண்கண் நேர் இறைப் பணைத் தோட்
பொய்தல் ஆடிய பொய்யா மகளிர்

குப்பை வெண் மணல் குரவை நிறூஉம்
துறை கெழு கொண்கன் நல்கின்,
உறைவு இனிது அம்ம – இவ் அழுங்கல் ஊரே! – *ஐங் 181*

*"நெய்தல் மலரைப் போன்ற கண்களையும் நுண்மையான திரட்சி பொருந்திய வளையணிந்த பருத்த தோளையும் உடையவராய் விளையாடிய இளமகளிர் குவிந்த வெண் மணலில் குரவைக் கூத்து ஆடும் துறை பொருந்திய கொண் கன் நம்மை மணந்து கொள்ளு முகத்தான் அருள் செய் வானாயின், அலரான ஆராவரத்தையுடைய இந்த ஊர் வாழ்தற்கு இனிதாகும்" என்றாள் தோழியிடம் தலைவி*

## 80. கடவுள் அல்லன்

நெய்தல் நறு மலர் செருந்தியொடு விரைஇக்
கை புனை நறுந் தார் கமழும் மார்பன் –
அருந் திறற் கடவுள் அல்லன் –
பெருந் துறைக் கண்டு இவள் அணங்கியோனே.

– *ஐங் 182*

*"பெரிய நீர்த் துறையில் இவளைக் கண்டு வருத்தம் அடையச் செய்தவன் தடுத்தற்கு அரிய கடவுளோ, அல்லன். நெய்தல் மலரின் மணமிக்க மலரைச் செருந்தி மலரோடு கலந்து அழகாகக் கட்டப்பட்ட நறிய மாலையின் மணம் கமழும் மார்பையுடைய ஆண் மகனாவான்" என்று தோழி அறத்தொடு நின்றாள்.*

## 81. காலை வரினும் களைஞர் இலர்'

கணங்கொள் அருவிக் கான் கெழு நாடன்,
குறும்பொறை நாடன், நல் வயலூரன்,
தண் கடற் சேர்ப்பன் பிரிந்தென, பண்டையின்
கடும் பகல் வருதி – கையறு மாலை! –
கொடுங் கழி நெய்தலும் கூம்பக்,
காலை வரினும் களைஞரோ இலரே. – *ஐங் 183*

*"துன்பத்தை உண்டாக்கும் மாலைப் பொழுதே, கூட்ட மாய் அருவிகள் பாயும் கானம் பொருந்திய நாடனும், சிறிய*

குன்றுகளையுடைய நாடனும், நல்ல வயல் பொருந்திய ஊரனும் குளிர்ந்த கடல் நிலத்தையுடைய சேர்ப்பனுமாகி யவன் தலைவன் அவன் என்னைப் பிரிதலால் நெறி பிறழ்தல் அமையுமாயினும் முன்பு போல் இன்றும் கடும்பகலில் வரு கின்றாய் அஃது ஒழிந்து வளைவான உப்பங்கழியில் மலர்ந்த நெய்தல் மலர் இதழ்குவியக் காலை வரினும் வருக, வரின் நின்னை விலக்குபவர் எவரும் இலர்" என்று மாலைக் காலத்தைப் பார்த்துத் தலைவியுரைத்தாள்.

## 82. கடலைவிடப் பெரியது அவர் நட்பு!

நெய்தல் இருங் கழி நெய்தல் நீக்கி
மீன்உண் குருகினங் கானல் அல்கும்
கடல் அணிந்தன்று, அவர் ஊரே;
கடலினும் பெரிது எமக்கு அவருடை நட்பே. *– ஐங் 184*

தலைவி, "நெய்தல் நிலத்தில் உள்ள பெரிய கழியில் மலர்ந்த நெய்தலை நீக்கி, அதன் அருகில் மேயும் மீனை உண்ணும் குருகுப் பறவை, தன் இனத்துடன் கூடிக் கானலில் தங்கும் கடலால் அழகு பெற்றது அவரது ஊர். அவரது நட்பு எமக்கு அக் கடலை விடப் பெரியது" என்று தூது வந்த வர்களிடம் மறுத்துக் கூறினாள்.

## 83. யாழினும் இனிய சொல்லாள்

அலங்கு இதழ் நெய்தல் கொற்கை முன்துறை
இலங்கு முத்து உறைக்கும் எயிறு கெழு துவர் வாய்
அரம் போழ் அவ் வளைக் குறுமகள்
நரம்பு ஆர்த்தன்ன தீம் கிளவியளே! *– ஐங் 185*

தலைவன் "அசையும் இதழ்கள் பொருந்திய நெய்தல் நிறைந்த கொற்கை நகரத்தின் முன் துறையில் பெறப்படும் முத்தைப் போன்ற பற்கள் பொருந்திய சிவந்த வாயினள் அரத்தால் அராவப்பட்ட அழகிய வளையலை உடைய இளையவள்; யாழ் இசை போன்ற இனிய சொற்களை உடையவள் ஆவாள்" எனத் தன்னால் விரும்பப்பட்டவளின் தனிச் சிறப்புக் கூறினான்.

## 84. விரைவில் மணந்து கொள்

நாரை நல் இனங் கடுப்ப, மகளிர்
நீர் வார் கூந்தல் உளரும் துறைவ!
'பொங்குகழி நெய்தல் உறைப்ப இத் துறைப்
பல்கால் வரூஉந் தேர்'எனச்
செல்லாதீமோ என்றனள், யாயே. — *ஐங் 186*

*தோழி, "நாரையின் நல்ல கூட்டத்தைப் போன்ற மகளிர் நீர் ஒழுகும் கூந்தலை உலர்த்தும் துறைவனே, நீர் மிக்குள்ள உப்பங்கழிகளில் நெய்தல்கள் நீர்த்துளிகளைச் சொரியும் இத் துறையில் பலமுறையும் தேர் வருகின்றது எனச் சொல்லி. 'இனி வெளியே செல்லாதே' என எம்முடைய தாய் இல்லத்துள் அடைத்து வைத்தனள். ஆதலால் நீ ஏற்ற ஒன்றைச் செய்வாயாக, அது திருமணம்" என்றாள், தலைவனிடம்!*

## 85. அயலாளரும் ஐயப்படுவர்!

நொதுமலாளர் கொள்ளார் இவையே;
எம்மொடு வந்து கடல் ஆடு மகளிரும்
நெய்தல்அலம் பகைத்தழைப் பாவை புனையார்;
உடலகம் கொள்வோர் இன்மையின்,
தொடலைக்கு உற்ற சில பூவினரே. — *ஐங் 187*

*"பெருமையுடையாய்! எம்முடன் வந்து கடலாடும் மங்கையர் நெய்தலே தலைமைப்படக் கலந்து தொடுத்து இட்ட கைத் தழையை மணலில் நிறுவி யாரும் பாவைக்குப் புனையர். வேறு மலர்கள் கலவாமல் முற்றும் நெய்தலே தொடுத்து அணிந்து கொள்வோரும் இலர். ஆதலால் மாலையைத் தொடுப்போரும் இதனிற் சில மலரே கொள்வர் ஆதலின், இதை யாங்கள் ஏற்றால் அயலாளரும் ஆராய்வ தற்கு இடம் ஆகும்" என்று தொழி கையுறையை ஏற்க மறுத்தாள்.*

## 86. காதலியின் கண்கள்

இருங் கழிச் சேயிறா இனப் புள் ஆரும்
கொற்கைக் கோமான் கொற்கைஅம் பெருந் துறை

வைகறை மலரும் நெய்தல் போலத்
தகை பெரிது உடைய காதலி கண்ணே! – ஐங் 188

*"கூட்டமான குருகுகள் கரிய உப்பங்கழியில் வாழும் செம்மையான இறால் மீன்களை உண்ணும் பாண்டிய மன்னனின் கொற்கை என்னும் ஊரின் பெரிய துறையில் வைகறைப் பொழுதில் மலரும் நெய்தல் மலர்போல் எம் காதலியின் கண்கள் அழகு மிக உடையன ஆயின" என்று தலைவன் தலைவியின் இல்லற வாழ்வினை உரைத்தான்.*

## 87. கண்கள் மலர்ந்தன

புன்னை நுண் தாது உறைத்தரு நெய்தல்
பொன்படு மணியில் பொற்பத் தோன்றும்
மெல்லம் புலம்பன் வந்தென,
நல்லஆயின தோழி என் கண்ணே. – ஐங் 189

*"தோழியே, புன்னை மலரின் நுண்மையான துகள் படிந்து கிடக்கும் நெய்தல் மலர், பொன்னிடை வைக்கப் பட்ட நீலமணி போன்று விளங்கித் தோன்றும் மென்மை யான கடற்கரையை யுடையவன் மணந்து கொள்ளும் பொருட்டால் வந்தனன். அதனால் என் கண்கள் மலர்ச்சி யுற்றன" என்று தோழி தலைவியைப் பார்த்து மகிழ்ந்து கூறினாள்.*

## 88. தலைவன் நெஞ்சம்

தண் நறு நெய்தல் தளை அவிழ் வான்பூ
வெண்ணெல் அரிநர் மாற்றினர் அறுக்கும்
மெல்லம் புலம்பன் மன்ற – எம்
பல் இதழ் உண்கண் பணி செய்தோனே. – ஐங் 190

*"எம் பலவான இதழ்களையுடைய பூப்போலும் மை தீற்றப் பெற்ற கண்கள் நீர் வடிந்து வருத்தம் அடையச் செய்தவன், வெண்மையான நெல்லை அரியும் உழவர் நெய்தலின் முறுக் கவிழ்ந்த அழகிய பூவை விலக்கி நெற் பயிரையே அறுக்கும் மென்மையான கடற்கரையை உடைய வன் ஆவான்" என்று தோழி தன் தலைவியின் உள்ளங் கவர்ந்த கள்வனைக் குறிப்பிட்டுக் கூறினாள்*

## சங்கு பத்து

### 89. மலைவாழ் அணங்கினும் அரியள்

கடற்கோடு செறிந்த, மயிர் வார் முன்கைக்,
கழிப் பூத் தொடர்ந்த இரும் பல் கூந்தல்,
கானல் ஞாழல் கவின் பெறு தழையள்
வரைஅரமகளிரின் அரியள் என்
நிறை அரு நெஞ்சம் கொண்டு ஒளித்தோளே. — *ஐங் 191*

*தலைவன், "கடற்கரையில் அலையினால் கொணரப் பட்டுச் சேர்க்கப்பட்ட சங்கினால் சமைக்கப்பட்ட வளை அணிந்த முன் கையையும், கழியில் மலர்ந்த மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை அணிந்த கரிய கூந்தலையும், கான லில் நின்ற ஞாழலின் தழையால் செய்த அழகிய தழை யுடையையும் உடையவள். நிறையால் கொள்வதற்கு அரிய என் உள்ளத்தைக் கொண்டு மறைந்தவள் சூரர மகளிரைப் போல் பெறுவதற்கு அரியவள் ஆவாள்!" என்று தன் தோழனுக்கு மனங் கவர்தாளின் மாண்பினைச் சொன்னான்.*

### 90. நெகிழ்ந்த வளைகள் செறிந்தன

கோடு புலங் கோட்ப, கடல் எழுந்து முழங்க,
பாடு இமிழ் பனித் துறை ஓடுகலம் உகைக்கும்
துறைவன் பிரிந்தென, நெகிழ்ந்தன,
வீங்கின மாதோ – தோழி! என் வளையே! — *ஐங் 192*

*"தோழியே! சங்குகள் கரையில் வந்து உலவவும், கடலில் அலைகள் எழுந்து ஒலிக்க, ஒலித்தலையுடைய குளிர்ந்த துறையில் ஓடுதற்குரிய கலங்களை நீரில் செலுத்தும் துறை வன் முன்பு பிரிந்ததால் நெகிழ்ந்து நீங்கிய என் வளைகள் அவன் வருகையால் முன் கையில் கிடந்து பொருந்தின" என்று தலைவி உவகையுடன் தோழியிடத்துக் கூறினாள்.*

### 91. வளையல்கள் நல்லனவோ?

வலம்புரி உழுத வார் மணல் அடைகரை
இலங்கு கதிர் முத்தம் இருள் கெட இமைக்கும்

துறை கெழு கொண்க! நீ தந்த
அறைபுனல் வால் வளை நல்லவோ தாமே? *– ஐங் 193*

*"வலம்புரிச் சங்குகள் ஊர்ந்து செல்வதால் உழப்பட்ட நீண்ட மணல் பரந்த கடற்கரையில் கதிர்களையுடைய முத்துகள் இருள் நீங்குமாறு ஒளி விட்டு விளங்கும் துறையுடைய தலைவ, நீ அளித்த, ஒலிக்கின்ற நீரில் பிறந்த வெண்மையான இவ் வளையல்கள், முன்னம் இவள் அணிந்திருந்த வளையல்கள் போலல்லாது மெலிந்தபோது நீங்காத இயல்பு உடையனவோ?" என்று திருமணத்தை விரைவுபடுத்த வினவினாள் தோழி.*

## 92. ஏற்றது செய்க

கடற் கோடு அறுத்த அரம் போழ் அவ் வளை
ஒண் தொடி மடவரற் கண்டிகும்; கொண்க!
நல் நுதல் இன்று மால் செய்தென,
கொன் ஒன்று கடுத்தனள், அன்னையது நிலையே.

*– ஐங் 194*

*தோழி, "கடல் துறைத் தலைவ, கடற்சங்கை அறுத்து அரத்தால் வனைந்து செய்யப்பட்ட அழகிய வளையலையும் ஒள்ளிய கொடியையும் உடைய மடப்பம் உடைய தலைவியைக் காண்பாயாக. அவளுடைய நல்ல நெற்றி இன்று ஒளி மங்கியுள்ளது இப்படிப்பட்ட வேறுபாட்டினால் இதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும் எனத் தாய் நினைத்தாள் அஃது இல்லத்தில் நிகழும் நிலைமையாதலால், நீ நினக்கு ஏற்றதைச் செய்க!" எனத் திருமணத்தை வற்புறுத்திக் கூறினாள்*

## 93. என் உறக்கம் கவர்ந்தாள்

வளை படு முத்தம் பரதவர் பகரும்
கடல் கெழு கொண்கன் காதல் மடமகள்
கெடல் அரும் துயரம் நல்கிப்,
படல் இன் பாயல் வவ்வியோளே. *– ஐங் 195*

*"சங்கில் பிறக்கும் முத்துகளைக் கொணர்ந்து பரதவர், மற்ற நிலத்தில் வாழ்பவர்க்கு விற்கும் கடல் பொருந்திய*

கொண்கனின் அன்புமகள் நீக்க முடியாத துயரத்தைத் தந்து, கண் மூடுதலான இனிய உறக்கத்தைக் கவர்ந்து கொண்டாள், எனவே யான் ஆற்றுவது எப்படி?" என்று தலைவன் இல்லற மற்றுத் தனித்து வாழ்தலைக் கூறினான்.

## 94. மணந்து கொள்வாய்!

கோடு ஈர் எல் வளைக் கொழும் பல் கூந்தல்,
ஆய் தொடி, மடவரல் வேண்டுதி ஆயின் –
தெண் கழிச் சேயிறாப் படூஉம்
தண் கடற் சேர்ப்ப! வரைந்தனை கொண்மோ. – *ஐங் 196*

*தோழி தலைவனை நோக்கி, "சங்கை அறுத்துச் செய்த வளையையும், கொழுவிய கூந்தலையும், நுண்மையான தொடியையும் உடைய இவளைக் கூடுதல் வேண்டினாயாயின், தெளிந்த நீரையுடைய உப்பங்கழியில் வேண்டுவார் கொள்ளு மாறு செவ்விய இறால் மீன்கள் அகப்படும் குளிர்ந்த கடல் நிலைத்தலைவனே! வாழ வேறுவகை இல்லாமையால் விரைந்து மணந்து கொள்வாயாக!" என்று சொன்னாள்.*

## 95. மார்பை மகிழ்ந்து அளிப்பாள்

இலங்கு வளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி,
முகம் புதை கதுப்பினள், இறைஞ்சி நின்றோளே –
புலம்பு கொள் மாலை மறைய –
நலம் கேழ் ஆக நல்குவள் எனக்கே. – *ஐங் 197*

*தலைவன், "விளங்கும் வளைகள் ஒலிக்க, நண்டைக் காலால் அலைத்து, முகத்தை மறைக்கும் கூந்தலையுடைய வளாய்த் தலை குனிந்து நின்றவள் தனிமை கொள்ளும் மாலைப் பொழுது மறைதலும், நன்மை பொருந்திய தன் மார்பை எனக்கு அளிப்பவள்" என்று மகிழ்ந்து சொன்னான்.*

## 96. தலைவனைக் காண்போம் வருக

வளை அணி முன் கை வால் எயிற்று அமர் நகை
இளையர் ஆடும் தளை அவிழ் கானல்,
குறுந் துறை வினவி நின்ற
நெடுந் தோள் அண்ணற் கண்டிகும், யாமே. – *ஐங் 198*

*தோழி தலைவியை நோக்கி, "வளையணிந்த முன் கையையும், வெண்மையான பற்கள் விளங்கும் முறுவலையும் உடைய இளைய மகளிர் ஆடும் முறுக்கவிழும் மலர்களை யுடைய கானலில் குறுந்துறை எங்குள்ளது என வினவி நின்ற பெரிய தோள்களையுடைய தலைவனைக் காண்போம், வருக!" என்று போற்றா ஒழுக்கம் புரிந்து திரும்பிய தலைவனைக் கண்டு கூறினாள்*

## 97. மணல்திடல் ஏறிக் காதலன் வரக் காண்போம்!

**கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்**
**வான்உயர் நெடுமணல் ஏறி ஆனாது**
**காண்கம் வம்மோ – தோழி**
**செறிவளை நெகிழ்த்தோன் எறிகடல் நாடே!** *– ஐங் 199*

*தலைவன் பிரிந்த போது தோழி, "நம் முன்கையில் செறிந்து நின்ற வளைகள் நெகிழ்ந்தோடச் செய்த தலை மகனின் அலை வீசும் கடல் நாட்டைக் கானல் பெருந் துறையில் ஒலிக்கும் அலைகள் வந்து அலைக்கும் வான் உற உயர்ந்த நெடிய மணல் திடர் மேல் ஏறி அவனது வரவைக் காண்போம்!" என்று ஆற்று வித்துச் சொன்னாள்*

## 98. பசலை கேட்டைக் காண்போம்!

**இலங்கு வீங்கு எல்வளை, ஆய்நுதல் கவினப்**
**பொலந்தேர்க் கொண்கன் வந்தனன் இனியே;**
**விலங்கரி நெடுங்கண் ஞெகிழ் மதி**
**நலங்கவர் பசலையை நகுக நாமே.** *– ஐங் 200*

*தோழி, "விளக்கமுற நெகிழ்ந்து விளங்கும் வளையை உடையவளே, நின் ஒளி நுணுகிய நெற்றி அழகு அடையு மாறு பொன்னாலான தேரையுடைய நெய்தல்நிலத் தலைவன் இப்போது தன்னுடன் நின்னை அழைத்துக் கொண்டு போதற்கு வந்திருக்கின்றான். ஆதலால் விலங்குதலையுடைய அரி பரவிய நெடிய கண்கள் உறக்கம் நீங்கித் தெளிவாயாக. அதனால் நம் நலம் கவர்ந்த பசலையின் கேட்டைக் கண்டு நாம் மகிழலாம்" என்று உரைத்தாள்.*

# நெய்தல்

## குறுந்தொகை

### 99. வருந்துகின்ற நெஞ்சே!

நோம், என் நெஞ்சே; நோம், என் நெஞ்சே;
இமை தீய்ப்பன்ன கண்ணீர் தாங்கி,
அமைதற்கு அமைந்த நம் காதலர்
அமைவு இலர் ஆகுதல், நோம், என் நெஞ்சே.

*– காமஞ்சேர்குளத்தார் குறு 4*

*"எனது நெஞ்சம் வருந்தி நிற்கிறது; எனது நெஞ்சம் மிகவும் வருந்துகிறது ஏனெனில் இமைகளைத் தீய்கின்ற வெம்மையை உடைய எனது கண்ணீரைத் துடைத்து அரவணைக்கின்ற தலைவர் இப்பொழுது பிரிந்திருப்பதால், எனது நெஞ்சம் வருந்துகின்றது," என்று தோழியிடம் தலைவி கூறினாள்.*

### 100. காம நோயின் கொடுமை

அதுகொல், தோழி! காம நோயே? –
வதி குருகு உறங்கும் இன் நிழற் புன்னை,
உடை திரைத் திவலை அரும்பும் தீம் நீர்,
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல் இதழ் உண்கண் பாடு ஒல்லாவே.

*– நரிவெரூஉத்தலையார் குறு 5*

*"தோழி! தன்னிடத்தில் தங்கியிருக்கும் குருகுகள் உறங்கு வதற்குக் காரணமாகிய இனிய நிழலையுடைய புன்னை*

மரத்தையும், கரையில் மோதிச் சிதறுகின்ற அலைகளால் வீசப்படும் நீர்த்துளிகளுக்கு இடமான நீர்ப்பரப்பையும் கொண்ட மெல்லிய கடற்கரையும் உடைய தலைவன் பிரிந்தானாக, பல இதழ்களை உடைய தாமரை மலரைப் போன்ற என் கண்கள் உறங்காமல் வருந்துகின்றன காம நோய் என்பது அத்தன்மையதோ?" என்று தலைவி தோழிக்கு உரைத்தாள்

## 101. துயிலாத ஒருத்தி

நள்ளென்றன்றே, யாமம்; சொல் அவிந்து,
இனிது அடங்கினரே, மாக்கள்; முனிவு இன்று,
நனந்தலை உலகமும் துஞ்சும்;
ஓர் யான் மன்ற துஞ்சாதேனே. – *பதுமனார் குறு 6*

"இடை யாமம் செறிந்த இருளை உடையதாக உள்ளது; மக்கள் பேசுதலை ஒழித்து இனிமையாகத் துயில்கின்றனர் அகன்ற இடத்தை உடைய உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் வெறுப்பின்றித் துயிலும்போது யான் ஒருத்தியே துயிலாது தனியளாயினேன்" என்று தலைவி தோழியிடம் இயம்பினாள்

## 102. நீதான் எப்பிறவியிலும்!

அணிற் பல் அன்ன கொங்கு முதிர் முண்டகத்து
மணிக் கேழ் அன்ன மா நீர்ச் சேர்ப்ப!
இம்மை மாறி மறுமை ஆயினும்,
நீ ஆகியர் எம் கணவனை;
யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே.

– *அம்மூவனார் குறு 49*

"அணிலின் பல்லை ஒத்த முள்ளை உடைய தாது முதிர்ந்த தாழைச் செடியையும், நீலமணியின் நிறத்தை ஒத்த கரிய நீரையும் உடைய கற்கரையை உடைய தலைவ, இப் பிறப்பு நீங்கப்பெற்று மறுபிறப்பு உண்டாயினும், என்னுடைய தலைவனாய் நீயே ஆகுக! நின்னுடைய மனத்திற்கு ஒத்த காதலியாக யானே ஆகுகவேன்!" என்றாள் அன்புறவு கொண்ட தலைவி தலைவனிடம்

## 103. எல்லாரும் விரும்புகின்றனர்

கூன் முள் முண்டகக் கூர்ம் பனி மாமலர்
நூல் அறு முத்தின் காலொடு பாறித்
துறைதொறும் பரக்கும் தூ மணற் சேர்ப்பனை
யானும் காதலென்; யாயும் நனி வெய்யள்;
எந்தையும் கொடீஇயர் வேண்டும்;
அம்பல் ஊரும் அவனொடு மொழிமே.

*- குன்றியனார் குறு 51*

*"வளைவான முள்ளையுடைய கழிமுள்ளியினது மிக்க குளிர்ச்சியையுடைய கரிய மலர் நூலற்று உதிர்ந்த முத்து களைப் போலக் காற்றால் சிதறி, நீர்த்துறைகள் உள்ள இடங்கள் தோறும் பரவுவதற்கு இடமாகிய தூய மணலை உடைய கடற்கரைக்குத் தலைவனே! யானும் விரும்புதலை உடையேன்; நம் தாயும் அவன் பால் மிக்க விருப்பத்தைக் கொண்டுள்ளாள்; நம் தந்தையும் அவனுக்கே நின்னை மணம் செய்து கொடுக்க விரும்புவான்; ஊரிலுள்ளோரும் அவனோடு நின்னைச் சேர்த்தே அலர் தூற்றுவர்," என்று தோழி தலைமகளுக்குக் கூறினாள்*

## 104. துன்பம் மிகுந்த உறையுள்

மாக் கழி மணிப் பூக் கூம்பத், தூத் திரைப்
பொங்கு பிதிர்த் துவலையொடு மங்ககுல் தைஇ,
கையற வந்த தைவரல் ஊதையொடு
இன்னா உறையுட்டு ஆகும்
சில் நாட்டு அம்ம இச் சிறு நல் ஊரே.

*- நெய்தற் கார்க்கியர் குறு 55*

*"இந்தச் சிறிய நல்ல ஊரானது, பெரிய கழியினிடத்தில் உள்ள நீலமணி போன்ற பூக்கள் குவியும்படி, தூய அலையிடத்துப் பொங்கிய பிசிராகிய துளியோடு முகிலைப் பொருந்திச் செயலறும்படி வந்த தடவுதலையுடைய வாடைக் காற்றோடு துன்பத்தைத் தரும் தங்குமிடத்தைப் பெற்றதாகின்ற சில நாள்களைக் கொண்டது" என்று தோழி தலைவனுக்கு உணர்த்தினாள்*

## 105. எம் உயிர் நீங்குவதாக

பூ இடைப்படினும் யாண்டு கழிந்தன்ன
நீர் உறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவு அரிது ஆகிய தண்டாக் காமமொடு,
உடன் உயிர் போகுகதில்ல – கடன் அறிந்து,
இருவேம் ஆகிய உலகத்து,
ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கே.

*– சிறைக்குடி ஆந்தையார் குறு 57*

*"தோழி! செய்யத் தகுவதாகிய முறையை அறிந்து, பிறவி தோறும் தலைவனும் தலைவியுமாக உடலால் இரு வேறாக இருந்து வந்த இவ் உலகத்தில், இப்போதைய பிரிவினால் ஒருவராகிய துன்பத்தினின்றும் யாம் நீங்கித் தப்புவதற்கு, பூவானது தம்மிடைப்பட்டாலும் அச் சிறு நொடிப் பொழுதே பல ஆண்டுகள் கடந்தாற் போன்ற துன்பத்தை உண்டாக்கும் இயல்பை உடைய நீரின்கண் வாழும் மகன்றிற் பறவைகளின் சேர்க்கையைப் போல, பிரிதற்கு அருமையான காமத்தோடு எம் உயிர் போவதாக," என்றாள் தலைவி காப்புமிகுதிக் கண் தோழியிடம்.*

## 106. ஆற்ற இயலாத நோய்

ஞாயிறு பட்ட அகல் வாய் வானத்து –
அளியதாமே – கொடுஞ் சிறைப் பறவை,
இறை உற ஓங்கிய நெறி அயல் மராஅத்த
பிள்ளை உள்வாய்ச் செரீஇய
இரை கொண்டமையின், விரையுமால் செலவே.

*– தாமோதரன் குறு 92*

*"கதிரவன் மறையவும், அகன்ற இடம் பொருந்திய வானத்தில், வளைந்த சிறகுகளை உடைய இரக்கத்திற்குரிய பறவைகள் தாம் தங்கும்படி உயர்ந்த வழியின் அயலில் வளர்ந்த கடம்ப மரத்தில் உள்ள கூட்டில் இருக்கும் குஞ்சுகளின் வாயின் உள்ளே செருகும் பொருட்டு, இரையைத் தம் அலகுகளால் எடுத்துக் கொண்டு விரைந்து செல்லும்" என்று தலைவி மாலைப் பொழுது வந்து விட்டதால் இனிக் காம நோயை ஆற்ற இயலாது என்று உணர்த்தினாள்*

## 107. அம்பலத்திற்கு வந்து விட்டது

யானே ஈண்டையேனே; என் நலனே
ஆனா நோயொடு கானல் அஃதே.
துறைவன் தம் ஊரானே;
மறை அலர் ஆகி மன்றத்து அஃதே — *வெண்பூதி குறு 97*

*"தோழி! யான் இவ் இடத்தில் உள்ளேன் என் பெண்மை நலனோ என்னிடத்திலிருந்து நீங்கி வருத்தத்தோடு கடற் கரைச் சோலையிடத்து உள்ளது. தலைவனோ தனது ஊரினிடத்து உள்ளான், எம்மிடையே உள்ள மறைமுக நட்பானது பலரறியும் பழிமொழியாகி ஊர்பொது விடத் திற்கு வந்தாயிற்று" எனறாள் தோழியிடம் தலைவி*

## 108. அறவோர் அல்லர் அவர்

உள்ளின், உள்ளம் வேமே; உள்ளாது
இருப்பின், எம் அளவைத்து அன்றே; வருத்தி
வான் தோய்வற்றே, காமம்;
சான்றோர் அல்லர், யாம் மரீஇயோரே.
— *ஔவையார் குறு 102*

*"தோழி! தலைவரை நினைத்தால் அவர் பிரிவை எண்ணி எம் உள்ளம் வெந்து நிற்கும்; நினையாமல் இருப்போ மாயின் அவ்வாறு இருத்தல் எம் ஆற்றலுக்கு உட்பட்ட தன்று, காம நோயின் வருத்தமானது வானத்தைத் தொடும் அளவினதாக உள்ளது எம்மால் மருவப்பட்ட தலைவரோ சால்புடையவரல்லர்" என்று தலைவி தோழிக்கு வருந்தி ஆற்றாது உரைத்தாள்.*

## 109. நான் இறப்பேன் போலும்

கடும் புனல் தொடுத்த நடுங்கு அஞர் அள்ளல்,
கவிர் இதழ் அன்ன தூவிச் செவ் வாய்,
இரை தேர் நாரைக்கு எவ்வம் ஆகத்
தூஉம் துவலைத் துயர் கூர் வாடையும்
வாரார் போல்வர், நம் காதலர்;
வாழேன் போல்வல் — தோழி — யானே.
— *வாயிலான் தேவன் குறு 103*

"தோழி, மிகுந்த நீரினால் தொகுக்கப்பட்ட நடுங்குவ தற்குக் காரணமாகிய துன்பத்தைத் தரும் சேற்றினிடத்து, மீனாகிய இரையைத் தேடித் திரியும் முள்முருங்கை மலரின் இதழைப் போன்ற மெல்லிய இறகினையும், சிவந்த அழகை யும் உடைய நாரைக்குத் துன்பம் உண்டாகும்படி, தூவுகின்ற நீர்த் துளிகளை யுடைய, பிரிந்தார் துயர் கூர்தற்குக் காரண மாகிய வாடைக் காற்று வீசும் கூதிர்க் காலத்திலும் பிரிந்து சென்ற நம்முடைய தலைவர் வாரார் அல்லர், யானும் வாழ்வேன் அல்லேன்," என்று தலைவன் குறித்த காலத்து வராமையால் தலைவி வருந்தி கூறினாள்

## 110. நெற்றி அழகு மாறியதேன்?

**முட் கால் இறவின் முடங்கு புறப் பெருங் கிளை**
**புணரி இகுதிரை தரூஉம் துறைவன்**
**புணரிய இருந்த ஞான்றும்,**
**இன்னது மன்னோ, நல் நுதற் கவினே!**

*– நம்பி குட்டுவன் குறு 109*

வளைந்த கால்களையும் சுருண்ட முதுகையும் உடைய இறால் மீனின் பெரிய இனத்தைக், கடலில் தவழும் அலை யானது கொண்டு வந்து தருதற்கு இடமாகிய துறையை உடைய தலைவன், புணரும் பொருட்டாகக் குறியிடம் வந்த பொழுதும் நினது நல்ல நெற்றியின் அழகு பிறர் அலர் கூறும் தன்மையால் இத் தன்மையது ஆயிற்று இஃது இரங்குதற்குரியது," என்று தலைவன் கேட்கும்படி தோழி ஊரலரைத் தலைவியிடம் கூறினாள்.

## 111. நாரை என்மகள் நெற்றியை மிதிக்கும்

**நெய்தல் பரப்பில் பாவை கியப்பி,**
**நின்குறி வந்தனென், இயல் தேர்க் கொண்க! –**
**செல்கம்; செல வியங்கொண்மோ – அல்கலும்,**
**ஆரல் அருந்த வயிற்ற**
**நாரை மிதிக்கும், என் மகள் நுதலே.** *– பொன்னாகன் குறு 114*

"இயற்றப்பட்ட தேரையுடைய தலைவ! நெய்தல் நிலத்தில் எனது பாவையைக் கிடத்திவிட்டு நீ இருக்கும் இடத்திற்கு

வந்தேன். இரவு வருதலும் ஆரல் மீனை அருந்திய வயிற்றை உடைய நாரைகள் என் மகளாகிய அப் பாவையின் நெற்றியை மிதிக்கும். யாம் போகின்றோம். தலைவியையும் அவ் இடத்திற்குப் போகும்படி நீயே பணிவிப்பாயாக!" என்று தோழி தலைவியிடம் தலைவன் செல்லும்படிக் குறிப்பால் உணர்த்தினாள்

## 112. வளையலை அணிந்து விழிகளை மறைப்போம்

**மாரி ஆம்பல் அன்ன கொக்கின்**
**பார்வல் அஞ்சிய பருவரல் ஈர் ஞெண்டு**
**கண்டல் வேர் அளைச் செலீஇயர், அண்டர்**
**கயிறு அரி எருத்தின், கதழும் துறைவன்**
**வாராது அமையினும் அமைக!**
**சிறியவும் உள ஈண்டு, விலைஞர் கைவளையே.**

*— குன்றியனார் குறு 117*

"தோழி! மாரிக் காலத்து ஆம்பல் மலரைப் போன்ற தோற்றத்தையுடைய கொக்கினது பார்வையைக் கண்டு அஞ்சிய ஈரமான உடல் உடைய நண்டு, தாழை வேரினிடையே உள்ள வளைக்குள் செல்லும் பொருட்டு, இடையரால் கட்டப் பெற்ற கயிற்றை அறுத்துச் செல்லும் எருதைப் போல விரைந்து செல்லுதற்கு இடமாகிய கடல்துறையை உடைய தலைவன் இங்கு வாராது போயினும் போகுக அவன் வாராமையினால் நின் உடல் மெலிவுற்றுக் கைகளில் உள்ள வளைகளை இழப்பினும் மேனி மெலிவு புலப்படாமல் செறிந்து நிற்பதற்குரிய கைவளைகளும் வளையல் விற்பவரிடம் உள்ளன" என்று தலைவிக்கு கூறினாள்.

## 113. அன்பில்லா மாலைக்காலம்

**புள்ளும் மாவும் புலம்பொடு வதிய**
**நள்ளென வந்த நார் இல் மாலைப்**
**பலர் புகு வாயில் அடைப்பக் கடவுநர்**
**வருவீர் உளீரோ? எனவும்**
**வாரார் தோழி! நம் காதலோரோ.** *— நன்னாகையார் குறு 118*

"தோழி! பறவைகளும் விலங்குகளும் தனிமைத் துயருடன் இருக்க, 'நள்' என்றும் ஓசைப்பட வந்த அன்பில்லாத மாலைக் காலத்தில் பலரும் புகுவதற்குரிய வீட்டுக்கடை வாயிலை அடைக்க எண்ணி வினவுவார் 'உள்ளே வருவீர் இருக்கின்றீரோ' என்று கேட்கவும் நம் தலைவர் வாராரா யினர்" என்று தலைவி கூறினாள்

## 114. மாலை மட்டுமா துன்புறுத்தும்?

பைங் காற் கொக்கின் புன் புறத்தன்ன
குண்டு நீர் ஆம்பலும் கூம்பின; இனியே
வந்தன்று, வாழியோ, மாலை!
ஒரு தான் அன்றே; கங்குலும் உடைத்தே!

*– ஓரம்போகியார் குறு 122*

"பசிய கால்களை உடைய கொக்கினது புல்லிய முதுகினைப் போன்ற ஆழமான நீர்நிலையில் வளர்ந்த ஆம்பலின் மலர்களும் குவிந்தன; இப்பொழுது மாலைக் காலமும் வந்தது அக் காலம் வாழ்வதாக! இங்ஙனம் வந்தது மாலை மட்டுமன்று அதன் பின்வரும் யாமத்தையும் உடையது; இனி யான் என் செய்வேன்!" என்று தலைவனின் பிரிவை நினைத்து தலைவி வருந்தினாள்.

## 115. இன்னும் வரவில்லையே!

இருள் திணிந்தன்ன ஈர்ந் தண் கொழு நிழல்,
நிலவுக் குவித்தன்ன வெண்மணல் ஒரு சிறை,
கருங்கோட்டுப் புன்னைப் பூம் பொழில் புலம்ப,
இன்னும் வாரார்; வரூஉம்,
பல் மீன் வேட்டத்து என்னையர் திமிலே.

*– ஐயூர் முடவன் குறு 123*

"தோழியே! நிலவைத் தொகுத்தாற் போன்ற வெள்ளிய மணற்பரப்பின் ஒரு பக்கத்தில் இருள் செறிந்தாற் போன்ற ஈரமும் குளிர்ச்சியும் நிழலும் உடைய கரிய கிளைகளைக் கொண்ட புன்னை மரங்களடர்ந்த பூஞ்சோலையானது தனிமைப்பட்டு இருப்ப, தலைவர் இன்னும் வந்தாரிலர். பலவகை மீன்களை வேட்டையாடுதலையுடைய தமையன்

மார் ஏறிச் சென்ற மீன் படகுகள் மீண்டு வரும் நேரமும் ஆகியதே” என்று தலைவி தலைவனுக்கு ஏங்கி வருந்தி உரைத்தாள்.

## 116. தனிமை நீடித்தால் இறந்துவிடுவேன்

இலங்கு வளை நெகிழச் சாஅய், யானே,
உளேனே வாழி – தோழி, – சாரல்
தழை அணி அல்குல் மகளிருள்ளும்
விழவு மேம்பட்ட என் நலனே, பழ விறல்
பறை வலம் தப்பிய பைதல் நாரை
திரை தோய் வாங்கு சினை இருக்கும்
தண்ணம் துறைவனோடு, கண்மாறின்றே.

*– அம்மூவன் குறு 125*

“தோழியே! மலைச் சாரலில் விளைந்த தழையினால் ஆகிய உடையை அணியும் அல்குலையுடைய மகளிர் யாவரினும், விழாவைப் போலச் சிறப்புடன் முன்பு விளங்கிய என் பெண்மை நலமானது பழைய ஆற்றலையுடைய சிறகின் வன்மை தவறியதனாலே துன்பம் கொண்ட நாரையானது, அலைகளைத் தொட்டு வளைந்து சாய்ந்திருக்கின்ற மரக் கிளையில் பறத்தற்கு இயலாது தங்கியிருக்கும் குளிர்ந்த கடல் துறைக்குரிய என் தலைவனோடு என்னை விட்டுப் பிரிந்து சென்று இடம் பெயர்ந்தது. அந் நிலையில், யான் மட்டும் விளங்குகின்ற வளைகள் நெகிழும்படி மெலிந்து இன்னும் உயிருடன் இருக்கின்றேனே” என்று மணம் முடியாமையால் வாடி வருந்தினாள் தலைவி.

## 117. நெஞ்சே நீ தீயூழ் உடையை

குண கடல் திரையது பறை தபு நாரை
திண் தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை
அயிரை ஆர் இரைக்கு அணவந்தாங்குச்
சேயள் அரியோட் படர்தி;
நோயை – நெஞ்சே! – நோய்ப் பாலோயே.

*– பரணர் குறு 128*

*"நெஞ்சமே! கீழ்க்கடலின் அலைக்கு அருகிலுள்ளதாகிய முதுமையால் சிறகுகள் நீங்கப் பெற்ற நாரை திண்மையாகிய தேரையுடைய சேரனது மேல் கடற்கரையில் அமைந்த 'தொண்டி' என்ற பட்டினத்தில் உள்ள அயிரை மீனாகிய பெறுவதற்கரிய அரிய உணவைப் பெறும் பொருட்டுத் தலையை மேலே தூக்கி அண்ணாந்து பார்த்தாற் போல நெடுந்தூரத்தில் உள்ளவளும், பெறுதற்கு அரியவளும் ஆகிய தலைவியை நினைத்தாய்; அதனால் துன்பத்திற்குக் காரண மான ஊழ் வினையை உடைய வருத்தத்தை அடைந்தாய்," என்றான் தலைவன் தன் நெஞ்சிற்கு*

## 118. என்னைத் தேற்றாத ஊர்

**உறை பதி அன்று, இத் துறை கெழு சிறுகுடி -**
**கானல்அம் சேர்ப்பன் கொடுமை எற்றி**
**ஆனாத் துயரமொடு வருந்தி, பானாள்,**
**துஞ்சாது உறைநரொடு உசாவாத்**
**துயில் கண் மாக்களொடு நெட்டிரா உடைத்தே.**

*- கொல்லன் அழிசி குறு 145*

*"கடல்துறை பொருந்திய இந்தச் சிற்றூர் நாம் தங்கி யிருப்பதற்குத் தகுதியுடைய ஊரன்று, ஏனெனில் கடற்கரைச் சோலையை உடைய தலைவனது கொடுமையை நினைத்து மிகுகின்ற துன்பத்தோடு வருந்தியவராய், நடு யாமத்திலும் தூங்காது தங்குவாரை ஏனென்று வினவாது துணிந்து துயில் கின்ற கண்களையுடைய அறிவற்ற மக்களோடு நெடிய இராப் பொழுதையும் உடையது" என்று வரைவிடை ஆற்றாது வருந்தி சொன்னாள் தலைவி தோழியிடம்.*

## 119. வருத்தமுற்றது யாரால்

**யார் அணங்குற்றனை - கடலே! பூழியர்**
**சிறு தலை வெள்ளைத் தோடு பரந்தன்ன**
**மீன் ஆர் குருகின் கானல்அம் பெருந்துறை,**
**வெள் வீத் தாழை திரை அலை**
**நள்ளென கங்குலும் கேட்கும், நின் குரலே?**

*- அம்மூவன் குறு 163*

"கடலே! பூழி நாட்டாரது சிறிய தலையை உடைய வெள்ளாட்டின் தொகுதி பரவினாற் போன்ற மீனை உண்ணும் கொக்குகளை உடைய சோலை சூழ்ந்த பெரிய துறையினிடத்து, வெள்ளிய பூவை உடைய தாழைகளை அலைகள் அலைகின்ற நள் இரவிலும் நினது ஆரவாரம் கேட்கும். நீ யாரால் வருத்தமடைந்தாய்?" என்று தலைவனைப் பிரிந்த தலைவி வருத்தமுடன் வினாவினாள்.

## 120. தனிமை வருத்தம் தருகிறது

தண் கடற் படு திரை பெயர்த்தலின், வெண் பறை
நாரை நிரை பெயர்ந்து அயிரை ஆரும்,
ஊரோ நன்றுமன், மாந்தை
ஒரு தனி வைகின், புலம்பு ஆகின்றே.

*– கூடலூர் கிழார் குறு 166*

"குளிர்ந்த கடலிடத்து உண்டாகும் அலைகள் மீன்களைப் பெயரச் செய்வதனால் வெள்ளிய சிறகுகளை உடைய நாரை வரிசையின் நீங்கி அயிரை மீனை உண்ணுதற்கு இடமாகிய மாந்தை என்னும் ஊர்த் தலைவனோடு இருக்குங்கால் மிக நன்மையுடையது; தலைவனைப் பிரிந்து தனியே தங்குவோமாயின் வருத்தத்தைத் தருவதற்குக் காரணமாகின்றது." என்று காப்பு மிகுதிக் கண் தோழி தலைவியிடம் கூறினாள்.

## 121. பெரிதும் வருந்துகிறது மனம்

தாஅவல் அஞ்சிறை நொப்பறை வாவல்
பழுமரம் படரும் பையுள் மாலை,
எமியம் ஆக ஈங்குத் துறந்தோர்
தமியர் ஆக இனியர் கொல்லோ?
ஏழ் ஊர்ப் பொது வினைக்கு ஒர் ஊர் யாத்த
உலை வாங்கு மிதி தோல் போலத்
தலைவரம்பு அறியாது வருந்தும், என் நெஞ்சே.

*– கச்சிப்பேட்டு நன்னாகையார் குறு 172*

தோழியே, வலிமை உடைய அழகிய சிறகையும் மென்மையாகப் பறத்தலையும் உடைய வெளவால்கள் பழுத்த மரங்

களை நினைத்துச் செல்லும், தனியாய் இருப்பவருக்குத் துன்பத்தைச் செய்யும் மாலைக்காலத்தே, யாம் தமியேம் ஆகும்படியாக ஈங்கு எமை வைத்துப் பிரிந்த தலைவர், தாம் தனிமையாக உடையவராதலால் இனிமை கொண்டவராக இருப்பரோ? என் நெஞ்சு ஏழு ஊரிலுள்ளோர்க்குப் பொது வாகிய தொழிலின் பொருட்டு ஓர் ஊரின்கண் அமைந்த உலையில் செறித்த துருத்தியைப் போல எல்லையில்லாத வருத்தத்தை அடையும்" என்று தோழியிடம் தலைவி துடித்துக் கூறினாள்.

## 122. வருத்தப் போவதில்லை நான்

பருவத் தேன் நசைஇப் பல்பறைத் தொழுதி,
உரவுத் திரை பொருத திணிமணல் அடைகரை,
நனைந்த புன்னை மாச் சினை தொகூஉம்
மலர்ந்த பூவின் மா நீர்ச் சேர்ப்பற்கு
இரங்கேன் – தோழி! 'ஈங்கு என்கொல் – என்று',
பிறர்பிறர் அறியக் கூறல்
அமைந்தாங்கு அமைக; அம்பல் அஃது எவனோ?

– *உலோச்சன் குறு 175*

*"தோழி, செவ்வியை உடைய தேனை விரும்பிப் பறத் தலைச் சேர்ந்த பல வண்டுக் கூட்டங்கள், அலைகள் மோதிய செறிந்த மணல் கரையிடத்துள்ள அரும்புகள் நிறைந்த புன்னை மரத்தினது பெரிய கிளையினிடத்து வந்து கூடுகின்ற மலர்ந்த மலர்களையும் கரிய நீரையும் உடைய கடற்கரைத் தலைவன் பொருட்டு வருந்தினேன் அல்லேன்; இவ் இடத்தில் இவள்தான் ஏன் இங்ஙனம் ஆயினள் என்று பிறர் பிறர் அறியும்படி கூறுதல் அவர்களுடைய மனம் போனபடி அமைக; அவர்கள் கூறும் அம்பல் எனக்கு என்ன துன்பத்தைச் செய்து விடும்?" என்று தலைவி கூறினாள்.*

## 123. நீ வருந்தாதே

கடல் பாடு அவிந்து, கானல் மயங்கி,
துறை நீர் இருங் கழி புல்லென்றன்றே;
மன்றலம் பெண்ணை மடல் சேர் வாழ்க்கை

அன்றிலும் பையென நரலும்; இன்று அவர்
வருவார்கொல் வாழி – தோழி! – நாம் நகப்
புலப்பினும் பிரிவு ஆங்கு அஞ்சித்
தணப்பு அருங் காமம் தண்டியோரே?

*– உலோச்சன் குறு 177*

*"தோழியே! கடலானது ஒலியடங்க, கடற்கரைச் சோலை இருளால் மயக்கத்தை உடையதாக, துறையையும் நீரையும் உடைய கரிய உப்பங்கழி பூக்கள் குவிந்ததனால் பொலிவிழந்து மன்றத்தின் கண் உள்ள அழகிய பனைமரத்தினது மடலின் கண்ணே பொருந்தி வாழும் வாழ்க்கையை உடைய அன்றிற் பறவையும் மெல்லக் கூவும்; முன்பு நம், தம்மைப் புலந்து கூறினாலும், தாம் அவ் இடத்து அஞ்சி நீங்குதற்கரிய காம இன்பத்தைப் பெற்றவராகிய தலைவர் இன்று வருவார்" என்று தோழி தலைவிக்கு வருந்தாதிருக்கக் கூறினாள்.*

## 124. விழி வலையில் வீழ்வர்

அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை;
குறுகல் ஓம்புமின் சிறுகுடிச் செலவே, –
இதற்கு இது மாண்டது என்னாது, அதற்பட்டு,
ஆண்டு ஒழிந்தன்றே, மாண்தகை நெஞ்சம் –
மயிற்கண் அன்ன மாண் முடிப் பாவை
நுண் வலைப் பரதவர் மட மகள்
கண் வலைப் படூஉம் கானலோனே.

*– ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன் குறுந் 184*

*"மயிற்பீலியின் கண்ணை ஒத்த மாட்சிமைப்பட்ட கூந்தலைப் பெற்ற பாவை போல்பவளாகிய, நுண்ணிய வளையையுடைய நெய்தல் நில மாக்களாகிய பரதவரின் மடப்பம் பொருந்திய மகளது, கண் வலையின் கண் ஆங்கு செல்வார் அகப்படுகின்ற கடற்கரைச் சோலையினிடத்து, எனது மாட்சிமைப்பட்ட தகுதியை உடைய நெஞ்சம், 'இப் பொருளுக்கு இது சிறந்தது' என்று ஆய்ந்து தெளியாமல், அக் கண் வலையினிடத்துச் சிக்கி அக் கானலிடத்துத் தங்கியது. அறிவால் சிறந்த சான்றோரிடம் தாம் கண்டறிந்த ஒன்றை மறைத்துப் பொய்கூறும் இயல்பு இல்லை ஆதலின்*

*யாம் கண்டறிந்த இதனை உண்மையாகக் கொள்க. ஆதலின் நீயும் அச் சிற்றூரினிடத்துச் செல்லுதலைத் தவிர்க," என்று தன்னை இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவன் தெரிவித்தான்*

## 125. என் நிலையை உணர்ந்திலர்

**சுடர் சினம் தணிந்து குன்றம் சேரப்**
**படர் சுமந்து எழுதரு பையுள் மாலை,**
**யாண்டு உளர்கொல்லோ, வேண்டுவினை முடிநர்?**
**'இன்னாது, இரங்கும்' என்னார் அன்னோ –**
**தைவரல் அசைவளி மெய் பாய்ந்து ஊர்தரச்**
**செய்வுறு பாவை அன்ன என்**
**மெய் பிறிதாகுதல் அறியாதோரே.** – *தேரதரன் குறு 195*

*"தோழியே! தடவுதல் போல் அசைந்து வரும் இனிய காற்று உடம்பினிடத்தே தீண்டிப் பரவ, அதனால் அலங் கரிக்கப் பெற்ற பாவையைப் போன்ற என் மேனி வேறுபாடு உடையதாதலை அறியாதவராகிய தலைவர், தாம் விரும்பிச் சென்ற கருமத்தை முடித்துக் கொள்வாராய்க் கதிரவன் வெம்மை நீங்கி மேற்கு மலையை அடைய நினைவு கூறும் துன்பத்தை மேற்கொண்டு, மாலைக் காலத்துத் துன்பத்தை யும் தாங்கி எங்கு இருக்கின்றனரோ? அந்தோ! துன்பம் தருகின்ற இம் மாலைக் காலத்தில் தலைவி வருந்துவாள் என்று நினையாதவர் ஆயினர்" என்று தலைவி தோழியிடம் வருந்திக் கூறினாள்.*

## 126. கொல்ல வரும் கூதிர்பருவம்

**யாது செய்வாம்கொல் – தோழி! – நோதக**
**நீர் எதிர் கருவிய கார் எதிர் கிளை மழை**
**ஊதைஅம் குளிரொடு பேதுற்று மயங்கிய**
**கூதிர் உருவின் கூற்றம்**
**காதலர்ப் பிரிந்த எற் குறித்து வருமே?**
– *கச்சிப்பேட்டு நன்னாகையார் குறு 197*

*"தோழி! நான் நோகும்படியாக, நீரை ஏற்றுக் கொண்டுள்ள மின் இடி முதலிய தொகுதிகளை, உடைய*

*கார் காலத்தை ஏற்றுக் கொண்டு கிளைத்த மழையையும் ஊதைக் காற்றினது குளிர்ச்சியோடு மிக மயங்கிக் கலந்த கூதிர் காலமாகிய உருவத்தையும் உடைய கூற்றம், தலைவரைப் பிரிந்திருக்கும் என்னைக் கொல்லுதல் குறித்து வந்தது யாது செய்வோம்?" என வருந்தினாள் தலைவி.*

## 127. பசலை படர்ந்தது

மின்னுச் செய் கருவிய பெயல் மழை தூங்க
விசும்பு ஆடு அன்னம் பறை நிவந்தாங்கு,
பொலம்படைப் பொலிந்த வெண் தேர் ஏறிக்,
கலங்கு கடல் துவலை ஆழி நனைப்ப,
இனிச் சென்றனனே, இடு மணற் சேர்ப்பன்;
யாங்கு அறிந்தன்றுகொல் – தோழி! – என்
தேம் கமழ் திரு நுதல் ஊர்தரும் பசப்பே?

*– உலோச்சன் குறு 205*

*"தோழியே! அலைகள் கொண்டு வந்து இட்ட மணலை உடைய கடற்கரைத் தலைவன் மின்னலைச் செய்கின்ற தொகுதியையுடைய பெய்தலை உடைய முகில் பெய்யத் தொடங்க வானத்தில் அசைந்து செல்லும் அன்னப்பறவை - பறத்தலில் உயர்ந்து சென்றது போலப் பொற்படைகளாலே பொலிவுபெற்ற வெள்ளிய தேரின்கண் ஏறி கலங்கிய கடலில் உள்ள நீர்த்துளிகள் தேர் சகடத்தை நனைக்கும்படியாக இப்பொழுது பிரிந்து சென்றான். பசலையானது இதனை எப்படி அறிந்தது? எனது மணம் கமழுகின்ற அழகிய நெற்றி யிடத்து அது உடன் படர்ந்துள்ளதே!" என வருந்தினாள் தோழியிடம் தலைவி*

## 128. தேர் வந்து வீணே சென்றது

கொண்கன் ஊர்ந்த கொடுஞ்சி நெடுந் தேர்
தெண் கடல் அடைகரைத் தெளிர்மணி ஒலிப்பக்,
காண வந்து, நாணப் பெயரும் ;
அளிதோ தானே, காமம்;
விளிவதுமன்று; நோகோ யானே.

*– நெய்தற் கார்க்கியன் குறு 212*

தோழியே நம் "தலைவன் ஏறிச் சென்ற கொடுஞ்சியை உடைய உயர்ந்த தேரானது, தெள்ளிய நீரை உடைய கடற் கரையினிடத்துத் தெளிந்த ஓசையுடைய மணி ஒலிக்கும் படி, நாம் காணும்படியாக வந்து, பின்பு நாம் நாணும்படி மீண்டு செல்லும் காமம் இரங்கத்தக்கது; அது உறுதியாக அழிதற் குரியது; அதனால் யான் வருந்துகின்றேன்" என்று குறை நயப்பத் தோழி கூறினாள்.

## 129. இதுவே தக்க நேரம்

பயப்பு என் மேனியதுவே; நயப்பு அவர்
நார் இல் நெஞ்சத்து ஆர் இடையதுவே;
செறிவும் சேண் இகந்தன்றே; அறிவே,
'ஆங்கண் செல்கம் எழுக' என, ஈங்கே,
வல்லா கூறியிருக்கும்; அள் இலைத்
தடவு நிலைத் தாழைச் சேர்ப்பற்கு
இடம்மன் – தோழி! – 'எந் நீரிரோ' எனினே.

*– வெள்ளூர்கிழார் மகனார் வெண்பூதியார் குறு 219*

"தோழி! பசலையானது என் மேனியிடத்து உள்ளது என் காதலோ அவன் அன்பற்ற நெஞ்சத்திலேயே தங்கியுள்ளது எனது அடக்கமும் என்னை விட்டு நெடுந்தூரத்திற்கு நீங்கிச் சென்றது எனது அறிவோ தலைவர் உள்ள இடத்திற்கே செல்லத் தூண்டுகிறது என்று நம்மால் செய்ய இயலாத ஒன்றைச் சொல்லி இங்கே தங்கியிருக்கும் முட்கள் பொருந்திய இலைகளையும் பருத்த அடிமரத்தையும் கொண்ட தாழை மரங்களை உடைய கடற்கரைத் தலைவன், நீர் எந் நிலையில் உள்ளீரோ எனக் கேட்டு என் குறை தீர்ப் பாராயின் அதுவே என் குறை சொல்வதற்குத் தக்க செவ்வி யாகும்" என்றாள் சிறைப்புறத் தலைவி.

## 130. நலன்களை எல்லாம் இழந்தேன்

பூவொடு புரையும் கண்ணும், வேய் என
விறல் வனப்பு எய்திய தோளும், பிறை என
மதி மயக்குறூஉம் நுதலும், நன்றும்
நல்லமன்; வாழி – தோழி! – அல்கலும்

தயங்கு திரை பொருத தாழை வெண் பூக்
குருகு என மலரும் பெருந் துறை
விரிநீர்ச் சேர்ப்பனொடு நகாஅ ஊங்கே.
*– மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதன் குறு 226*

"தோழியே, இரவுதோறும் விளங்கிய அலைகளால் மோதப் பட்ட தாழையினது வெள்ளிய பூவானது, நாரையைப் போல் மலரச் செய்தற்கு இடமாகிய பெரிய துறைகளைக் கொண்ட அகன்ற நீர்ப் பரப்பை உடைய தலைவனாகிய சேர்ப்பனோடு அளவளாவி நகுவதற்கு முன்பு, தாமரை மலரை ஒத்த கண்களும், மூங்கிலைப் போல வெற்றியை உடைய அழகு பெற்ற தோள்களும், பிறை என்று கருதும்படி அறிவை மயங்கச் செய்யும் நெற்றியும் மிகவும் நல்லனவாய் இருந்தன அந் நிலை இப்பொழுது இல்லாதாயிற்றே," என்று தோழியை நோக்கித் தலைவி வருந்திக் கூறினாள்.

## 131. அவன் நேற்றும் வந்து திரும்பினான்

பூண் வனைந்தன்ன பொலஞ் சூட்டு நேமி
வாள் முகம் துமிப்ப வள் இதழ் குறைந்த
கூழை நெய்தலும் உடைத்து, இவண் –
தேரோன் போகிய கானலானே. *– ஓதஞானியார் குறு 227*

"தேரில் வந்த தலைவன் மீண்டு சென்ற கடற்கரைச் சோலையானது, பூணைப் பதித்தாற் போன்ற பொன்னாலாகிய விளிம்பை உடைய சகடத்தின் வாளைப் போன்ற வாய்ப்பகுதி துண்டித்ததலினால், வளப்பம் பொருந்திய இதழ்கள் ஒடிக்கப் பட்ட குறையுடைய நெய்தற் பூக்களை உடையது" என்று தலைவன் மறைவில் இருக்க, தோழி தலைவிக்கு உணர்த்தினாள்

## 132. எவ்விதம் ஆற்றியிருந்தாள்

வீழ் தாழ் தாழை ஊழுறு கொழு முகை,
குருகு உளர் இறகின், விரிபு தோடு அவிழும்
கானல் நண்ணிய சிறுகுடி முன்றில்,
திரை வந்து பெயரும் என்ப – நத் துறந்து

நெடுஞ் சேண் நாட்டார் ஆயினும்,
நெஞ்சிற்கு அணியரோ, தண் கடல் நாட்டே.

*– செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன் குறு 228*

"தோழி! நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் சேய்மையில் உள்ள நாட்டில் இருப்பராயினும், அவர் நெஞ்சுக்கு அணிய ராய் உள்ளார். அவருடைய தண்ணிய கடலை உடைய நாட்டினிடத்து விழுதுகள் தாழ்ந்து காணப்படும். தாழை யினது முதிர்ந்த கொழுவிய அரும்பு, நாரைகள் கோதுகின்ற சிறகினைப் போல இதழ்கள் மலர்கின்ற கடற்சோலைகள் பொருந்திய சிற்றூரின் முன்னிடத்தில் அலைகள் வந்து மீண்டு செல்லும்" என்றாள் தலைவி.

## 133. வந்தவன் வராது இருந்தான்

அம்ம வாழி, தோழி! கொண்கன் –
தான் அது துணிகுவன் அல்லன்; யான் என்
பேதைமையால் பெருந் தகை கெழுமி,
நோதகச் செய்தது ஒன்று உடையேன் கொல்லோ? –
வயச் சுறா வழங்கு நீர் அத்தம்
தவச் சில் நாளினன் வரவு அறியானே.

*– அறிவுடை நம்பி குறு 230*

"தோழியே, ஒன்று கூறுவேன் கேட்பாயாக: தலைவன் வலிமை கொண்ட சுறா மீன்கள் உலாவுகின்ற நீரையுடைய வழியிலே, சில நாள்களாக முன்போல வந்து கொண்டிருந்த வரவினை அறியாதவனாயினான். அங்ஙனம் வாராது இருத்தலைத் தானாகத், துணிந்து நடக்கும் இயல்புடையவன் அல்லன். யான், என் அறிவின்மையால் பெரிய உரிமையைப் பொருத்தி அவன் வருந்தி இங்கே வாராத வண்ணம் செய்த செயல் ஒன்றை உடையேனோ?" என்று தலைவனிடம் குறை நயப்பித்துக் கூறினாள் தோழி.

## 134. பெண்மை நலனைத் தந்து செல்க

விட்டென விடுக்கும் நாள் வருக; அது நீ
நொந்தனை ஆயின், தந்தனை சென்மோ! –
குன்றத்தன்ன குவவு மணல் அடைகரை

நின்ற புன்னை நிலம் தோய் படு சினை
வம்ப நாரை சேக்கும்
தண் கடற் சேர்ப்ப! நீ உண்ட என் நலனே.

*– நரிவெரூஉத்தலையார் குறு 236*

*"குன்றைப் போன்ற குவிதலை உடைய மணல் அடைந்த கரையின் இடத்து வளர்ந்து நின்ற புன்னை மரத்தினது, நிலத்தைத் தோய்ந்த தாழ்ந்த கிளையில் புதிய நாரை தங்கும் தண்ணிய கடற்கரையைப் பெற்ற உடைய தலைவனே, இவளை நீ கைவிட்டாய் என விடுக்கும் காலம் வருவதாக அதற்கு நீ உடன்படுவாய் ஆயின் நீ நுகர்ந்த என் பெண்மை நலத்தை மீண்டும் எம்மிடம் தந்து செல்வாயாக!" என்று தோழி தலைவனிடம் கூறி அவன் பிரிவைத் தடுத்தாள்.*

## 135. உள்ளேன் தோழி

மான் அடி அன்ன கவட்டிலை அடும்பின்
தார் மணி அன்ன ஒண் பூக் கொழுதி,
ஒண் தொடி மகளிர் வண்டல் அயரும்
புள் இமிழ் பெருங் கடற் சேர்ப்பனை
உள்ளேன் – தோழி! – படீஇயர், என் கண்ணே.

*– நம்பி குட்டுவன் குறு 243*

*"தோழியே, மானின் குளம்பைப் போன்ற பிளவுடைய இலைகளை உடைய அடும்பின் கொடியினது, குதிரை கழுத்தில் இடும் மாலையின் கண் உள்ள மணியைப் போன்ற ஒள்ளிய பூக்களை, வலிய அலர்த்தி, ஒள்ளிய வளைகளை உடைய பெண்கள் வண்டலில் விளையாட்டைச் செய்யும், பறவைகள் ஒலிக்கும் பெரிய கடற்கரைக்குத் தலைவனை இனி நினையேன் ஆதலின் என் கண்கள் இனித் துயில் கொள்ளுமாக" என்று தலைவி தோழியிடம் கூறினாள்.*

## 136. பிறர் அறிந்தால் பெருந்துயராகும்

கடல் அம் கானல் ஆயம் ஆய்ந்த என்
நலம் இழந்ததனினும், நனி இன்னாதே –
வாள் போல் வாய கொழு மடல் தாழை
மாலை வேல் நாட்டு வேலி ஆகும்

மெல்லம் புலம்பன் கொடுமை
பல்லோர் அறியப் பரந்து வெளிப்படினே.

*– மாலை மாறன் குறு 245*

*“தோழி! வாளரம் போன்ற விளிம்பை உடைய கொழுவிய மடலை உடைய தாழையானது, வரிசையாக உள்ள வேல்களை நாட்டிய வேலியைப் போலப் பயன்தரும், மெல்லிய கடற்கரையை உடைய தலைவன், என் மாட்டுச் செய்த கொடுமை, பலர் அறியும் வண்ணம் பரவி வெளிப் பட்டால், அங்ஙனம் வெளிப்படுதல் அழகிய கடற்கரைச் சோலையிலே விளையாடும் மகளிர் கூட்டத்தினர் பாராட்டிய எனது பெண்மை நலத்தை நான் இழந்ததைக் காட்டிலும் மிக இன்னாமையைத் தருவதாகும்” என்றாள் தலைவி தோழியிடம்.*

## 137. வருந்துகின்றாள் தாய்

‘பெருங் கடற் கரையது சிறு வெண் காக்கை
களிற்றுச் செவி அன்ன பாசடை மயக்கிப்,
பனிக் கழி துழவும் பானாள், தனித்து ஓர்
தேர் வந்து பெயர்ந்தது’ என்ப, அதற்கொண்டு,
ஓரும்அலைக்கும் அன்னை; பிறரும்
பின்னு விடு கதுப்பின் மின் இழை மகளிர்
இளையரும் மடவரும் உளரே;
அலையாத் தாயரொடு நற்பாலோரே. *– கபிலர் குறு 246*

*“தோழியே, பெரிய கடற்கரையின்கண் உள்ளதாகிய சிறிய வெண்மையான காக்கை, களிற்றினது காதைப் போன்ற பசிய இலையைக் கலக்கிக், குளிர்ச்சியை உடைய கழிநீரை இரையின் பொருட்டுத் துழாவிக் கொண்டிருக்கும் நள்ளிரவு வேளையிலே, தனியாக ஒரு தேர் இங்கே வந்து மீண்டு சென்றது என்று அயலார் கூறுவர் அது தொடங்கித் தாய் என்னைத் துன்புறுத்துகின்றாள் பின்னலிடப்பட்ட கூந்தலையுடைய மின்னுகின்ற பொற்கலன்கள் அணிந்த பெண்கள் கூட்டத்துள் இளமை உடையோரும் மடப்பம் உடையோமாகிய பிறரும் இருக்கின்றனர். அவர், தம்மை வருத்துதல் இல்லாத தாயரோடு நல்வினையை உடையவராவர்” என்றாள் தலைவி*

## 138. அண்மையில் திருமணம் நிகழும்

அது வரல் அன்மையோ அரிதே; அவன் மார்பு
உறுக என்ற நாளே குறுகி,
ஈங்கு ஆகின்றே – தோழி, – கானல்
ஆடு அரை புதையக் கோடை இட்ட
அடும்பு இவர் மணற் கோடு ஊர, நெடும் பனை
குறிய ஆகும் துறைவனைப்
பெரிய கூறி, யாய் அறிந்தனளே. – *உலோச்சன் குறு 248*

*"தோழியே, கடற்கரைச் சோலையினிடத்தில் உள்ள அசைகின்ற அடியிடம் புதையும்படி மேல் காற்றுக் கொண்டு வந்து இட்ட, அடுப்பங்கொடி படர்ந்த மணல் குவியல் பரவ, நெடிய பனை மரங்கள் குறியனவாகத் தோன்றும், கடற் கரையை உடைய தலைவனை, முருகனென்று சொல்லி வெறி யெடுத்து நம் தாய் அறிந்து கொண்டாள். ஆதலின் மணத்துக் குரிய நாள் வாராமற் போவதென்பது அரிதாகும்; மணம் நேரும் அவனது மார்பை அடைக என்று வரையறுத்த நாள் அணிமையாக வந்தும் இப்படி நின்பால் ஆற்றாமை உண்டாகிறது; இஃது என்கொல்?" என்று தோழி தலைவி யிடம் வினவினாள்*

## 139. ஈங்கு இல்லை எந்தையும் தாயும்

சேயாறு சென்று, துனைபரி அசாவாது,
உசாவுநர்ப் பெறினே நன்றுமன் தில்ல –
வயச் சுறா எறிந்த புண் தணிந்து, எந்தையும்
நீல் நிறப் பெருங் கடல் புக்கனன்; யாயும்
உப்பை மாறி வெண்ணெல் தரீஇய
உப்பு விளை கழனிச் சென்றனள்; அதனால்,
பனி இரும் பரப்பின் சேர்ப்பற்கு,
'இனிவரின் எளியள்' என்னும் தூதே.

– *கல்லாடனார் குறு 269*

*"தோழியே, என் தந்தையும் வலிமையுடைய சுறாமீன் தாக்கியதினால் உண்டான புண் ஆறி மீண்டும் மீன் வேட்டைக்காக, நீல நிறமுடைய பெரிய கடலினிடத்துப்*

புகுந்தனன் என் தாயும் உப்பை விற்று வெண்ணெல்லை வாங்கி வரும் பொருட்டு உப்பு விளையும் களத்திற்குச் சென்றாள் அதனால் குளிர்ச்சியுடைய பெரிய பரப்பாகிய கடற்கரையை உடைய தலைவனுக்கு இப்பொழுது இங்கே வந்தால் தலைவியை எளிதில் கண்டு பெறுதற்கு உரியள் என்றும் தூதுமொழியை நெடுந்தூர வழியைக் கடந்து போய் விரையும் நடையினால் வருந்தாமல் கூறி அருந்துணை ஆவாரைப் பெற்றால் மிக நல்லதாகும் இஃது என் விருப்ப மாகும்" என்று ஒரு பக்கம் இருந்த தலைவன் கேட்பத் தோழியிடம் கூறினாள் தலைவி.

## 140. பாறையில் மோதும் சிறுநுரை

**'காமம் தாங்குமதி' என்போர்தாம் அஃது**
**அறியலர்கொல்லோ? அனை மதுகையர்கொல்?**
**யாம், எம் காதலர்க் காணேம்ஆயின்,**
**செறிதுனி பெருகிய நெஞ்சமொடு, பெருநீர்க்**
**கல் பொரு சிறுநுரை போல,**
**மெல்லமெல்ல இல்லாகுதுமே.**

*– கல்பொரு சிறுநுரையார் குறு 290*

"தோழி, காம நோயைப் பொறுத்து ஆற்றுவாயாக என்று சொல்பவர் தாம் அக் காமத்தின் தன்மையை அறிந்தி லரோ? அத்துணை வன்மை உடையவரோ? யாம் என் தலைவரைக் காணாததனால் செறிந்த துயர் மிக்க நெஞ்சத் தோடு, மிக்க வெள்ளத்தில் பாறையின் மேல் மோதிச் சிதறும் சிறிய நுரையைப் போல, மெல்ல மெல்ல இல்லேம் ஆயினோம்" என்றாள் வற்புறுத்தும் தோழியிடம் தலைவி.

## 141. காரணமானவன் தலைவனே!

**கடல் உடன் ஆடியும், கானல் அல்கியும்,**
**தொடலை ஆயமொடு தழூஉ அணி அயர்ந்தும்,**
**நொதுமலர் போலக் கதுமென வந்து,**
**முயங்கினன் செலினே, அலர்ந்தன்று மன்னே;**
**துத்திப் பாந்தள் பைத்து அகல் அல்குல்**
**திருந்துஇழைத் துயல்வுக் கோட்டு அசைத்த பசுங் குழைத்**

தழையினும், உழையின் போகான்;
தான் தந்தனன், யாய் காத்து ஓம்பல்லே.

*– அஞ்சில் ஆந்தை குறு 294*

*"கடலினிடத்தே ஒருங்கே நீர் விளையாட்டுப் புரிந்தும், கடற்கரைச் சோலையினிடத்தே தங்கியும், மாலையை உடைய மகளிர் கூட்டத்தோடு குரவைக் கூத்து ஆடியும், அயலாரைப் போல விரைவாக வந்து தலைவன் தழுவிச் செல்வான் ஆயினன். அதனால், அலர் உண்டாயிற்று; அஃது இப் பொழுது கழிந்தது. இப்பொழுது அங்ஙனம் செய்யாமல் தேமல் படர்ந்த விரிந்தகன்ற அல்குலினது திருத்தமாகச் செய்யப்பட்டுள்ள அணிகலன்கள் அசைதலை உடைய பக்க மாகிய அரையினிடத்துக் கட்டிய பசிய தளிரால் செய்த தழையைக் காட்டிலும் மிக அணிமையில் இருந்து போகா னாய் இருந்த காரணத்தினால் தாய் நம்மை இற் செறித்துக் காவல் செய்யும் நிலைக்கு ஆளாக்கினாள்" என்றாள் தலைவி தோழியிடம்.*

## 142. கூறவேண்டாம் அவனிடம்

அம்ம வாழி – தோழி! – புன்னை
அலங்குசினை இருந்த அம் சிறை நாரை
உறுகழிச் சிறு மீன் முனையின், செறுவில்
கள் நாறு நெய்தல் கதிரொடு நயக்கும்
தண்ணம் துறைவன் காணின், முன் நின்று,
கடிய கழறல் ஓம்புமதி 'தொடியோள்
இன்னள் ஆகத் துறத்தல்
நும்மின் தகுமோ?' என்றனை துணிந்தே.

*– பெரும்பாக்கன் குறு 296*

*"தோழி, ஒன்று கூறுவன் கேட்பாயாக: புன்னையினது அசைந்த கிளையினிடத்து இருந்த அழகிய சிறகை உடைய நாரை, மிக்க கழியிடத்துச் சிறுமீன் உணவை வெறுத்த தாயின், வயலில் உள்ள கள் மணக்கின்ற நெய்தற் பூவை நெற்கதிரோடு விரும்புகின்ற தண்ணிய அழகிய தலைவனைக் கண்டால் அவன் முன்னே நின்று, வளையை அணிந்த தலைவி இத் தன்மை பெற்றவளாகும்படி பிரிந்து செல்லுதல்*

*உமக்குத் தகுமோ என்று துணிந்து கடுமையான சொற்களைக் கூறி இடித்துரைக்காமல் இருப்பாயாக" என்றாள் தோழி யிடம் தலைவி பக்கம் இருந்த தலைவன் கேட்கும்படி.*

## 143. இருத்தல் வேண்டும் என்னுடன்

இது மற்று எவனோ – தோழி! – முது நீர்ப்
புணரி திளைக்கும் புள் இமிழ் கானல்,
இணர் வீழ் புன்னை எக்கர் நீழல்,
புணர்குறி வாய்ந்த ஞான்றைக் கொண்கற்
கண்டனமன், எம் கண்ணே; அவன் சொல்
கேட்டனமன் எம் செவியே; மற்று – அவன்
மணப்பின் மாண்நலம் எய்தித்
தணப்பின் ஞெகிழ்ப, எம் தடமென் தோளே?

*– வெண்மணிப் பூதி குறுந் 299*

*"தோழி, பழையதாகிய கடலின் அலை அளவளாவுகின்ற, பறவைகள் ஒலிக்கின்ற கடற்கரைச் சோலையிலுள்ள, பூங் கொத்துகள் மலர்ந்த புன்னை மரம் வளர்ந்த மேட்டிலுள்ள நிழலில் புணர்குறிப் பெற்ற காலத்தில் எம் கண்கள் தலை வனைப் பார்த்தன; எம்முடைய செவிகள் அவனுடைய சொற்களைக் கேட்டன; என்னுடைய பரந்த மெல்லிய தோள்கள் அவன் என்னை மணந்ததால் மாட்சிமைபெற்ற அழகைப் பெற்று பின் அவன் பிரிந்ததால் சோர்வடைந்தன. இஃது என்ன வியப்பு!" என்று தோழியிடம் தலைவி வினாவினாள்*

## 144. இனிச் செய்யக் கூடியது

கழி தேர்ந்து அசைஇய கருங் கால் வெண் குருகு
அடைகரைத் தாழைக் குழீஇப், பெருங் கடல்
உடைதிரை ஒலியின் துஞ்சும் துறைவ!
தொல் நிலை நெகிழ்ந்த வளையள், ஈங்குப்
பசந்தனள்மன் என் தோழி – என்னொடும்
இன் இணர்ப் புன்னைஅம் புகர் நிழல்
பொன் வரி அலவன் ஆட்டிய ஞான்றே.

*– அம்மூவன் குறு 303*

*"மீனை உணவாகப் பெறும் பொருட்டுக் கழியின் நீரை ஆராய்ந்து அங்குத் தங்கி இருக்கும் கரிய காலை உடைய வெண்ணிற நாரைகள், அடைகரையில் உள்ள தாழை யினிடத்துக் கூடியிருக்கும் பெரிய கடலின் கரையை மோதி உடைக்கின்ற அலைகளின் ஓசையினால் துயில்கின்ற துறையை உடைய தலைவனே, மின்னுகின்ற பூங்கொத்துகளை உடைய புன்னை மரத்தினது அழகிய புள்ளிகளைப் பெற்ற நிழலில் பொன் போன்ற கோடுகளைக் கொண்ட நண்டுகளை, அலைத்து விளையாடிய பொழுது என் தோழியாகிய தலைவி தன் பழைய செறிந்த நிலையினின்றும் நெகிழ்ந்த வளைகளை உற்றவளாகி இங்கே மிகச் பசந்தாள்" என்று தோழி தலை வனுக்குத் தலைவியின் நிலை உரைத்தாள்.*

## 145. பகையாயிற்று நட்பு

கொல்வினைப் பொலிந்த கூர் வாய் எறிஉளி
முகம் பட மடுத்த முளிவெதிர் நோன் காழ்
தாங்கு அரு நீர்ச் சுரத்து எறிந்து, வாங்கு விசைக்
கொடுந் திமில் பரதவர் கோட்டு மீன் எறிய,
நெடுங் கரை இருந்த குறுங் கால் அன்னத்து
வெண் தோடு இரியும் வீ ததை கானல்,
கைதைஅம் தண் புனல் சேர்ப்பனொடு
செய்தனெம்மன்ற, ஓர் பகைதரு நட்பே.

*– கணக்காயன் தத்தன் குறு 304*

*"தோழி! கொல்லும் தொழிலில் பொலிவு பெற்ற கரிய முகத்தை உடைய எறிகின்ற உளியைத் தன்னுடைய முகத்தின்கண் அமையும்படி பொருந்தப்பெற்ற உலர்ந்த மூங்கிலின் வலிய காம்பைத் தாங்குதற்குரிய நீரையுடை வழியின் கண் எறிந்து கைக்கொள்ளும் வேகத்தையுடைய வளைந்த மீன் படகை உடைய பரதவர், கொம்பை உடைய சுறாமீனை நோக்கி எறி உளியை எறிய, அது கண்டு நீண்ட கரையினிடத்தே இருந்த குறிய கால்களை உடைய அன்னப் பறவைகளின் வெண்ணிறக் கூட்டம், அஞ்சி ஓடும் மலர்கள் நெருங்கிய சோலையையும் தாழையையும் அழகிய தண்ணிய நீரையும் உடைய கடற்கரைத் தலைவனோடு நிச்சயமாக*

*பகையைத் தருகின்ற நட்பைச் செய்யோம்! என்று தலைவி உரைத்தாள்.*

## 146. நீங்கும் துயரம்

'மெல்லிய இனிய மேவரு தகுந
இவை மொழியாம் நீ' எனச் சொல்லினும், அவை,
மறத்தியோ வாழி – என் நெஞ்சே, – பல உடன்
காமர் மாஅத்துத் தாது அமர் பூவின்
வண்டு வீழ்பு அயரும் கானல்
தண்கடல் சேர்ப்பனைக் கண்ட பின்னே?

*– அம்மூவன் குறு 306*

*"என் நெஞ்சே! ஓசையால் மெல்லியனவும் பொருளால் இனியனவும் விரும்பத்தக்கனவும் ஆகிய சொற்களை இனி மொழிய மாட்டோம் என்று நினக்கு நன் சொன்னாலும், அழகிய மா மரத்தினது தாதுகள் பொருந்திய, மலரினிடத்து வண்டுகள் பல ஒருங்கே வீழ்தலைச் செய்யும் சோலையை உடைய குளிர்ச்சி பொருந்திய கடற்கரைத் தலைவனைக் கண்ட பின், நீ நான் கூறியவற்றை மறந்து விடுகின்றாய்" என்றாள் தலைவி தோழியிடம்.*

## 147. உரைப்பாயா என் நிலையை

புள்ளும் புலம்பின; பூவும் கூம்பின;
கானலும் புலம்பு நனி உடைத்தே; வானமும்,
நம்மே போலும் மம்மர்த்து ஆகி,
எல்லை கழியப் புல்லென்றன்றே;
இன்னும் உளெனே – தோழி, இந் நிலை
தண்ணிய கமழும் ஞாழல்
தண்ணம் துறைவதற்கு உரைக்குநர்ப் பெறினே.

*– பெருங்கண்ணனார் குறு 310*

*"தோழியே, பறவைகளும் ஒலித்தன; மலர்களும் குவிந்தன; கடற்கரைச் சோலையும் தனிமை மிக உடையதாயிற்று; வானமும் நம்மைப் போன்ற மயக்கத்தை உடையதாகி, பகல் கழிய அதனால் பொலிவிழந்தது. இந்த என் நிலைமையைக் குளிர்ந்த மணம் வீசுகின்ற மலர்கள் நிறைந்த ஞாழல்கள்*

வளர்ந்த குளிர்ந்த அழகிய துறையை உடைய தலைவருக்கு உரைப்பாரைப் பெற்றால் இனிமேலும் உயிரோடு இருப்பே னாவேன்" என்றாள் தலைவி

## 148. தடுக்க முடியாது அவரை

அலர் யாங்கு ஒழிவ – தோழி! – பெருங் கடல்
புலவு நாறு அகன் துறை வலவன் தாங்கவும்,
நில்லாது கழிந்த கல்லென் கடுந் தேர்
யான் கண்டனனோஇலனோ; பானாள்
ஒங்கல் வெண் மணல் தாழ்ந்த புன்னைத்
தாது சேர் நிகர்மலர் கொய்யும்
ஆயம் எல்லாம் உடன் கண்டன்றே?

*– சேந்தன் கீரனார் குறு 311*

*"தோழி! பெரிய கடலினது புலால் நாற்றம் வீசும் அகன்ற துறையின் கண்ணே, பாகன் தடுக்கவும் நில்லாமல் சென்ற 'கல்'லென்று ஆராவரம் செய்யும் விரைந்த தலைவனது தேரை நான் கண்டேனோ இல்லையோ நடு இரவின்கண் உயர்ச்சியை உடைய வெள்ளிய மணலிடத்துத் தாழ்ந்து வளர்ந்த புன்னை மரத்தினது மகரந்தம் சேர்ந்த ஒளியை உடைய மலர்களைப் பறிக்கும் ஆய மகளிர் கூட்டமெல்லாம் ஒருங்கே கண்டட்து. இங்ஙனமாக, எவ்வாறு பழிமொழி இல்லாமல் போகும்" என்றாள் தலைவி.*

## 149. நட்பு அவிழ்த்தற்கு அரிது

பெருங் கடற் கரையது சிறுவெண் காக்கை
நீத்து நீர் இருங் கழி இரை தேர்ந்து உண்டு,
பூக் கமழ் பொதும்பர்ச் சேக்கும் துறைவனொடு
யாத்தேம்; யாத்தன்று நட்பே;
அவிழ்த்தற்கு அரிது; அது முடிந்து அமைந்தன்றே.

*– ஆசிரியர் ? குறு 313*

*"தோழியே பெரிய கடற்கரையின் கண்ணதாகிய சிறிய வெண்ணிறக் காக்கையானது வெள்ளநீரை உடைய கரிய கழியிடத்து மீனாகிய இரையைத் தேடி உண்டு, மலர்கள் மணம் வீசும் சோலையினிடத்துத் தங்கும் துறையை உடைய*

தலைவனோடு, நம்மைப் பிணித்துக் கொண்டோம். அங்ஙனம் கூடிய நட்பு நன்றாகப் பொருந்தியது. அது பிறரால் பிரித தற்கு அரியதாக அமைந்தது" என்றாள் தலைவி தோழியிடம்.

## 150. சொல் வேறுபட்டானே

ஆய் வளை ஞெகிழவும், அயர்வு மெய் நிறுப்பவும்,
நோய் மலி வருத்தம் அன்னை அறியின்,
உளெனோ வாழி தோழி! விளியாது
உரவுக் கடல் பொருத விரவு மணல் அடைகரை
ஓரை மகளிர் ஓராங்கு ஆட்ட
ஆய்ந்த அலவன் துன்புறு துனைபரி
ஓங்கு வரல் விரிதிரை களையும்
துறைவன் கொல்லோ பிற ஆயினவே.

*– தும்பிசேர் கீரனார் குறு 316*

"தோழியே, முழுவதும் கெட்டுப் போகாமல் வலிமையை உடைய கடலால் அலைக்கப்பட்ட மணல் விராவிய அடைகரையினிடத்து விளையாட்டை உடைய பெண்கள் ஒரு தன்மையாக அலைக்க, அதனால் மெலிந்த நண்டினுடைய வருத்தம் மிக்க விரைந்த செலவை உயர்ந்து வருதலுடைய விரிந்த கடல் அலையானது அந் நண்டைக் கொண்டு நீக்கு கின்ற துறையை உடைய தலைவன் சொல் வேறுபாடு உடைய வனாயினான். அழகிய வளைகள் நெகிழ்ந்து போகவும், அயர்வினை மெய்யின்கண்ணே நிலைக்கச் செய்யவும் ஆன துன்பமிக்க எனது வருத்தத்தைத் தாய் அறிவாளாயின் இனி மேலும் உயிரோடு இருப்பேனோ?" என்று வினாவினாள் தலைவி.

## 151. சொல்லைக் காப்பது கடமை

எறி சுறாக் கலித்த இலங்கு நீர்ப் பரப்பின்
நறு வீ ஞாழலொடு புன்னை தாஅய்,
வெறி அயர் களத்தினின் தோன்றும் துறைவன்
குறியான் ஆயினும், குறிப்பினும், பிறிது ஒன்று
அறியாற்கு உரைப்பலோ, யானே? எய்த்த இப்
பணை எழில் மென் தோள் அணைஇய அந் நாள்

பிழையா வஞ்சினம் செய்த
களவனும் கடவனும் புணைவனும் தானே.

*– அம்மூவனார் குறுந் 318*

*“தோழியே, அடைந்தாரை எறிகின்ற சுறாமீன்கள் மிக்கு விளங்கும் கடற்பரப்பினிடத்து, நறிய ஞாழல் பூவோடு புன்னை மலரும் பரவி வெறியாடும் இடத்தைப் போலத் தோற்ற மளிக்கின்ற துறையை உடைய தலைவன், என்னை வரைந்து கொள்ளுதலை மனத்துள் கருதான் கருதினாலும் அயலார் மணம் வேண்டி வர நேரும் என்பதனை அறியாத அவனுக்கு நான் சொல்லுவேனோ? இப்பொழுது இளைத்த இந்த மூங்கிலை போன்ற அழகுடைய மெல்லிய தோள் களை அணைத்த அந்த நாளிலே நம்மிடத்துப் பிழை யாமையைப் புலப்படுத்தும் சூளுறவுச் செய்த வஞ்ச நெஞ் சுடையவனும் அவ் வஞ்சினத்தை நிறைவேற்றும் கடப்பாடு பெற்றனும் புணை போன்று இருப்பவனும் அத் தலைவனை அன்றிப் பிறர் இல்லை’ என்று தலைவனுக்கு கேட்கும்படித் தோழிக்குத் தலைவி உரைத்தாள்*

## 152. மணக்க வேண்டும் ஊர் பழி தீர்க்க

பெருங் கடல் பரதவர் கொள் மீன் உணங்கலின்
இருங்கழிக் கொண்ட இறவின் வாடலொடு,
நிலவு நிற வெண் மணல் புலவப், பலஉடன்
எக்கர்தொறும் பரிக்கும் துறைவனொடு ஒரு நாள்,
நக்கதோர் பழியும் இலமே; போது அவிழ்
பொன் இணர் மரீஇய புள் இமிழ் பொங்கர்ப்
புன்னைஅம் சேரி இவ் ஊர்
கொள் அலர் தூற்றும், தன் கொடுமையானே.

*– தும்பிசேர் கீரனார் குறு 320*

*“தோழி, பெரிய கடலினிடத்தே பரதவர் கொண்ட மீனினது உலர்ந்த வற்றல், நீந்துவதற்கு அரிய கழியினிடத்தே, அவர் பிடித்து வந்த இறால் மீனின் வாடிய வற்றலோடு நிலவினது நிறத்தை ஒத்த, வெள்ளிய மணல், புலால் நாறும் படி பல மணல்மேடு தோறும் தங்கிக் கிடக்கும் துறையை உடைய தலைவனோடு, ஒரு நாளேனும் மகிழ்ந்து விளை*

*யாடிய பழிதானும் மலர்ந்த பொன் போன்ற பூங்கொத்து கள் பொருந்திய வண்டுகள் ஒலிக்கின்ற கிளைகளை உடைய புன்னை மரங்கள் நிறைந்த சேரிகளைக் கொண்ட இவ் ஊரில் உள்ளார், தம்பால் உள்ள கொடிய தன்மையினால் வீணே நம் மீது பழி மொழிகளைக் கூறுவர்" என்றாள் தலைவி தோழி தலைவன் கேட்கும் வண்ணம்.*

## 153. வாராதே இரவில்!

கொடுங் தாள் முதலைக் கோள் வல் ஏற்றை
வழி வழக்கு அறுக்கும் கானல்அம் பெருந் துறை,
இன மீன் இருங் கழி நீந்தி நீ நின்
நயன் உடைமையின் வருதி; இவள் தன்
மடன் உடைமையின் உயங்கும்; யான் அது,
கவை மக நஞ்சு உண்டாஅங்கு,
அஞ்சுவல் – பெரும! – என் நெஞ்சத்தானே.

*– கவைமகன் குறு 324*

*"தலைவா!, நினது அன்புடைமையால் வளைந்த கால் களை உடைய கொல்லுதல் வல்ல ஆண் முதலையானது நீர்வழியிடத்துப் பிறர் செல்வதைத் தடுத்து நிற்கும் கானலை உடைய பெரிய கடல்துறையின்கண் திரளான மீன்களை உடைய அரிய கழியை நீந்திக் கடந்து வருகிறாய். இத் தலைவியோ தன் அறியாமையினால் வருந்துகின்றாள். யான் என் மனத்தினுள்ளே இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டால் இருவர் திறத்தும் ஒரு தாய் வருந்துவதைப் போல நீ அங்ஙனம் வருதலை எண்ணி அஞ்சுவேன்" என்றாள் தோழி தலைவனிடம்.*

## 154. பிரிவைத் தாங்க முடியாது

'சேறும் சேறும்' என்றலின், பண்டைத் தம்
மாயச் செலவாச் செத்து, 'மருங்கு அற்று
மன்னிக் கழிக' என்றேனே; அன்னோ!
ஆசு ஆகு எந்தை யாண்டு உளன்கொல்லோ?
கருங் கால் வெண் குருகு மேயும்
பெருங் குளம் ஆயிற்று, என் இடைமுலை நிறைந்தே.

*– நன்னாகையார் குறு 325*

*"தோழி! செல்வேம் செல்வேம் என்று தலைவன் பல காலும் சொல்லியதனால் முன்பு அவன் கூறிய பொய்ச் சொல்லாக எண்ணி என் பக்கத்தினின்றும் நீங்கி நிலையாய்ப் போய்விடுக என்றேன். அய்யோ! நமக்குப் பற்றுக் கோடாகிய தலைவன் எங்கே இருக்கின்றானோ? என் முலைகளின் இடையே உள்ள இடம் அவனது பிரிவால் அழுத என் கண்ணீரால் நிறைந்து கரிய காலை உடைய வெண்ணிற நாரை மீன் கவரக் கருதி மேவும் பெரிய குளம்போல ஆயிற்றே" என்று ஆற்றாத தலைவி வருந்திக் கூறினாள்*

## 155. பிரியவே கூடாது

துணைத்த கோதைப் பணைப் பெருந்தோளினர்
கடல் ஆடு மகளிர் கானல் இழைத்த
சிறு மனைப் புணர்ந்த நட்பே தோழி,
ஒரு நாள் துறைவன் துறப்பின்,
பல் நாள் வரூஉம் இன்னாமைத்தே. – *ஆசிரியர் ? குறு 326*

*"தோழி, கட்டிய மாலையை அணிந்த மூங்கிலைப் போன்ற பருத்த தோள்களை உடையவராய், கடலில் நீர் விளையாடலைச் செய்யும் மகளிர் கடற்கரைச் சோலையிலே செய்த சிற்றிலினிடத்தே யாம் தலைவனோடு பொருந்திய நட்பு, அத் தலைவன் ஒரு நாள் நம்மைப் பிரிந்தால் பல நாளில் வருகின்ற துன்பத்தை உடையது" என்று தோழியிடம் கூறினாள் தலைவி.*

## 156. தூற்றல் நன்மையே தரும்

சிறு வீ ஞாழல் வேர் அளைப் பள்ளி
அலவன் சிறு மனை சிதையப், புணரி
குணில் வாய் முரசின் இரங்கும் துறைவன்
நல்கிய நாள் தவச் சிலவே; அலரே,
வில் கெழு தானை விச்சியர் பெருமகன்
வேந்தரொடு பொருத ஞான்றைப், பாணர்
புலி நோக்கு உறழ் நிலை கண்ட
கலி கெழு குறும்பூர் ஆர்ப்பினும் பெரிதே.

– *பரணர் குறு 328*

*"சிறிய மலரை உடைய ஞாழல் மரத்தின் வேரின்கண் அமைக்கப்பட்ட வளையிடத்திலுள்ள நண்டினது சிறிய வீடு அழியும்படி அலைகள் குறுந்தடி வாய்ந்த முரசத்தைப் போல வீசி முழங்கும் கடற்கரைத் துறையை உடைய தலைவன் தண்ணளி செய்த நாள்கள் மிகச் சிலவே ஆகும். அதனால் எழுந்த பழிமொழியோ, விற்படையைக் கொண்ட படைகளுடைய விச்சியர்களுக்குத் தலைவன் பிற அரசர்களோடு போர் செய்த காலத்தில், புலியினது பார்வையை ஒத்துக் காணப்பட்ட பாணர்களின் பார்வையைக் கண்ட ஆரவார மிக்க குறும்பூரினர் செய்த முழக்கத்திலும் பெரிய முழக்கத்தினை உடையதாயிற்று" என்று மணநாள் நீள்வதறிந்து தலைவியை நோக்கித் தோழி கூறினாள்.*

## 157. நம் உயிரும் பிரிந்துவிடும்

சிறு வெண் காக்கைச் செவ் வாய்ப் பெருந்தோடு
எறி திரைத் திவலை ஈர்ம் புறம் நனைப்பப்,
பனி புலந்து உறையும் பல் பூங் கானல்
இரு நீர்ச் சேர்ப்ப நீப்பின், ஒரு நம்
இன் உயிர் அல்லது, பிறிது ஒன்று
எவனோ – தோழி! – நாம் இழப்பதுவே.

*– இளம்பூதனார் குறு 334*

*"தோழியே, சிறிய வெண்ணிறக் காக்கையினது செவ்விய வாயை உடைய பெரிய தொகுதி, வீசுகின்ற அலைகளின் நீர்த்துளிகள் தன் ஈரமாகிய புறத்தை நனைக்க அக் குளிரை வெறுத்து தங்குவதற்கு இடமாகிய பல மலர்களை உடைய சோலையை உடைய அகன்ற கடற்கரைத் தலைவன் பிரிந்தால், நாம் இழக்கும் பொருள் நமது இனிய உயிரே அன்றி வேறு ஒன்று யாது?" என்று தலைவி தோழியிடம் வருந்திக் கூறினாள்.*

## 158. அவர் இருந்த நெஞ்சு

காமம் கடையின் காதலர்ப் படர்ந்து,
நாம் அவர்ப் புலம்பின் நம்மோடு ஆகி
ஒரு பாற் படுதல் செல்லாது, ஆயிடை,

அழுவம் நின்ற அலர் வேர்க் கண்டல்
கழி பெயர் மருங்கின் ஒல்கி, ஓதம்
பெயர்தரப் பெயர்தந்தாங்கு,
வருந்தும் – தோழி! – அவர் இருந்த என் நெஞ்சே.

*– அம்மூவன் குறு 340*

*“தோழி! தலைவர் இருந்த என் நெஞ்சம் காம மிகுதியால் தலைவரை நினைத்துச் செல்லும் நாம் அவர் திறத்தே வருந்தினோமாயின் நம்மோடு நில்லாமல் ஒரு கூற்றிலே அமையாதாகி, அவ் இரண்டுக்கும் இடையிலேயும், கடற் கரைப் பரப்பிலே நின்ற மலரைப் பொருந்திய தாழை, கழி பெயருகின்ற இடத்தில் தளர்ந்து வெள்ளம் பெயரும் பொழுது தானும் பெயர்ந்தது போல வருந்தி நிற்கும்” என்று தலைவி தோழியை நோக்கிக் கூறினாள்.*

## 159. வாழ்கிறேன் துணிந்து

பல் வீ பட்ட பசு நனைக் குரவம்
பொரிப் பூம் புன்கொடு பொழில் அணிக் கொளாஅச்
சினை இனிது ஆகிய காலையும், காதலர்
பேணார் ஆயினும், ‘பெரியோர் நெஞ்சத்துக்
கண்ணிய ஆண்மை கடவது அன்று’ என,
வலியா நெஞ்சம் வலிப்ப,
வாழ்வேன் – தோழி! – என் வன்கணானே.

*– மிளைகிழான் நல்வேட்டன் குறு 341*

*“தோழி! பல மலர்கள் தோன்றிய பசிய அரும்புகளை உடைய குரா மரம், நெற்பொறியைப் போன்ற பூக்களை உடைய புன்க மரத்தோடு சோலையின்கண் அழகைக் கொண்டு கிளைகள் கண்ணுக்கு இனிதாக தோன்றிய இப் பருவத்திலும் தலைவர் நம்மை விரும்பிப் பாதுகாவராயினும், பெரியோர்கள் தம் நெஞ்சத்திலே நினைத்த ஆண்மைச் செயலை மீறிச் செல்லுதல் தகுவதன்று என்றெண்ணி, முன்னர்த் துணியாத என் நெஞ்சம் பின்னர் துணிந்த தறு கண்மையால், உயிரோடு வாழ்வேன் ஆயினேன்” என்றாள் தலைவி தோழியிடம்*

## 160. இரவு தங்கிச் செல்க

இழை அணிந்து இயல்வரும் கொடுஞ்சி நெடுந் தேர்
வரை மருள் நெடு மணல் தவிர்த்தனிர் அசைஇத்
தங்கினிர்ஆயின், தவறோ? – தகைய
தழை தாழ் அல்குல் புலம்பு அகல –
தாழை தைஇய தயங்குதிரைக் கொடுங் கழி
இழுமென ஒலிக்கும் ஆங்கண்
பெருநீர் வேலி எம் சிறு நல் ஊரே?

*– அண்டர் மகன் குறுவழுதி குறு 345*

"தாழை மரங்கள் பொருந்திய, விளங்கிய அலைகளை உடைய வளைந்த கழியானது 'இழும்' என்று ஆரவாரம் செய்யும். அவ் இடத்துள்ள பெரிய கடலை வேலியாக உடைய எமது சிறிய நல்லூரில், பொன் தொங்கல்களால் அணி செய்யப்பட்ட ஓடுகின்ற கொடிஞ்சியை உடைய நுமது உயர்ந்த தேரை, மலையை ஒத்த உயர்ந்த மணல் மேட்டிலே நிறுத்தி விட்டு இங்கிருந்து இளைப்பாறி, தழையுடை தாழ்ந்த அல்குலை, உடைய இத் தலைவியின் தனிமை நீங்கும் வண்ணம் தங்குவீரானால் அது பிழை யாகுமோ?" என்று தலைவனை நோக்கித் தோழி கூறினாள்.

## 161. ஈந்த நலம் ஈந்ததுதான்

'அடும்பு அவிழ் மணி மலர் சிதைஇ மீன் அருந்தி,
தடந் தாள் நரை இருக்கும் எக்கர்த்
தண்ணம் துறைவன் தொடுத்து, நம் நலம்
கொள்வாம்' என்றி – தோழி, –கொள்வாம்;
இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டிய
கொடுத்து 'அவை தா' எனக் கூறலின்,
இன்னாதோ நம் இன் உயிர் இழப்பே?

*– சாத்தனார் குறு 349*

"தோழி! அடும்பின் கொடியினிடத்தே மலர்ந்த அழகிய மலரைச் சிதைத்து மீனை உண்ணுகின்ற வளைந்த காலை யுடைய நாரை தங்கியிருக்கின்ற மணல்மேட்டை உடைய குளிர்ந்த துறைக்குத் தலைவனைச் சூழ்ந்து, வளைத்து, நாம்

இழந்த பெண்மை நலத்தை மீண்டும் பெறுவோம் என்று கூறுகின்றாய்; அங்ஙனமே கொள்வேம்; ஆயினும் தாம் உற்ற வறுமைத் துன்பத்திற்கு அஞ்சி, விரும்பி இரந்தவர்க்குக் கொடுத்துப் பிறகு அங்ஙனம் கொடுத்த அவற்றைத் தருக என்று சொல்வதைக் காட்டிலும், நமது இனிய உயிரை இழத்தல் இன்னாமையை உடையதோ? அன்று; ஆதலின் அதைக் கருதிலேன்" என்றாள் பக்கத்தில் உள்ள தலைவன் கேட்பத் தலைவி.

## 162. அலர் உரைக்கும் தன்மை

**வளையோய்! உவந்திசின் – விரைவுறு கொடுந் தாள்**
**அளை வாழ் அலவன்கூர் உகிர் வரித்த**
**ஈர் மணல் மலிர் நெறி சிதைய, இழுமென**
**உரும் இசைப் புணரி உடைதரும் துறைவற்கு**
**உரிமை செப்பினர் நமரே; விரிஅலர்ப்**
**புன்னை ஓங்கிய புலால்அம் சேரி**
**இன் நகை ஆயத்தாரோடு**
**இன்னும் அற்றோ, இவ் அழுங்கல் ஊரே.**

*– அம்மூவன் குறு 351*

"வளையை அணிந்தவளே, நம் சுற்றத்தார், விரைதலையும் வளைந்த காலையும் உடைய வளையின்கண் வாழும் நண்டு தன் கூரிய நகத்தினால் கீறிய ஈரமான மணலை உடைய நீருள்ள வழியானது சிதையும்படி 'இழும்' என்னும் ஓசை உண்டாக இடியினது முழக்கத்தை உடைய அலைகள் உடையும் துறையை உடைய தலைவருக்கு நீ உரிமை உடையாய் என்பதனை உடன்பட்டுக் கூறினர். அதனை அறிந்து நான் மகிழ்ந்தேன். விரிந்த மலர்களை உடைய புன்னை மரங்கள் உயர்ந்து வளர்ந்த புலால் நாற்றத்தை உற்ற சேரி இடத்துள்ள இனிய நகையைப் பெற்ற மகளிர் கூட்டத்தினரோடு இந்த ஆரவாரத்தை உடைய ஊர் இனியும் அலர் கூறும் அத் தன்மையை கொண்டதோ?" என்று தோழி தலைவிக்குக் கூறினாள்

## 163. பழிச்சொல் அதிகமாகியது

பனை தலைக்
"கருக்குடை நெடுமடல் குருத்தொடு மாய
கடு வளி தொகுத்த நெடு வெண் குப்பைக்
கணம்கொள் சிமைய அணங்கும் கானல்,
ஆழி தலை வீசிய அயிர்ச் சேற்று அருவிக்
கூழை பெய் எக்கர்க் குழீஇய பதுக்கைப்
புலர் பதம் கொள்ளா அளவை,
அலர் எழுந்தன்று, இவ் அழுங்கல் ஊரே.

*– விற்றூற்று மூதெயினனார் குறு 372*

*"பனையின் உச்சியிலுள்ள கருக்கை உடைய நெடிய மடலானது குருத்தோடு மறைய, விரைவை உடைய காற்று ஒதுக்கிய உயர்ந்த வெள்ளிய மணற் குவியலாகிய தொகுதியைக் கொண்ட சிகரத்தை உடைய வருந்துகின்ற கடற்கரையில், கடல் வீசிய கருமணல்; சேற்றை உடைய அருவியால் கூந்தல் போன்ற தோற்றமுடைய கருமணல் குவியல்கள்; உலரும் செவ்வியை அடைவதற்கு முன் இந்த ஆரவாரத்தை உடைய ஊரில் பழிமொழி எழுந்ததுதே" என்றாள் தோழி, தலைவிக்கு மறைந்து நிற்கும் தலைவன் கேட்கும் வண்ணம்.*

## 164. தன்மை வெம்மை கொண்டவள்

மன் உயிர் அறியாத் துன்அரும் பொதியில்
சூருடை அடுக்கத்து ஆரம் கடுப்ப,
வேனிலானே தண்ணியள்; பனியே,
வாங்குகதிர் தொகுப்பக் கூம்பி, ஐயென,
அலங்கு வெயில் பொதிந்த தாமரை
உள்ளகத்தன்ன சிறு வெம்மையளே.

*– படுமரத்து மோசிக் கொற்றன் குறு 376*

*"நெஞ்சமே! நிலைபெற்ற உயிர் தொகுதியினரால் முற்ற அறியப்படாததும் அணுகுதற்கரியதும் ஆன பொதிய மலையில் உள்ள தெய்வங்களை உடைய பக்கத்தில் வளர்ந்த, சந்தனத்தைப் போல வேனிற் காலத்தில் இத் தலைவி*

*குளிர்ச்சியை உடையாள்; பனிக்காலத்தில் அடக்கிக் கொண்ட கதிரவனுடைய கதிர்கள் மறையக் குவிந்து அழகினதாக அசைகின்ற வெயிலை உட் பொதித்த, தாமரை மலரின் உள்ளிடத்தைப் போன்ற சிறிய வெம்மையை உடையாள்" என்று தலைவன் கூறினான்.*

## 165. பலன் இதுதானோ!

**தொல் கவின் தொலைந்து, தோள் நலம் சாய்அய்,**
**அல்லல் நெஞ்சமொடு அல்கலும் துஞ்சாது,**
**பசலை ஆகி, விளிவது கொல்லோ –**
**வெண் குருகு நரலும் தண் கமழ் கானல்,**
**பூ மலி பொதும்பர் நாள்மலர் மயக்கி,**
**விலங்கு திரை உடைதரும் துறைவனொடு**
**இலங்கு எயிறு தோன்ற நக்கதன் பயனே?**

*– ஆசிரியர் ? குறு 381*

*"வெள்ளை நாரைகள் ஒலிக்கின்ற குளிர்ந்த மணம் வீசுகின்ற கடற்கரையிலே, உள்ள மலர் நிறைந்த சோலையிலுள்ள செவ்விய மலர்களைக் கலக்கச் செய்து குறுக்கிடும் அலைகள் உடைந்து சிதறும் துறைகளை உடைய தலைவனோடு, விளக்கமுற்றுக் காணும் பற்கள் வெளிப்படச் சிரித்து மகிழ்ந்ததனால் உண்டான பயன் பழைய அழகு அழியத் தோளினது நலம் மெலியத் துன்பத்தை உடைய நெஞ்சோடு இரவுதோறும் தூங்காமல் பசலை உண்டாக நாம் அழிவதுவோ?" என்று தலைவியை நோக்கித் தோழி வினவினாள்.*

## 166. மாலை தரும் துயரம்!

**வெண் மணல் விரிந்த வீ ததை கானல்**
**தண்ணந் துறைவன் தணவா ஊங்கே,**
**வால் இழை மகளிர் விழவு அணிக் கூட்டும்**
**மாலையோ அறிவேன் மன்னே; மாலை**
**நிலம் பரந்தன்ன புன்கணொடு**
**புலம்பு உடைத்து ஆகுதல் அறியேன் யானே.**

*– வெள்ளிவீதியார் குறு 386*

"தோழியே, வெள்ளிய மணல் பரவிய செறிந்த சோலையைக் கொண்ட தண்ணிய கடற்கரையை உடைய தலைவன் என்னைப் பிரியாத முன் காலத்தில், யான், தூய அணிகலன்களை அணிந்த மகளிர் விழாவுக்குரிய அலங்காரங்களைத் தொகுக்கின்ற மாலைக் காலத்தை அறிவேன். இப்பொழுது அது இல்லையாயிற்று அம் மாலைக் காலம் நிலம் பரந்தது போன்ற பெரிய துன்பத்தோடு தனிமை உடையதாதலை அப்போது யான் அறியேன்" என்று தலைவி தோழியை நோக்கிக் கூறினாள்.

## 167. நின்னை அன்றி இன்னல் தீர்ப்பார் யார்?

நனை முதிர் ஞாழல் சினைமருள் திரள் வீ
நெய்தல் மா மலர்ப் பெய்தல் போல
ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப!
தாய் உடன்று அலைக்கும் காலையும், வாய்விட்டு,
'அன்னாய்!' என்னும் குழவி போல,
இன்னா செயினும், இனிது தலை அளிப்பினும்,
நின் வரைப்பினள், என் தோழி;
தன் உறு விழுமம் களைஞரோ இலளே.

– *அம்மூவன் குறு 397*

"அரும்புகள் முதிர்ந்த ஞாழலினது முட்டையைப் போன்ற திரண்ட மலர்களை நெய்தலது கரிய மலரிலே பெய்வது போலக் குளிர் காற்றுத் தூவுகின்ற வன்மையை உடைய கடற்கரைக்குத் தலைவர், தாய் சினத்து அடித்த பொழுதும், வாய் திறந்து 'அம்மா' என்று அழும் குழந்தையைப் போல, என் தோழியாகிய தலைவி நீ இன்னாதனவற்றைச் செய்தாலும் இனியதாகத் தலையளி செய்தாலும் நின்னால் புரக்கப்படும் எல்லைக்கு உட்பட்டவள்; நின்னையன்றி தனது மிக்க துன்பத்தை நீக்குவாரைப் பெற்றிலள்" என்று தலைவனை நோக்கித் தோழி கூறினாள்.

## 168. வியப்புக்குரிய காதல்!

அடும்பின் ஆய் மலர் விரைஇ, நெய்தல்
நெடுந் தொடை வேய்ந்த நீர் வார் கூந்தல்

ஓரை மகளிர் அஞ்சி, ஈர் ஞெண்டு
கடலில் பரிக்கும் துறைவனொடு, ஒரு நாள்,
நக்கு விளையாடலும் கடிந்தன்று,
ஐதே கம்ம, மெய்தோய் நட்பே! — *அம்மூவன் குறு 400*

*"அரும்பினது அழகிய மலரைக் கலந்து நெய்தலாகிய நெடிய மாலையை அணிந்த நீர் ஒழுகிய கூந்தலை உடைய விளையாட்டு மகளிருக்கு அஞ்சி, ஈரத்தை உடைய நண்டு கடலுக்குள் ஓடும் துறையை உடைய தலைவனோடு ஒரு நாள் நகைத்து விளையாடிய அவனுடைய மெய்யைத் தோய்ந்த நட்பானது நீங்கியது; இது வியத்தற்குரியது," என்று தலைவி தனக்குள்ளே உவந்துரைத்தாள்.*

# நெய்தல்

## நற்றிணை

### 169. தலைவர் அழைத்துச் செல்வாரா?

கானல் அம் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்
நீல் நிறப் புன்னைக் கொழு நிழல் அசைஇ,
தண் பெரும் பரப்பின் ஒண் பதம் நோக்கி,
அம் கண் அரில் வலை உணக்கும் துறைவனொடு,
'அலரே அன்னை அறியின், இவண்உறை வாழ்க்கை
அரிய ஆகும் நமக்கு' எனக் கூறின்,
கொண்டும் செல்வர்கொல் – தோழி, – உமணர்
வெண் கல் உப்பின் கொள்ளை சாற்றிக்,
கண நிரை கிளர்க்கும் நெடு நெறிச் சகடம்
மணல்மடுத்து உரறும் ஓசை கழனிக்
கருங் கால் வெண் குருகு வெரூஉம்
இருங் கழிச் சேர்ப்பின் தம் உறைவின் ஊர்க்கே?

*– அம்மூவனார் நற் 4*

*"தோழி, கடற்கரையிலுள்ள அழகிய சிறுகுடியில் வாழும் பரதவர் கடல் மேற்சென்று மீன்பிடித்து வாழ்க்கை நடத்தும் இயல்பினர் நீலநிறப் புன்னை மரத்தின் கொழுவிய நிழலிலே தங்கியிருப்பர் அப்போது குளிர்ந்த பெரிய பரப்பை யுடைய கடலின் கொந்தளிப்பில்லாத நல்ல நேரத்தைப் பார்த்திருப்பர் அந் நேரத்தில் அழகிய கண்களையுடைய முறுக்குள்ள கயிற்றால் பின்னிய வலையை உலர்த்திக் கொண்டிருப்பர் அவ்வாறாய துறைவனிடம் "ஊரில் எழுந்த அலரை அன்னை அறிந்துவிட்டால் இங்கே வாழும் இன்ப*

வாழ்க்கை நமக்கு இல்லாமற் போகும்" என்று எடுத்துரைத் தால் அவர் நம்மை அழைத்துக் கொண்டு சென்றாலும் செல்வார் உப்பு வணிகர் வெண்கல் போன்ற உப்பை விலை பேசிப் பெறுவர் தம் நீண்ட தொடர் வண்டிகளில் படுத்தி ருக்கும் கூட்டமான ஆநிரையை விலக்க ஓசை எழுப்புவர். மணல் வழியில் செலுத்தி முழக்கமிடுவர் இந்த ஓசைகளை வயல் களிலிருக்கும் கரிய கால் வெள்ளை நாரைகள் கேட்டு அஞ்சும் அவ்வாறாய கடற்கரையிலிருக்கும் தாம் வாழும் ஊர்க்கே நம்மை அழைத்துச் செல்வரோ" என்ற ஐயத்தைத் தோழி தலைவியிடம் எழுப்பி உரைத்தாள்

## 170. கண்ணீர் சிந்தினள்!

**பெய்யாது வைகிய கோதை போல**
**மெய் சாயினை, அவர்செய் குறி பிழைப்ப;**
**உள்ளி நொதுமலர் நேர்பு உரை தெள்ளிதின்**
**வாரார் என்னும் புலவி உட்கொளல்**
**ஒழிக மாஎ, நின் செஞ்சத்தானே;**
**புணரி பொருத பூ மணல் அடைகரை,**
**ஆழி மருங்கின் அலவன் ஓம்பி,**
**வலவன் வள்பு ஆய்ந்து ஊர,**
**நிலவு விரிந்தன்றால், கானலானே.** – *உலோச்சனார் நற் 11*

"தலைவியே, தலைவர் செய்த இரவுக்குறி தவறிப் போக, அணியாமலிருந்த பூமாலை போல நீ உடல் மெலிந்தாய் நம் அயலார், "உறுதியாக அவர் வாரார்" என்று சொன்ன உரையை நினைத்து உனது நெஞ்சத்தில் வெறுப்புக் கொள்ளு தலை விடுக. அலை மோதிய, இள மணல் பரந்த கரை யினையுடைய கடலின் பக்கத்தில் திரியும் நண்டுகள் தேர் ஆழியால் நசுங்கிப் போகாமல் பாதுகாத்துத் தேர்ப்பாகன் கடிவாள வாரைப் பிடித்துக் கவனித்து ஊர்ந்து வரக் கானலில் நிலவு விரிந்தது காண்பாயாக. எனவே அவர் வருவார்" என்று தலைவிக்கு விதித்த காவலால், தலைவனைத் தலைவி சந்திக்க முடியவில்லையே என்ற நிலையில் தோழி இவ்வாறு கூறினாள்.

## 171. நாணமும் இழந்தோம்

முழங்கு திரை கொழீஇய மூரி எக்கர்,
நுணங்கு துகில் நுடக்கம் போல, கணம் கொள
ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப!
பூவின் அன்ன நலம் புதிது உண்டு,
நீ புணர்ந்தனையேம்அன்மையின், யாமே
நேர்புடை நெஞ்சம் தாங்கத் தாங்கி,
மாசு இல் கற்பின் மடவோள் குழவி
பேஎய் வாங்கக் கைவிட்டாங்குச்,
சேணும் எம்மொடு வந்த
நாணும் விட்டேம்; அலர்க, இவ் ஊரே!

*– அறிவுடைநம்பி நற் 15*

"முழங்கும் அலைகள் ஒன்று சேர்த்த பெரிய மணல் மேட்டில் நுண்ணிய ஆடையின் அசைவு போலக், கூட்டமான மாலை வாடைக்காற்று தூற்றும்படியான கடற்கரைத் தலைவனே, பூவையொத்த புதிய எம் நலத்தை நீ உண்டாய். ஆனால் நீ ஒன்றிய நட்புக் கொண்டாய் இல்லை யாம், நேர்மையான நெஞ்சத்தால் துயரத்தைத் தாங்கிக் கொண்டு இருக்கிறோம் குற்றமற்ற கற்புடைய பெண் ஒருத்தி தன் குழந்தையைப் பேய் கவர்ந்து கொண்டு போகக் கைவிட்டு இருப்பது போல் நெடுங்காலமாக எம்மோடு உள்ள நாணத்தையும் யாம் கைவிட்டு விடுகிறோம். இவ் ஊரில் அலர் பரவுவதாக யாம் செய்வதற்கு ஒன்றுமில்லை" என்று தோழி தலைவனிடம், தலைவியை மணந்து கொள்ள காலம் கடத்தக் கூடாது என்று வலியுறுத்தினாள்

## 172. நாள் சில தாங்காள் - திரும்பு

இறவுப் புறத்து அன்ன பிணர்படு தடவு முதல்
சுறவுக் கோட்டன்ன முள் இலைத் தாழை,
பெருங் களிற்று மருப்பின் அன்ன அரும்பு முதிர்பு,
நல் மான் உளையின் வேறுபடத் தோன்றி,
விழவுக் களம் கமழும் உரவு நீர்ச் சேர்ப்ப!
இன மணி நெடுந் தேர் பாகன் இயக்கச்,

செலீஇய சேறி ஆயின், இவளே
வருவை ஆகிய சில் நாள்
வாழாளாதல் நற்கு அறிந்தனை சென்மே!

*– நக்கண்ணையார் நற் 19*

*“தாழையானது இறால் மீனின் முதுகு போன்ற சருச்சரை பொருந்திய பெரிய அடியையுடையது; சுறா மீனின் கொம்பு போன்ற விளிம்பில் முள்ளைக் கொண்ட இலையையுடையது; பெரிய ஆண் யானையின் மருப்புப் போன்ற அரும்புகளை உடையது; அந்த அரும்புகள் முதிர்ந்து நல்ல குதிரையின் பிடரி மயிர் போல வேறுபடத் தோன்றி, விழாவின் களம் எங்கும் கமழும். இவ் வளத்தோடு நீர்ப் பெருக்குள்ள சேர்ப்பனே! பல மணிகளையுடைய நெடிய தேரினை, பாகன் செலுத்த உன் ஊர் திரும்பும் நினைப்போடு புறப்படுவாயானால், இவள் நீ திரும்பி வரும் எல்லையாகிய சில நாள்கள் கூட வாழ மாட்டாள். அதனை நீ நன்றாக அறிந்து கொண்டு செல்வாயாக” என்று கூடிக் குலவிய தலைவனைத் தோழி அறிவுறுத்தினாள்.*

## 173. தாய் என்ன கருதினாளோ?

நீயும் யானும், நெருநல், பூவின்
நுண் தாது உறைக்கும் வண்டினம் ஓப்பி,
ஒழி திரை வரித்த வெண் மணல் அடைகரைக்
கழி சூழ் கானல் ஆடியது அன்றிக்,
கரந்து நாம் செய்தது ஒன்று இல்லை; உண்டு எனின்,
பரந்து பிறர் அறிந்தன்றும் இலரே – நன்றும்
எவன் குறித்தனள்கொல், அன்னை?– கயந்தோறு
இற ஆர் இனக் குருகு ஒலிப்பச், சுறவம்
கழி சேர் மருங்கின் கணைக் கால் நீடி,
கண்போல் பூத்தமை கண்டு, ‘நுண் பல
சிறு பாசடைய நெய்தல்
குறுமோ, சென்று’ எனக் கூறாதோளே.

*– குடவாயிற் கீரத்தனார் நற் 27*

*“தோழியே, நீயும் நானும் நேற்று பூவின் நுண்ணிய தாதுகளில் வீழும் வண்டுகளை ஓட்டி, ஓய்ந்துபோன*

அலைகள் அழகுபடுத்திய வெண்மணல் நிறைந்த கரையில் உப்பங்கழி சூழ்ந்த சோலையில் விளையாடியது தவிர மறைத்து நாம் செய்தது ஒன்றுமில்லை. ஒரு கால் ஏதேனும் உண்டு எனின், அது வெளிப்பட்டுப் பிறர் அறிந்ததும் இல்லை. அப்படியிருக்க, பொய்கைதோறும் இறால் மீனைத் தின்னும் குருகுக் கூட்டம் ஒலிப்பச் சுறா மீன் கழி சேர்ந்த இடத்தில் திரண்ட தண்டு நீண்டு, நுண்ணிய பலவாகிய சிறிய பசிய இலைகளையுடைய நெய்தல், கண்போலப் பூத்திருப்பதைக் கண்டும், அன்னை நம்மை நோக்கி, "சென்று அவற்றைப் பறித்துச் சூடுக" என்று கூறாதவள் என்ன கருதியோ? தெரியவில்லையே," என்று தோழி தலைவிக்குக் கூறுவது போலத் தலைவனுக்குக் கூறினாள்.

## 174. அனைத்திலும் வெறுப்பே

மா இரும் பரப்பகம் துணிய நோக்கிச்,
சேயிறா எறிந்த சிறு வெண் காக்கை
பாய் இரும் பனிக் கழி துழைஇப், பைங் கால்
தான் வீழ் பெடைக்குப் பயிரிடூஉ, சுரக்கும்
சிறு வீ ஞாழல் துறையுமார் இனிதே;
பெரும் புலம்பு உற்ற நெஞ்சமொடு, பல நினைந்து,
யானும் இனையேன் – ஆயின், ஆனாது
வேறு பல் நாட்டில் கால் தர வந்த
பல உறு பண்ணியம் இழிதரு நிலவுமணல்
நெடுஞ் சினைப் புன்னைக் கடுஞ் சூல் வெண் குருகு
உலவுத் திரை ஓதம் வெரூஉம்
உரவு நீர்ச் சேர்ப்பனொடு மணவா ஊங்கே.

*– நக்கீரர் நற் 31*

"வேறு பல நாட்டிலிருந்து ஓயாமல் மரக்கலங்கள் காற்றால் செலுத்தப்பட்டு வந்து, பலவகைப் பண்டங்களும் இறங்கும் நிலாப்போன்ற மணற் பரப்பிலேயுள்ள நெடிய புன்னை மரக்கிளையிலிருக்கும் முதிர்ந்த கருவையுடைய வெள்ளையான குருகு, உலவும் அலைவெள்ளத்திற்கு அஞ்சும் படியான வலிய நீர்ப் பரப்பையுடைய சேர்ப்பனோடு நட்புக் கொள்வதற்கு முன்பு மிகப்பெரிய நீர்ப் பரப்பில் தெளிவாகப்

பார்த்துச் செவ்விய இறால் மீனைக் கவ்விய சிறு வெண் காக்கை இரையைக் கொண்டுவந்து, பரவிய பெரிய குளிர்ந்த உப்பங் கழியில் துழாவித் தான் விரும்பும் பசிய காலையுடைய தன் பெடையை அழைத்து அதற்குக் கொடுக்கும்படியான சிறிய பூவையுடைய ஞாழல் துறையும் எனக்கு இனிமையாய் இருந்தது. ஆனால் சேர்ப்பன் கைவிட்ட பின் அத் துறையும் இனிமை அற்றதாயிற்று. பெரிய வருத்தமடைந்த நெஞ்சத்தோடு பல பல நினைந்து யானும் இவ்வாறு ஆயினேன்" என்று தலைவி மனக்கவலையுடன் தோழிக்கு உரைத்தாள்

## 175. ஏனோ பசந்தன விழிகள்?

பொங்கு திரை பொருத வார் மணல் அடைகரைப்
புன் கால் நாவல் பொதிப் புற இருங் கனி
கிளை செத்து மொய்த்த தும்பி, பழம் செத்துப்
பல் கால் அலவன் கொண்ட கோட்கு அசாந்து,
கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்
இரை தேர் நாரை எய்தி விடுக்கும்
துறை கெழு மாந்தை அன்ன இவள் நலம்
பண்டும் இற்றே; கண்டிசின் தெய்ய;
உழையின் போகாது அளிப்பினும், சிறிய
ஞெகிழ்ந்த கவின் நலம்கொல்லோ? – மகிழ்ந்தோர்
கட்களி செருக்கத்து அன்ன
காமம்கொல்? – இவள் கண் பசந்ததுவே!

*– அம்மூவனார் நற் 35*

"மேலெழும் அலைகள் தாக்கிய, நீண்ட மணல் பரந்த கரையிலே புல்லிய காம்புடைய நாவலின் கரிய கனி, களி பொதிந்த மேற்புறமுள்ளதொன்று உதிர்ந்தது அதைத் தும்பி வண்டுகள் தம் இனம் எனக் கருதி மொய்த்தன பல கால்களையுடைய அலவன் என்னும் நண்டு அதனைப் பழம் எனக் கருதிக் கைக் கொள்ளச் சென்றது. அக் கொள்ளுகைக்கு வண்டுகள் வருந்தி கைக் கொள்ள விடாமல் யாழ் நரம்போசை போல மிக்கு ஒலித்தன அந்த ஆரவாரத்தை அங்கே இரை தேடும் நாரை கேட்டுக் கனி கிடக்குமிடம் அடைந்து பூசலைத் தீர்த்தது. அவ்வாறாய கடற்துறை மிக்க மாந்தை

என்னும் ஊர் போன்ற இவள் நலம் பண்டும் இவ்வாறே இருந்தது நீ காண்பாயாக பக்கத்திலிருந்து விலகிப் போகா மல் நீ தலையளி செய்தாலும், இவள்கண் பசந்தது. சிறிது நெகிழ்ந்த அழகின் மிகுதியோ? கள் உண்டார்க்குக் கள்ளின் களிப்பால் ஏற்படும் மயக்கம் போன்ற காமமோ? தெரிய வில்லை," என்று தலைவிக்கு மணமான மறுநாள் தோழியிடம் தலைவன் 'நன்கு செய்தனை' என்றபோது அவன் பண்பு பாராட்டிக் கூறுகிறாள் தோழி

## 176. வருந்தாது எவ்வாறு இருப்பேன்?

வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்பப்,
பாட்டம் பொய்யாது பரதவர் பகர,
இரும் பனந் தீம் பிழி உண்போர் மகிழும்
ஆர் கலி யாணர்த்து ஆயினும், தேர் கெழு
மெல்லம் புலம்பன் பிரியின், புல்லெனப்
புலம்பு ஆகின்றே – தோழி, கலங்கு நீர்க்
கழி சூழ் படப்பைக் காண்டவாயில்,
ஒலி காவோலை முள் மிடை வேலி,
பெண்ணை இவரும் ஆங்கண்
வெண் மணற் படப்பை, எம் அழுங்கல் ஊரே.

*– உலோச்சனார் நற் 38*

"தோழி, கலங்கிய நீரையுடைய கழிகள் சூழ்ந்த கொல்லை களையுடைய தாழைத் துறையில் தழைத்து வளர்ந்த முற்றிய பனை ஓலையோடு முள்களையும் சேர்த்துக் கட்டிய வேலி யின் பக்கத்தில் பனை மரங்கள் வளர்ந்திருக்கும். அவ் இடத்தில் வெள்ளை நிறமான மணற் கொல்லைகளையுடைய ஆரவாரமிக்க நம் ஊரில், மீன் வேட்டை பொய்யாது, 'வலை வளம்' சிறப்பாயுள்ளது முகில் பொய்யாது என்று பரதவர் பகர் கின்றனர் கரிய பனையின் இனிய கள்ளை உண்போர் மகிழ்கின்றனர் இவ்வாறு ஆரவார மிக்க புது வருவாயை யுடையதெனினும், தேர் மிக்க நெய்தல் நிலத் தலைவன் நம்மை விட்டுப் பிரியின் பொலிவிழந்தாற்போலக் காணப் பட்டு வருத்தம் தருகின்றது," என்று தலைவி வேதனையுடன் தோழிக்குக் கூறினாள்

## 177. நீ அல்லன் எமக்கு ஏற்றவன்!

இவளே
கானல் நண்ணிய காமர் சிறுகுடி,
நீல் நிறப் பெருங் கடல் கலங்க உள்புக்கு
மீன் எறி பரதவர் மகளே; நீயே,
நெடுங் கொடி நுடங்கும் நியம மூதூர்க்
கடுந் தேர்ச் செல்வன் காதல் மகனே;
நிணச் சுறா அறுத்த உணக்கல் வேண்டி,
இனப் புள் ஒப்பும் எமக்கு நலன் எவனோ?
புலவு நாறுதும்; செல நின்றீமோ!
பெரு நீர் விளையுள் எம் சிறு நல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ அன்றே;
எம்மனோரில் செம்மலும் உடைத்தே! – *ஆசிரியர் ? நற் 45*

*"இவளோ, கடற்கரையை அடுத்துள்ள அழகிய சிறு குடியில் வாழும், நீலநிறப் பெருங்கடல். கலங்க அதன் உள்ளே புகுந்து மீன் வேட்டையாடும் பரதவர் மகள் ஆவாள். நீயோ, உயர்ந்த கொடியசையும் கடைத் தெருவுள்ள மூதூரில் வாழும் விரைந்த செலவினையுடைய தேருக்கு உரிய செல்வரின் அன்புமகன் ஆவாய். கொழுப்புடைய சுறாமீனை அறுத்த துண்டங்களை உலர்த்த வேண்டிக் கூட்டமான பறவைகளை ஓட்டும் எமக்கு உன்னால் நன்மை என்ன? யாம் புலால் நாறுவோம் நீ அகன்று நில் பெரு நீராகிய கடலுள் விளையும் பொருள்களை வைத்து வாழும் எம் சிறிய நல்ல வாழ்க்கை உம்மோடு பொருத்தமுடையதன்று. எம் மனோராகிய பரதவரில் செல்வர் மக்களும் உளர்," எனத் தோழி இரு குடும்பத்திற்கும் உள்ள நிலையை எடுத்துக் கூறி விலக்கினாள்.*

## 178. குற்றம் ஏதேனும் உள்ளதோ?

படு திரை கொழீஇய பால் நிற எக்கர்த்
தொடியோர் மடிந்தெனத் துறை புலம்பின்றே;
முடிவலை முகந்த முடங்கு இறாப் பரவைப்
படு புள் ஒப்பலின் பகல் மாய்ந்தன்றே;

கோட்டு மீன் எறிந்த உவகையர் வேட்டம் மடிந்து.
எமரும் அல்கினர்; 'ஏமார்ந்தனம்' எனச்
சென்று நாம் அறியின், எவனோ – தோழி,
மன்றப் புன்னை மாச் சினை நறு வீ
முன்றில் தாழையொடு கமழும்
தெண் கடற் சேர்ப்பன் வாழ் சிறு நல் ஊர்க்கே?

*– நெய்தல் தத்தனார் நற் 49*

*"பெரிய அலைகள் கொழித்த பால் போன்ற நிறத்தை யுடைய மணல்மேட்டில் வளையல்களையுடைய பெண்கள் செயற்படாததால் அத் துறை தனிமையாயிற்று முடிச்சு களைக் கொண்ட வலையால் முகந்த வளைந்த இறால் மீன்கள் கடல் போல் பரந்து கிடப்பதில் வந்துபடியும் பறவைகளை ஓட்டுதலால் பகல் மறைந்தது. கொம்பையுடைய மீன்களை வேட்டையாடிய மகிழ்ச்சியினராய் வேட்டை யாடுதலை விட்டு நம் உறவினரும் இல்லத்தில் தங்கினர் ஆதலால் தோழி, பரதவர் முற்றத்திலிருக்கும் பொது மன்றம் போல் அமைந்த புன்னை மரத்தின் பெரிய கிளையிலுள்ள நல்ல மலர்கள் அயலிலுள்ள தாழையொடு சேர்ந்த கமழும் தெளிந்த கடற் சேர்ப்பன் வாழும் சிறிய நல்ல ஊர்க்குச் சென்று நாம் அவனிடம், "நீ இல்லாததால் மனங் கலங்கி னோம்" என்று கூறி அவன் கருத்தை நாம் அறிந்தால் குற்றம் என்ன?" எனத் தோழி இரவுக் குறிக்கு இசைய தலைவி யிடம் வினவினாள்*

## 179. நாரையே தூது செல்லாய்

வளை நீர் மேய்ந்து, கிளை முதல் செலீஇ,
வாப் பறை விரும்பினை ஆயினும், தூச் சிறை
இரும் புலா அருந்தும் நின் கிளையொடு சிறிது இருந்து –
கருங் கால் வெண் குருகு! – எனவ கேண்மதி:
பெரும் புலம்பின்றே, சிறு புன் மாலை;
அது நீ அறியின், அன்புமார் உடையை;
நொதுமல் நெஞ்சம் கொள்ளாது, என் குறை
இற்றாங்கு உணர உரைமதி – தழையோர்
கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்

தெண் திரை மணிப் புறம் தைவரும்
கண்டல் வேலி நும் துறை கிழவோற்கே!

*- சேந்தங் கண்ணனார் நற் 54*

*"கரிய கால்களையுடைய வெண்மையான குருகே! வளைந்த நீர்ப் பரப்பில் மேய்ந்து உன் இனத்தோடு சேர்ந்து தாவிப் பறத்தலை விரும்பினை ஆயினும் மிக்க புலால் அருந்தும் தூய்மையான சிறகையுடைய உன் இனத்தோடு சிறிது நேரம் தங்கியிருந்து எனது செய்தியைக் கேட்பாயாக. சிறிய புல்லிய மாலைக் காலம் எனக்குப் பெரிய வருத்தம் செய்தது. அதை நீ அறிந்தால் அன்பு கொள்வாய். அன் பில்லாத நெஞ்சம் கொள்ளாது என் குறையை இத் தன்மைய தென்று உரைப்பாயாக தழை உடுப்பவர் கொய்யும் குழை அரும்பிய இளைய ஞாழல் மரத்தையும் தெளிந்த கடலலை தடவிவரும் கரிய புறத்தையுடைய கண்டல் மரத்தையும் வேலியாகவுடைய கடல் துறையை உடையோற்கு உணர உரைப்பாயாக," என்று தன் வேட்கையைத் தலைவி நாரை யிடம் கூறி அமைதியுற்றாள்.*

## 180. தலைவன் குதிரைகள் துன்புறும்!

பெரு முது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறு தோட் கோத்த செவ் அரிப்பறையின்
கண்ணகத்து எழுதிய குரீஇப் போலக்,
கோல் கொண்டு அலைப்பப் படீஇயர் மாதோ—
வீரை வேண்மான் வெளியன் தித்தன்
முரசு முதல் கொளீஇய மாலை விளக்கின்
வெண் கோடு இயம்ப, நுண் பனி அரும்பக்,
கையற வந்த பொழுதோடு மெய் சோர்ந்து,
அவல நெஞ்சினம் பெயர, உயர் திரை
நீடு நீர்ப் பனித்துறைச் சேர்ப்பன்
ஓடு தேர் நுண் நுகம் நுழைந்த மாவே!

*- முதுகூற்றனார் நற் 58*

*"மிகுந்த வழிவழிச் செல்வமுடையோரின் பொன்னணி கள் பூண்ட புதல்வர்கள் சிறிய தோளிலே கோக்கப்பட்ட செவ்விதாக ஒலிக்கும் பறையிலே எழுதிய குருவி அடிபடுதல்*

போலக் கோலால் அடிக்கப்படுவனவாகுக. யாவை எனின், உயர்ந்தெழும் அலைகளையுடைய கடலின் குளிர்ந்த துறை களைக் கொண்ட சேர்ப்பனது ஓடும் தேரின் நுண்ணிய நுகத்திற் பூட்டிய குதிரைகள். வீரை வேண்மான் வெளியன் என்னும் தித்தனது முரசு முதலானவை ஒலிக்கவும், ஏற்றப் பட்ட வரிசையான விளக்குகள் போல வெண்மையான சங்குகள் ஒலிக்கவும் மாலைப் பொழுது வந்தது. நுண்ணிய பனித் துளிகள் உண்டாகச் செயலற்று வருந்துமாறு வந்த அம் மாலைப் பொழுதிலே உடல் சோர்ந்து வருந்திய மனத்தோடு யாம் திரும்பிச் செல்வோம்" என்று பகற்குறி முடிந்து செல்லும் தலைவனைத் தங்கிப் போகத் தோழி வேண்டினாள்.

## 181. இவ் ஊர் அறம் உடையதன்று

உரவுக் கடல் உழந்த பெரு வலைப் பரதவர்
மிகு மீன் உணக்கிய புது மணல் ஆங்கண்,
கல்லென் சேரிப் புலவல் புன்னை
விழவு நாறு விளங்கு இணர் அவிழ்ந்து உடன் கமழும்
அழுங்கல் ஊரோ அறன் இன்று; அதனால்,
அறன் இல் அன்னை அருங்கடிப் படுப்பப்,
பசலை ஆகி விளிவது கொல்லோ –
புள்உற ஒசிந்த பூ மயங்கு அள்ளல்
கழிச் சுரம் நிவக்கும் இருஞ் சிறை இவுளி
திரை தரு புணரியின் கழூஉம்
மலி திரைச் சேர்ப்பனொடு அமைந்த நம் தொடர்பே?.

– *உலோச்சனார் நற் 63*

"பரந்த கடலில் வருந்திய பெரிய வலையையுடைய பரதவர் மிக்க மீன்களை உலர வைத்த புதிய மணற் பரப்பில், கல் என்னும் ஒலியையுடைய சேரியில், புலால் வீசும் இடத்தி லுள்ள புன்னை மரம் விழாக் காலத்து மணக்கும் விளங்குகிற பூங்கொத்துகள் அவிழ்ந்து சேர்ந்து கமழும் ஆரவாரமுள்ள ஊரே அறன் இல்லாதது அதனால் அறன் இல்லாத அன்னை அருங்காப்புச் செய்தாள் பறவை உட்கார ஒடிந்த தால் விழுந்த பூக்கள் கலந்த சேற்றின் குழம்பு, கழியாகிய

வழியில் ஓடும் பெரிய கடிவாளக் காவலுள்ள குதிரைகளின் கால்களை அலைகள் தரும் கடலைப் போலக் கழுவும் அலை மலிந்த கடற் சேர்ப்பனொடு ஏற்பட்ட நம் நட்பு வருத்தமாக மாறிச் சாவது தானோ?” என அலர் அச்சத்தால் தோழி தனக்குத் தானே சொல்லிக் கொள்ளல் போல் பக்கத்தில் உள்ள தலைவனுக்கு உணர்த்தினாள்.

## 182. தங்கிச் செல்லின் குறை வருமோ?

சேய் விசும்பு இவர்ந்த செழுங்கதிர் மண்டிலம்
மால் வரை மறைய, துறை புலம்பின்றே;
இறவு அருந்தி எழுந்த கருங் கால் வெண் குருகு
வெண் கோட்டு அருஞ் சிறைத் தாஅய், கரைய
கருங்கோட்டுப் புன்னை இறைகொண்டனவே;
கணைக் கால் மா மலர் கரப்ப, மல்குகழித்
துணைச் சுறா வழங்கலும் வழங்கும்; ஆயிடை,
எல் இமிழ் பனிக் கடல், மல்கு சுடர்க் கொளீஇ,
எமரும் வேட்டம் புக்கனர்; அதனால்,
தங்கின் எவனோ தெய்ய – பொங்கு பிசிர்
முழுவு இசைப் புணரி எழுதரும்
உடை கடற் படப்பை எம் உறைவின் ஊர்க்கே?

*– பேரி சாத்தனார் நற் 67*

“சிவந்த வானில் ஏறிய செழுமையான கதிர்களையுடைய ஞாயிறு பெரிய மலையில் மறைந்தது. கடற்றுறை தனிமை யாயிற்று. கரிய கால்களையுடைய வெண்குருகுகள் இறால் மீன்களைத் தின்று எழுந்தன. வெண்மையான உப்புக் குவட்டின் மேல் அருமையான தம் சிறகைக் கொண்டு பறந்தன. கரையிலிருந்த கரிய கிளைகளையுடைய புன்னை மரங்களில் போய்த் தங்கின. திரண்ட தண்டையுடைய சிறந்த நெய்தல் மலர் மறைய, நீர் நிறைந்த கழியிலே ஆணும் பெண்ணுமாகச் சுறா மீன்கள் திரிந்தாலும் திரியும். அப்போது, இரவில் ஒலிக்கும் குளிர்ந்த கடலில், நிறைந்த விளக்கைக் கைக் கொண்டு எம் சுற்றத்தாரும் மீன் வேட்டைக்குப் புகுந்தனர். அதனால் பொங்கும் நீர்த்துளிகளையும் முழவு போன்ற ஒலிகளையுமுடையது கடலலைகள் தோன்றும்

*படியான உடைந்த கடற்கொல்லைகளையுடைய, யாம் வாழும் ஊரில் நீ இரவில் தங்கினால் என்ன?" என்று பகற்குறி வந்துணர்ந்து செல்லும் தலைவனிடம் விரைந்து மணக்கச் சொன்னாள் தோழி.*

## 183. கிடையாது போகுமோ நட்பு?

'பேணுப பேணார் பெரியோர்' என்பது
நாணுத் தக்கன்று, அது காணுங்காலை;
உயிர் ஓரன்ன செயிர் தீர் நட்பின்
நினக்கு யான் மறைத்தல் யாவது? மிகப்பெரிது
அழிதக்கன்றால் தானே; கொண்கன்,
'யான் யாய் அஞ்சுவல்' எனினும், தான் எற்
பிரிதல் சூழான் மன்னே; இனியே
கானல் ஆயம் அறியினும், 'ஆனாது,
அலர் வந்தன்றுகொல்?' என்னும்; அதனால்,
'புலர்வதுகொல், அவன் நட்பு!' எனா
அஞ்சுவல் – தோழி! – என் நெஞ்சத்தானே!

*– இளம்போதியார் நற் 72*

*'தோழி, "பெரியோர் பேண வேண்டியவற்றைப் பேணிப் போற்ற மாட்டார்" என்பது ஆராய்ந்து பார்க்கும் போது தெரிவதால் அது நாணத் தக்கதாத உள்ளது ஓர் உயிர் போல் இயைந்த குற்றந் தீர்ந்த நட்பினையுடைய உனக்கு யான் மறைப்பது எப்படி முடியும்? மிகப் பெரிதும் வருந்த வேண்டியதாய் உள்ளது. முன்பு, "யான் தாய்க்கு அஞ்சுவேன்" என்றாலும் தலைவன்தான் நம்மைப் பிரிய நினையான். அது கழிந்தது இப்போது கடற்கரைச் சோலையில் விளையாடும் தோழியர் கூட்டம் அறிந்தாலும் தாங்க முடியாமல் "களவு வெளிப்பட்டு அலர் வந்து விடுமோ" என்கின்றான். அதனால் 'அவன் நட்புச் சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே வந்து இறுதியில் இல்லையாய் விடுமோ' என்று என் உள்ளத் துள்ளே அஞ்சுவேன்," என்று தோழி பாதுகாவலிலுள்ள தன் தலைவிக்கு உரைப்பவள் போலத் தலைவனுக்கு உணர்த்தினாள்*

## 184. நீ இங்கு வராதே!

வடிக் கதிர் திரித்த வல் ஞாண் பெரு வலை
இடிக் குரற் புணரிப் பௌவத்து இடுமார்,
நிறையப் பெய்த அம்பி, காழோர்
சிறை அருங் களிற்றின், பரதவர் ஒய்யும்
சிறு வீ ஞாழற் பெருங் கடற் சேர்ப்பனை,
'ஏதிலாளனும்' என்ப; போது அவிழ்
புது மணற் கானல் புன்னை நுண் தாது,
கொண்டல் அசை வளி தூக்குதொறும், குருகின்
வெண் புறம் மொசிய வார்க்கும், தெண் கடல்
கண்டல் வேலிய ஊர், 'அவன்
பெண்டு' என அறிந்தன்று; பெயர்த்தலே அரிதே!

– *உலோச்சனார் நற் 74*

*"திருத்தமாக ஒளிவிடும்படி திரிக்கப்பட்ட வன்மையான கயிற்றால் பின்னிய பெரிய வலை. அதை, இடிபோலக் குரல் எழுப்பும் அலைகளையுடைய கடலில் இடும்பொருட்டு, நிறைய ஏற்றப்பட்ட தோணியைப் பரதவர் கொண்டு செல்வர். குத்துக்கோலை உடையோர் பிணித்துச் செல்லும் அடக்குதற் கரிய களிற்றினைப் போலத் தோணியைக் கொண்டு செல்வர். சிறிய மலர் கொண்ட ஞாழல் மரங்களையுடைய பெருங்கடற் சேர்ப்பனை 'ஏதிலாளன்' ஆயினான் எனவும் கூறுவர். புதிய மணலைக் கொண்ட கானலிலுள்ள புன்னையின் மொட்டு அவிழ்ந்த நுண்ணிய தாது, கொண்டல் என்னும் கீழைக்காற்று வீசுந்தோறும் குருகின் வெளிய முதுகில் நெருங்கத் தூர்க்கும். அவ்வாறாய தெளிந்த கடற்கரையிலுள்ள கண்டல் என்னும் மரம் நிரம்பிய வேலையையுடைய இவ் ஊர், அவன் பெண்டு, என அறிந்தது. அதை மாற்றல் யார்க்கும் அரிது. ஆகலினால் பாண, நீ ஈண்டு வாராதே," என்று தூதாக வந்த பாணனிடம் வாயில் மறுத்துச் சீறி விழுந்தாள் தலைவி.*

## 185. துன்பத்தினின்றும் விடுபட்டோம்

கோட் சுறா வழங்கும் வாள் கேழ் இருங் கழி
மணி ஏர் நெய்தல் மா மலர் நிறையப்,

பொன் நேர் நுண் தாது புன்னை தூஉம்,
வீழ் தாள் தாழைப் பூக் கமழ், கானல்,
படர் வந்து நலியும் சுடர்செல் மாலை,
நோய்மலி பருவரல் நாம் இவண் உய்கம்;
கேட்டிசின் – வாழி, தோழி, – தெண் கழி
வள் வாய் ஆழி உள் வாய் தோயினும்,
புள்ளு நிமிர்ந்தன்ன பொலம் படைக் கலி மா
வலவன் கோல் உற அறியா,
உரவு நீர்ச் சேர்ப்பன், தேர்மணிக் குரலே!

– *கீரங்கீரனார் நற் 78*

*"தோழியே! வாழி கேள், கொல்ல வல்ல சுறாமீன் வழங்கும் விளக்கமான நிறங் கொண்ட பெரிய கழியில் நீலமணிபோல மலர்ந்த நெய்தலின் சிறந்த மலர் நிறையும் படி பொன் போன்ற நுண்ணிய தாதினைப் புன்னை மரம் தூவும். விழுது ஊன்றிய தாழையின் பூ கமழும். அவ்வாறாய கானலில் ஞாயிறு மறைந்த மாலைக் காலத்தில், காதல் நினைவால் உண்டான துன்பம் வந்து வருத்தும். இந் நோய் மிக்க துன்பத்தினின்றும் நாம் இனி இங்கு உய்ந்து வாழ்வோம். தெளிந்த கழியில் பெருமை வாய்ந்த தேர் ஆழியின் உள்வாய் வரை அமுங்கினாலும், தேர்ப் பாகன் தாற்றுக் கோல் பட்டறியாத அழகிய கலன் அணிந்த - பறவை நிமிர்ந்தது போலச் செல்லும் குதிரை பூட்டிய பரந்த நீர்ச் சேர்ப்பன் தேரின் மணிக்குரல் கேட்பாயாக" என்று பொருள் தேடச் சென்ற தலைவன், தலைவியிடம் வருவதைத் தோழி கூறினாள்.*

## 186. விழித்ததும் கனவின்பம் போயிற்று

உள் ஊர் மாஅத்த முள் எயிற்று வாவல்
ஓங்கல்அம் சினைத் தூங்கு துயில் பொழுதின்,
வெல் போர்ச் சோழர் அழிசிஅம் பெருங் காட்டு
நெல்லி அம் புளிச் சுவைக் கனவியாஅங்கு,
அது கழிந்தன்றே – தோழி, – அவர் நாட்டுப்
பனி அரும்பு உடைந்த பெருந் தாள் புன்னைத்
துறை மேய் இப்பி ஈர்ம் புறத்து உறைக்கும்

சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்,
பெருந் தண் கானலும், நினைந்த அப் பகலே.

*– நக்கண்ணையார் நற் 87*

*"தோழி, ஊரின் உள்ளே மாமரம் உள்ளது அதன் உயர்ந்த கிளையில் முள்போன்ற பற்களையுடைய வௌவால் தொங்கித் தூங்கிக் கொண்டிருக்கும்போது, வெல்லும் போரை யுடைய சோழர்குடியிற் பிறந்த அழிசி என்பானின் அழகிய பெரிய காட்டிலுள்ள நெல்லிக்கனியின் புளிச் சுவையை நினைத்துக் கனவில் சுவைத்து மகிழும். அது போல அவர் நாட்டிலுள்ள பெரிய அடியையுடைய புன்னை மரத்தின் குளிர்ந்த அரும்புகள் மலர்ந்த கடற்கரைத் துறையில் மேய்ந்து திரியும் சிப்பியின் குளிந்த முதுகின் மேலே வீழும்படியான காட்சியைக் கண்டு மகிழும் சிறுகுடிப் பரதவர், மகிழ்ச்சியை யும் பெரிய குளிர்ந்த கானலையும் நினைத்த அப்பொழுதே நான் அவரோடு இருப்பதாகக் கனவில் மகிழ்கிறேன். அதுவும் இப்போது கழிந்தது" என்று தலைவனைப் பிரிய ஆற்றா ளாய்த் தலைவி கனவு கண்டு தன் தோழிக்கு உரைத்தாள்.*

## 187. மணங் கொள்ள வருக

நீ உணர்ந்தனையே – தோழி, – வீ உகப்
புன்னை பூத்த இன் நிழல் உயர் கரைப்
பாடு இமிழ் பனிக் கடல் துழைஇ, பெடையோடு
உடங்கு இரை தேரும் தடந் தாள் நாரை
ஐய சிறு கண் செங் கடைச் சிறு மீன்,
மேக்கு உயர் சினையின் மீமிசைக் குடம்பை,
தாய்ப் பயிர் பிள்ளை வாய்ப் படச் சொரியும்
கானல் அம் படப்பை ஆனா வண் மகிழ்ப்
பெரு நல் ஈகை நம் சிறு குடிப் பொலிய,
புள் உயிர்க் கொட்பின் வள் உயிர் மணித் தார்க்
கடு மாப் பூண்ட நெடுந் தேர்
நெடு நீர்ச் சேர்ப்பன் பகல் இவண் வரவே?

*– பிசிராந்தையார் நற் 91*

*"தோழியே, மலர்கள் உதிரும்படி புன்னை மரம் பூத்தது. அம் மரம் உயர்ந்த கரையில் உள்ளது. அங்கு இனிய நிழல்*

உண்டு. நீண்ட காலையுடைய நாரை தன் பெடையோடு சேர்ந்து ஓசை முழங்கும் குளிர்ந்த கடலில் இரைதேடும். மெல்லிய சிறு கண்ணோடு சிவந்த வாலையுமுடைய சிறிய மீன்களைப் பிடித்து, மேலே உயர்ந்த கிளையிலுள்ள கூட்டி லிருந்து தாயைக் கூவியழைக்கும் நாரைப் பிள்ளையின் வாயில் கொடுக்கும். இவ்வாறாய கடற்கரைச் சோலையையும், கொல்லையையும், கெடாத வளவிய மகிழ்ச்சி மிக்க பெரிய நல்ல ஈகையையும் உடையது நம் சிறுகுடி. பறவைகள் சுழன்று ஒலித்தாற் போன்ற வளம் பொருந்தி, ஒலியை எழுப்பும் மணிமாலையுடைய விரைவாகச் செல்லும் குதிரை கள் பூட்டிய பெரிய தேரின் மேல் ஏறி நீண்ட கடற்கரைக்குத் தலைவன் நம் சிறுகுடி பொலிவு பெறப் பகலில் இங்கு வருவதை நீ உணர்ந்தாயா?" என்று தலைவன் பகல் பொழு தில் பலரும் காண வரத் தோழி தலைவியிடம் மகிழ்வுடன் உரைத்தாள்.

## 188. இவன் என்ன ஆண்மகன்

**நோய் அலைக் கலங்கிய மதன் அழி பொழுதில்,**
**காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்;**
**யானே, பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்கி –**
**கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ**
**மண்ணாப் பசு முத்து ஏய்ப்ப, குவி இணர்ப்**
**புன்னை அரும்பிய புலவு நீர்ச் சேர்ப்பன்**
**என்ன மகன்கொல் – தோழி – தன்வயின்**
**ஆர்வம் உடையர் ஆகி,**
**மார்பு அணங்குறுநரை அறியாதோனே?**

*– இளந்திரையனார் நற் 94*

"தோழி, காமநோய் அலைத்துக் கலக்குகிறது; வலிமை அழிந்து போகிறது. அந் நேரத்தில் தன் காமத்துப் பற்றிச் சொல்லுவது ஆண்மகனுக்குப் பொருந்தும். ஆனால் யான் என் பெண்மை தடுக்க, நுண்ணிதாகக் காம நோயைத் தாங்கிக் கொண்டிருக்கிறேன் கைத் திறமையுடைய பொற் கொல்லன் அழகுபெறக் கழுவாத - செப்பம் இடாத - பசிய முத்துப் போன்றது என் பெண்மை. குவிந்த கொத்தான

மலர்களையுடைய புன்னை மரத்தையும், புலால் நாறும் கடல் துறையையும் உடைய சேர்ப்பனான என் காதலன் என்ன மாந்தன்? தன்னிடத்தில் ஆர்வம் உடையவராகி இருப்பதோடு தன் மார்பால் அணங்கப்பட்டும் வருந்துகிற வரைப் பற்றி அறியாமலிருப்பவன் என்ன மாந்தனோ? விளங்கவில்லையே" என்று தலைவன் கேட்கும் வண்ணம் தலைவி தோழிக்கு உரைத்தாள்.

## 189. உருகி நின்றனையே!

இதுவே,
'நறு வீ ஞாழல் மா மலர் தாஅய்,
புன்னை ததைந்த வெண் மணல் ஒரு சிறை,
புதுவது புணர்ந்த பொழிலே; உதுவே,
பொம்மல் படு திரை நம்மோடு ஆடிப்,
புறம் தாழ்பு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்
துவரினர் அருளிய துறையே; அதுவே,
கொடுங் கழி நிவந்த நெடுங்கால் நெய்தல்
அம் பகை நெறித் தழை அணிபெறத் தைஇ,
தமியர் சென்ற கானல் என்று ஆங்கு
உள்ளுதோறு உள்ளுதோறு உருகி
பைஇப் பையப் பசந்தனை பசப்பே.

*– கோக்குள முற்றனார் நற் 96*

"இது சோலை ஞாழலின் நறுமண மலர், புன்னையின் சிறந்த மலர், இரண்டும் உதிர்ந்து பரவி நெருங்கிக் கிடந்த வெண்மணற் பரப்பின் ஒரு பகுதியில்தான் என்னைப் புதுவ தாகப் புணர்ந்தது அந்தப் பொழில் இது இது துறை; பொலி வுள்ள கடலில் என்னோடு நீராடி என் முதுகில் தாழ்ந்து இருண்டு கிடந்த விளங்கிய ஐம்பாற் கூந்தலைத் துவட்டி அருளிய துறை இது. அது கழிக்கரைச் சோலை வளைந்த தண்டுயர்ந்த நீண்ட காம்புடைய நெய்தலின் அழகுற மாறு படத் தொடுத்த நெறிவுடைய தழையுடையை அழகுபெற எனக்கு உடுத்தித் தமியர் சென்ற கானல் அது. இவ்வாறு நினைந்து நினைந்து உள்ளம் உருகி மெல்ல மெல்லப் பசந்தே போயினாய். இனி எவ்வாறு உய்குவாய்" என்று

*தலைவன் கேட்கும் வண்ணம் தோழி தலைவியிடம் உரைத்தாள்.*

## 190. இனிமையுடையதாய் இருந்தது அன்று!

முற்றா மஞ்சட் பசும் புறம் கடுப்பச்
சுற்றிய பிணர சூழ் கழி இறவின்
கணம் கொள் குப்பை உணங்கு திறன் நோக்கிப்,
புன்னை அம் கொழு நிழல் முன் உய்த்துப் பரப்பும்
துறை நணி இருந்த பாக்கமும் உறை நனி
இனிதுமன்; அளிதோ தானே– துனி தீர்ந்து,
அகன்ற அல்குல் ஐதுஅமை நுசுப்பின்,
மீன் எறி பரதவர் மட மகள்
மான் அமர் நோக்கம் காணா ஊங்கே.

*– வெள்ளியந்தின்னனார் நற் 101*

*"முற்றாத மஞ்சட் கிழங்கின் பசிய புறத்தைப் போலச் சுற்றிய, சுரசுரப்பான, சூழ்ந்த கழியிடத்துள்ள இறால் மீனில் கூட்டமான குவியலை உணக்கும் வகையை நோக்கிப் புன்னை மரத்தின் கொழுவிய நிழலின் முன்பு மீனைப் போட்டுப் பரப்பும் துறையே அன்றி அதன் அருகில் இருந்த பாக்கமும் மிக இனிமையுடையதாய் இருந்தது. அது கழிந்தது. அகன்ற அல்குலையும் மெல்லியதாய் அமைந்த இடையை யுமுடைய மீன் வேட்டையாடும் பரதவர் மட மகளின் மான் போன்ற அமர்ந்த நோக்கத்தைக் காணாத முன்பு வருத்த மின்றி யிருந்தேன் இப்போது துன்பமாய் உள்ளது." என்று தலைவன் தோழி கேட்க உரைத்தான்*

## 191. அறிவாயன்றோ அவள் நிலைமையை?

அறிதலும் அறிதியோ – பாக! பெருங்கடல்
எறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள,
ஆடு வரி அலவன் ஓடுவயின் ஆற்றாது,
அசைஇ, உள் ஒழிந்த வசை தீர் குறுமகட்கு
உயவினென் சென்று, யான், உள் நோய் உரைப்ப,
மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள், நறு மலர்
ஞாழல் அம் சினைத் தாழ்இணர் கொழுதி,

முறி திமிர்ந்து உதிர்த்த கையள்,
அறிவு அருர் உறுவி ஆய் மட நிலையே?

*– தொண்டைமான் இளந்திரையன் நற் 106*

*"பாக! பெரிய கடலில் மோதும் அலைகளால் சேர்க்கப் பட்ட மணல்மேட்டில் மணம் வீச, விளையாடும், புள்ளி களையுடைய நண்டு ஓடிற்று அப்போது அதனைத் துரத்த முடியாதவளாகித் தலைவி களைப்புற்றாள் துரத்தும் எண்ணத்தைக் கைவிட்ட அந்தக் குற்றமற்ற இள மகளிடத் திலே யான் வருத்தத்தோடு சென்றேன். சென்று பொருள் தேடப் போக வேண்டும் என்ற என் உட்கருத்தை வெளி யிட்டேன். அதுகேட்ட அவள் மறுமொழி கூற முடியாதவள் ஆனாள். நறிய மலரையுடைய ஞாழல் மரத்தின் அழகிய கிளையில் தாழ்ந்த பூங்கொத்தைக் கொய்தாள். அதனொடு இளந் தளிரையும் கையால் தடவி உதிர்த்தாள். அறிவு மயக்க முற்றவளாகி மடப்ப நிலையோடு இருந்தாள். அதனை நீ அறிதலும் அறிதியோ? நீ விரைவாகத் தேரைச் செலுத்துக," என்று தலைவன் பாகனிடம் கூறினான்*

## 192. வருந்தாதே

அத்த இருப்பைப் பூவின் அன்ன
துய்த்தலை இறவொடு தொகை மீன் பெறீஇயர்,
வரி வலைப் பரதவர் கருவினைச் சிறாஅர்,
மரல் மேற்கொண்டு மான் கணம் தகைமார்
வெந் திறல் இளையவர் வேட்டு எழுந்தாங்குத்,
திமில் மேற்கொண்டு, திரைச் சுரம் நீந்தி,
வாள் வாய்ச் சுறவொடு வய மீன் கெண்டி,
நிணம் பெய் தோணியர் இகுமணல் இழிதரும்
பெருங் கழிப் பாக்கம் கல்லென
வருமே – தோழி! – கொண்கன் தேரே.

*– ஆசிரியர் ? நற் 111*

*"காட்டிலிருக்கும் இருப்பைப் பூப் போன்ற மெல்லிய தலையையுடையன இறால் மீன்கள். அவற்றோடு தொகுதி யான மற்றைய மீன்களையும் பெற விரும்புவர் பரதவர். கட்டிய வலையையுடைய பரதவரின் வலிய தொழிலைச்*

செய்யும் சிறுவர்கள் மீன் பிடிக்கும் திமிலில் ஏறிக் கொண்டு கடலுள் நீந்திப் போவர் அது, மருண்டு தங்கி நிற்கும் மான் கூட்டத்தைப் பிடித்துக் கட்டும் பொருட்டுப் பெரு வலிமை யுடைய வேட்டுவச் சிறுவர்கள் விரும்பி எழுந்தது போல் இருக்கும். கடலுள் சென்ற சிறுவர்கள் வாள் போன்ற வாயை யுடைய மீன்களையும் மற்றைய வலிய மீன்களையும் பிடித்து அறுத்துத் துண்டாக்குவார்கள். அத் துண்டாகிய நிணத்தைத் தோணியில் போட்டுக் கொண்டு வந்து தாழ்ந்து கிடக்கும் மணலில் இறக்குவர் அங்குப் பெரிய கழிகள் சூழ்ந்த பாக்கம் இருக்கும். அப் பாக்கம் கல் என ஒலிக்குமாறு நெய்தல் நிலத் தலைவனின் தேர் வரும் ஆதலால் நீ மகிழ்ச்சியாய் இரு" என்றாள் தோழி.

## 193. அதிக நாள்கள் வாழேன்

பெருங் கடல் முழங்க, கானல் மலர,
இருங் கழி ஓதம் இல் இறந்து மலிர,
வள் இதழ் நெய்தல் கூம்ப, புள் உடன்
கமழ் பூம் பொதும்பர்க் கட்சி சேரச்,
செல் சுடர் மழுங்கச் சிவந்து வாங்கு மண்டிலம்
கல் சேர்பு நண்ணிப் படர் அடைபு நடுங்கப்,
புலம்பொடு வந்த புன்கண் மாலை
அன்னர் உன்னார் கழியின், பல் நாள்
வாழலென்– வாழி, தோழி! – என் கண்
பிணி பிறிதாகக் கூறுவர்;
பழி பிறிது ஆகல் பண்புமார் அன்றே.

*– குன்றியனார் நற் 117*

"தோழி, பெரிய கடல் முழங்கவும், கானல் மலரவும், கரிய கழியிலுள்ள வெள்ளம் இல்லம் கடந்து பெருகவும், பெரிய இதழ்களையுடைய நெய்தல் மலர்கள் கூம்பவும், பறவைகள் ஒருசேர மணம் வீசும் பூவுள்ள இளமரக் காவின் கூடுகளில் சேரவும், பல இடங்களிலும் செல்லும் கதிர்கள் ஒளி குறையச் சிவந்து மறையும் ஞாயிறு மலையில் சேரவும், நினைவுத் துன்பம் நெருங்கிச் சேர்ந்து யான் நடுங்கும்படி வருத்தத்தோடு வந்த துயரம் தரும் மாலை நேரத்தில் அவர்

என்னை நினை யாது கழியின், பலநாள் யான் வாழ மாட்டேன். என்னிடத்தில் ஏற்பட்ட நோயைப் பிறிதொன்றால் ஏற்பட்டது என்று கூறுவர். உண்மை ஒரு புறமிருக்க, பழி பிறிதொன்றால் ஆயது என்பது பண்பான செயலில்லையே" என்று தலைவன் மணம் கொள்ளாது நீட்டித்தலால் தோழி ஆற்றுவித்தும் ஆற்றாத தலைவி வருந்திக் கூறினாள்.

## 194. நோயின் காரணம் என்ன?

உரையாய் – வாழி, தோழி! – இருங் கழி
இரைஆர் குருகின் நிரைப் பறைத் தொழுதி
வாங்கு மடற் குடம்பைத், தூங்கு இருள் துவன்றும்
பெண்ணை ஓங்கிய வெண் மணல் படப்பைக்
கானல் ஆயமொடு காலைக் குற்ற
கள் கமழ் அலர தண் நறுங் காவி
அம் பகை நெறித் தழை அணிபெறத் தைஇ,
வரி புனை சிற்றில் பரி சிறந்து ஓடிப்,
புலவுத் திரை உதைத்த கொடுந் தாட் கண்டல்
சேர்ப்பு ஏர் ஈர் அளை அலவன் பார்க்கும்
சிறு விளையாடலும் அழுங்கி,
நினைக்குறு பெருந் துயரம் ஆகிய நோயே.

– *காஞ்சிப் புலவனார் நற் 123*

"தோழி, வாழி. பெரிய கழியில் இரை தின்னும் குருகின் நிரையாகிய பறவைக்கூட்டம் வளைந்த பனை மடலிற் கட்டிய கூடுகளில் நிறைந்த இருட்பொழுதில் நெருங்கியிருக்கும். அப் பனை மரங்கள் உயர்ந்த வெள்ளையான மணற் கொல்லைக் கானலில், தோழிமார் கூட்டத்தோடு காலையில் பறித்த தேன் மணக்கும் மலரையுடைய தண்ணிய நறிய குவளையை அழகுற மாறி ஒன்றோடொன்று வைத்துப் பின்னித் தைத்த தழை உடையை அழகு பெற உடுத்திக் கொண்டு, கோல மிட்ட சிற்றிலில் விரைவு சிறக்க ஓடி விளையாடப், புலவு நாற்றமுடைய அலை மோதும் வளைந்த அடியையுடைய கண்டல் மரமுள்ள கடற்கரையில் அழகுற்ற குளிர்ந்த வளை யில் வாழும் நண்டைக் கண்டு மகிழும் சிறிய விளையாட்டும் தவிரும்படி உனக்குற்ற பெரிய துயரமாகிய நோயை எனக்கு

*உரைப்பாயாக" என்று தலைவன் உணரும் வண்ணம் தோழி தலைவிக்கு உரைப்பவள் போன்று கூறினாள்.*

## 195. நீங்காது வாழ்வாயாக!

ஒன்று இல் காலை அன்றில் போலப்
புலம்பு கொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை
யானும் ஆற்றேன்; அதுதானும் வந்தன்று –
நீங்கல்; வாழியர் ஐய, – ஈங்கை
முகை வீ அதிரல் மோட்டு மணல் எக்கர்,
நவ்வி நோன் குளம்பு அழுந்தென, வெள்ளி
உருக்குறு கொள்கலம் கடுப்ப, விருப்புறத்
தெண் நீர்க் குமிழி இழிதரும்
தண்ணீர் தைஇ நின்ற பொழுதே.

*– மோசி கண்ணத்தனார் நற் 124*

*“ஐய, அன்றிலில் ஒன்று இல்லாதபோது மற்றது இறந்து போகும். அதுபோல தனிமையோடு தங்கியிருக்கும் துன்ப மான வாழ்க்கையை யானும் ஆற்றமாட்டேன். அது தானும் வந்தது எம்மை விட்டு நீங்காதிருப்பீராக. வாழ்க. ஈங்கையின் அரும்பு மலர்ந்த பூவும் காட்டு மல்லிகையும் பெரிய மணல் மேட்டில் கிடந்தவை மானின் வலிய குளம்பால் மூழ்கின. வெள்ளியை உருக்கும் கொள்கலத்தில் இட்டு உருக்கிச் சாய்த்தாற் போல விருப்பம் உண்டாகும்படி தெளிந்த நீர்க்குமிழியாக வாழும் தண்ணீரைப் பெற்று நின்ற கூதிர்ப் பருவம் வந்தது" எனத் தலைவனால் பிரிவை உணர்த்தப் பட்ட தோழி தலைவனுக்கு உரைத்தாள்.*

## 196. அவன் வருவதால் பயன் என்ன?

இருங் கழி துழைஇய ஈர்ம் புற நாரை
இறகு எறி திவலையின் பனிக்கும் பாக்கத்து,
உவன் வரின், எவனோ? – பாண! – பேதை
கொழு மீன் ஆர்கைச் செழு நகர் நிறைந்த
கல்லாக் கதவர் தன் ஐயர் ஆகவும்,
வண்டல் ஆயமொடு பண்டு தான் ஆடிய
ஈனாப் பாவை தலையிட்டு ஓரும்,

'மெல்லம் புலம்பன் அன்றியும்,
செல்வாம்' என்னும், 'கானலானே'.

*– சீத்தலைச் சாத்தனார் நற் 127*

"பாண, எம் தலைவி பேதை. கொழுமீன் உண்ணும் வளமான இல்லத்தில் வாழ்பவள். அவள் உடன்பிறந்தார் தம் தொழிலல்லது பிற கல்லாதவர். கடும்சினம் உடையவர் எனினும், அவள் தான் பெறாத கைப் பாவையை எடுத்துக் கொண்டு வண்டல் விளையாட ஆயத்தோடு சென்று விடு வாள் "அந்த மெல்லிய கடற்கரைச் சேர்ப்பன் இல்லாமலும் கானலிலே விளையாடச் செல்வோம்" என்று சொல்லுவாள். பெரிய உப்பங்கழியில் இரையைத் துழாவித் தேடுவது நாரை. இது ஈரமுள்ள தன் முதுகை இறகால் எறியும். அப்போது நீர்த் துளிகள் வெளிவரும். அதனால் குளிர்ந்து நடுங்கும் எம் பாக்கத்துத் தலைவன் வரின் யாது பயன்? ஒன்றுமில்லை. ஆகவே தலைவன் வர வேண்டுவதில்லை" என்று பாணன் வரவைத் தோழி விரும்பாதவளாய் வாயில் மறுத்துரைத்தாள்

## 197. இல்வாழ்வினும் இனியது உண்டோ?

வடு இன்று நிறைந்த மான்தேர்த் தெண் கண்
மடிவாய்த் தண்ணுமை நடுவண் ஆர்ப்பக்,
கோலின் எறிந்து காலைத் தோன்றிய
செந் நீர்ப் பொதுவினைச் செம்மல் மூதூர்த்
தமது செய் வாழ்க்கையின் இனியது உண்டோ?
எனை விருப்புடையார் ஆயினும், நினைவிலர்;
நேர்ந்த நெஞ்சும் நெகிழ்ந்த தோளும்
வாடிய வரியும் நோக்கி, நீடாது,
'எவன் செய்தனள், இப் பேர் அஞர்உறுவி?' என்று
ஒரு நாள் கூறின்றும் இலரே; விரிநீர்
வையக வரையளவு இறந்த,
எவ்வ நோய்; பிறிது உயவுத் துணை இன்றே.

*– நெய்தல் தத்தனார் நற் 130*

"குற்றமில்லாது நிறைவுபெற்ற குதிரை பூட்டிய தேரில், தெளிந்த கண்ணையுடைய, தோலை மடித்துப் போர்த்த

*மத்தளம் நடுவில் ஒலிக்கத், தார்க்கோலால் செலுத்திக் காலை நேரத்தில் வரும் செந்நீர்மையுடைய நாடு காவல் முதலான பொதுவினை செய்யும் தலைவர் மூதூரில் தம் செயல் செய்து வாழும் வாழ்க்கையைக் காட்டிலும் இனியது உண்டோ? இல்லை அதனை அறியாது அகன்றார். என் மேல் விருப்பம் உடையவராயினும் இப்போது என் நினைவு இல்லை. அவர் பால் என் நெஞ்சையும், கட்டுத் தளர்ந்த தோளையும், வாடிய என் நிறத்தையும் நோக்கி நீட்டியாமல், "இப் பெரிய மயக்கமுற்றவள் என்ன செய்வாள்" என்று ஒரு நாள் கூடக் கூறினாரில்லை என் எவ்வநோய், விரிந்த நீர் சூழ்ந்த உலக எல்லையளவுக்கு மேற் போயிற்று. வேறு உசாத் துணை யில்லை. யான் எவ்வாறு உய்வேன்" என்று பிரிவிடை மெலிந்த தலைவி வருத்தமுடன் கூறினாள்.*

## 198. உள்ளத்திலே உள்ளோம்

ஆடிய் தொழிலும், அல்கிய பொழிலும்,
உள்ளல் ஆகா உயவு நெஞ்சமொடு
ஊடலும், உடையமோ – உயர் மணற் சேர்ப்ப,
திரை முதிர் அரைய தடந் தாட் தாழைச்
சுறவு மருப்பு அன்ன முட்தோடு ஒசிய,
இறவு ஆர்இனக் குருகு இறை கொள இருக்கும்,
நறவு மகிழ் இருக்கை நல் தேர்ப் பெரியன்,
கள் கமழ், பொறையாறு அன்ன என்
நல் தோள் நெகிழ மறத்தல், நுமக்கே?

*– உலோச்சனார் நற் 131*

*"உயர்ந்த மணலையுடைய கடலைச் சேர்ந்த நிலத்தை யுடையவரே, அலை முற்றிய அடி [1]மரத்தையும் வளைந்த தாள்களையும் உடைய தாழையின் சுறாமீன் கொம்பு போன்ற முள்ளுள்ள மடல் முறிய அமர்ந்து இறால் மீன்களை உண்ணும் குருகுகள் தங்கியிருக்கும். நறவு மகிழ் இருக்கை யுடைய நல்ல தேர்களையுடைய பெரியன் என்பானின் தேன் கமழும் பொறையாறு என்னும் ஊர் போன்ற என் நல்ல தோள்கள் மெலிய எம்மை மறத்தல் உமக்கு முடியாதது போல் எமக்கும் முடியாது. யாம் ஆடிய தொழிலையும்*

*தங்கிய சோலையையும் கைவிட்டு, நினைக்க முடியாத வருத்தமடைந்த நெஞ்சத்தோடு ஊடலும் செய்தோமா? இல்லையே. எனவே என்றும் நினைந்திருந்த நீரே பெரியீர்" என்று திருமணத்தின் மறுநாள் தோழியைப் பார்த்துரைக்கத் தோழி விடை யளித்தாள்.*

## 199. என் இறுதிநாள் இன்று தானோ?

பேர் ஊர் துஞ்சும்; யாரும் இல்லை;
திருந்து வாய்ச் சுறவம் நீர் கான்று, ஒய்யெனப்
பெருந் தெரு உதிர்தரு பெயலுறு தண் வளி
போர்அமை கதவப் புரைதொறும் தூவக்,
கூர் எயிற்று எகினம் நடுங்கும் நல் நகர்ப்
பயில்படை நிவந்த பல் பூஞ் சேக்கை
அயலும் மாண் சிறையதுவே; அதன்தலை,
'காப்புடை வாயில் போற்று, ஓ' என்னும்
யாமம் கொள்பவர் நெடு நா ஒண் மணி
ஒன்று எறி பாணியின் இரட்டும்;
இன்றுகொல், அளியேன் பொன்றும் நாளே?

*– ஆசிரியர் ? நற் 132*

*"பேரூர் உறங்கும். உறங்காதவர் இல்லை. நல்ல வாயை யுடைய சுறாமீன் நீரைக் கக்கும். அது, பெரிய தெருக்களில் குளிர்ந்த காற்று "ஒய்" என வீசும்போது மழைபோல உதிரும் இரட்டைக் கதவுகளிலுள்ள துளைகள் தோறும் அந் நீர் தெளிக்கும். கூரிய பற்களை உடைய நாய் நடுங்கும். நல்ல இல்லத்தில் தூங்குவதற்குப் பல பூக்கள் பரப்பிய உயர்ந்த படுக்கையும் அருகில் சிறந்த காவலையுடையதாய் உள்ளது. அதற்கு மேலும், "காக்க வேண்டிய தலைக்கடை, புழைக்கடை வாயில்களைப் பாதுகாத்துக் கொள்வீர்களாக" என்று யாமக் காவலர் குரல், நீண்ட நாவுடைய ஒள்ளிய மணி ஒன்று அடித்துக் காலங் காட்டுவது போல மாறி மாறிக் கேட்கும் ஆதலால் காக்கப்பட வேண்டிய யான் சாகும் நாள் இன்று தான் போலும்," என்று பாதுகாவல் மிகுதியால் ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி இவ்வாறு உரைத்தாள்.*

## 200. இனிதே நம் சிற்றூர்!

தூங்கல் ஓலை ஓங்கு மடற் பெண்ணை
மா அரை புதைத்த மணல் மலி முன்றில்,
வரையாத் தாரம் வரு விருந்து அயரும்
தன் குடி வாழ்நர் அம் குடிச் சீறூர்
இனிது மன்றம்ம தானே – பனி படு
பல் சுரம் உழந்த நல்கூர் பரிய,
முழங்கு திரைப் புது மணல் அழுந்தக் கொட்கும்,
வால் உளைப் பொலிந்த, புரவித்
தேரோர் நம்மொடு நகாஅ ஊங்கே.

*– கதப்பிள்ளையார் நற் 135*

“தொங்கிய ஓலையையும் ஓங்கிய மடலையும் உடைய பனை மரத்தின் கரிய அடிப்பாகத்தை மூடிய மணல் மிகுந்த முன்றிலில், அளவில்லாத உணவுப் பண்டங்களைக் கொண்டு குடிவாழ் மக்கள் வந்த விருந்தினர்க்கு விருந்தோம்பும் அழகிய இல்லங்களையுடைய சீறூர் அது. குளிர்ந்த பல சுரங்களைக் கடக்க முடியாத துயரத்தால் குறைந்த செலவுடைய - முழங்கும் அலை கொழித்த புது மணலில் தேருருளை அழுந்தச் சுழலும் - வெளிய பிடரி மயிரால் பொலிந்த - குதிரை பூட்டிய தேரையுடைய தலைவர் நம்மோடு அளவளாவி மகிழ்வதற்குள் முன்பு அச் சீறூர், நமக்கு இனி தாய் இருந்தது” என்று தலைவன் திருமணம் நீட்டித்ததால் ஊரார் பழி கூறுவர் எனத் தலைவன் அறியத் தோழி கூறினாள்.

## 201. அறிந்திலர் வேறு எதையுமே!

உவர் விளை உப்பின் குன்றுபோல் குப்பை
மலை உயத்துப் பகரும், நிலையா வாழ்க்கைக்,
கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த
பண் அழி பழம் பார் வெண் குருகு ஈனும்
தண்ணம் துறைவன், முன் நாள், நம்மொடு
பாசடைக் கலித்த கணைக் கால் நெய்தல்
பூவுடன் நெறிதரு தொடலை தைஇக்,
கண் அறிவுடைமை அல்லது, நுண் வினை

இழை அணி அல்குல் விழவு ஆடு மகளிர்
முழங்கு திரை இன் சீர் தூங்கும்
அழுங்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே.

*– அம்மூவனார் நற் 138*

*"உவர் நிலத்தில் விளைந்த உப்பின் குன்றுபோன்ற குவியலைக் கூட்டம் கூட்டமாக வாழும் உமணர் என்னும் உப்பு வாணிகர் வண்டியில் ஏற்றிக்கொண்டு மலைநாடு நோக்கிச் சென்று விற்கும் நிலையில்லாத வாழ்க்கையுடையவர். அவர்கள், முறிந்த இடத்திலே போட்டுவிட்டுச் சென்ற இயல்பு அழிந்த பழைய வண்டிப் பாரிடத்திலே வெள்ளை நிறமான நாரை தன் முட்டையை இடும். அத் தண்ணம் துறைக்குத் தலைவனாகிய நம் தலைவன், முதல் நாளிலே பசிய இலைகளிலிருந்து வெளிவந்த திரண்ட தண்டையுடைய நெய்தற் பூவுடன் நெறிக்கும் இலைகளை இடையிடையே வைத்துத் தொடுக்கப்பட்ட மாலையை உனக்குச் சூட்டியதைக் கண்ணாற் கண்டது இவ் ஊர். அதைத் தவிர வேறு ஒன்றுமில்லை. இருந்தும் நுண்ணிய வேலைப்பாடு அமைந்த கலன்களை அணிந்த அல்குலையுடைய விழாக் களத்திலே துணங்கையாடும் பெண்களின இனிய தாள ஒலியுடன் முழங்கும் கடல் ஓசைபோல இவ் ஊரில் அலர் எழுந்துள்ளது. இவ் ஊர் அலர் தூற்றுவதைத் தவிர பிறிது . ஒன்றினையும் அறிந்த தில்லை. இதற்காக நீ வருந்தாதே," என்று தன் நிலைமை பழி ஆகிவிட்டதே என்று ஆற்றாளாய தலைவிக்குத் தோழி தலைவன் கேட்கக் கூறினாள்.*

## 202. என்ன ஆகுமோ அவர் வந்தால்

இருங் கழி பொருத ஈர வெண் மணல்
மாக் கொடி அடும்பின் மா இதழ் அலரி
கூந்தல் மகளிர் கோதைக் கூட்டும்
காமர் கொண்கன், நாம் வெங் கேண்மை
ஐது ஏய்ந்தில்லா ஊங்கும், நம்மொடு
புணர்ந்தனன் போல உணரக் கூறித்,
'தான் யாங்கு?' என்னும் அறன் இல் அன்னை;
தான் எழில் அறிதலும் உரியள், நீயும்; நம்

பராரைப் புன்னைச் சேரி, மெல்ல,
நள்ளென் கங்குலும், வருமரோ –
அம்ம வாழி, – அவர் தேர் மணிக் குரலே!

*– நம்பி குட்டுவன் நற் 145*

*"பெரிய அலை உப்பங்கழியை மோதுகிறது. ஈரமான மணலைக் கொண்டுவந்து கொட்டுகிறது. அங்கே வலிய அடும்பின் கொடி வளர்ந்திருக்கிறது. அதன் சிறந்த இதழை யுடைய மலரைக் கூந்தலையுடைய பெண்கள் கொய்து பூமாலை ஆக்குகின்றனர். அவ்வாறாய அழகிய கடற்கரைத் துறைவர் தாம் விரும்பும் நட்புள்ள காதலர். அவர் நட்பு நுண்ணியதாக ஒத்தில்லாத போதும் நம்மோடு நெருங்கிய நட்புள்ளது போல் உணர்ந்து கொண்டு, "அவன் யார்" என்று அறமில்லாத அன்னை வினவுகிறாள். நீயும் உன் எழிலை என்னால் அறிதற்கும் உரியவள். பருத்த அடியையுடைய புன்னை மரமிருக்கும் நம் சேரியில் அவர் தேரின் மணியி லிருந்து எழும் குரல் இருள் செறிந்த இரவிலும் மெல்ல வரும். அது நமக்கு இப்போது இன்னாதது. வரைந்து கொள் வாரானால் நல்லது" என்று இரவுக்குறி வரும் தலைவன் கேட்டுத் திருமணத்திற்கு ஏற்பாடு செய்வான் என்ற எண்ண முடன் தோழி உரைத்தாள்.*

## 203. புறப்பட்டுச் செல் உன் தலைவனுடன்

சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி,
மூக்கின் உச்சிச் சுட்டு விரல் சேர்த்தி,
மறுகின் பெண்டிர் அம்பல் தூற்றச்,
சிறு கோல் வலந்தனள் அன்னை அலைப்ப,
அலந்தனென் வாழி – தோழி! – கானல்
புது மலர் தீண்டிய பூ நாறு குரூஉச் சுவல்
கடு மான் பரிய கதழ் பரி கடைஇ,
நடு நாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனோடு
செலவு அயர்ந்திசினால், யானே;
அலர் சுமந்து ஒழிக, இவ் அழுங்கல் ஊரே!

*– உலோச்சனார் நற் 149*

"தோழி, வாழி சிலரும் பலரும் கடைக்கண்ணால் பார்த்து மூக்கின் உச்சியில் சுட்டு விரலைச் சேர்த்துத் தெருவில் நின்று பெண்கள் அம்பல் தூற்றுவர். அதை உண்மை என நம்பி அன்னை சிறிய கோலைச் சுற்றி உன்னை வருத்துவாள் இதைக் கண்டு யான் துன்புற்றேன். கடற்கரைச் சோலையில் புது மலரைத் தீண்டிய பூ மணக்குமிடத்தில் திரட்சியான பிடரி மயிரையுடைய விரைந்து செல்லும் குதிரையைச் செலுத்தி நடுநாளில் வரும் அழகிய தேரை யுடைய தலைவனோடு நீ உடன் போவதற்கு யான் ஏற்பாடு செய்தேன் நீ எழுக. நீ சென்ற பின் இவ் ஆரமுடைய ஊர் அலரைச் சுமந்து ஒழிக," என்று தோழி தலைவியைத் தலைவனுடன் செல்லக் கூறினாள்.

## 204. நான் எவ்விதம் உய்வேன்?

மடலே, காமம், தந்தது; அலரே
மிடை பூ எருக்கின் அலர் தந்தன்றே;
இலங்கு கதிர் மழுங்கி, எல் விசும்பு படரப்,
புலம்பு தந்தன்றே, புகன்று செய் மண்டிலம்;
எல்லாம் தந்ததன் தலையும் பையென
வடந்தை துவலை தூவக், குடம்பைப்
பெடைபுணர் அன்றில் உயங்கு குரல் அளைஇக்,
கங்குலும் கையறவு தந்தன்று;
யாங்கு ஆகுவென்கொல்; அளியேன் யானே?

*– ஆலம்பேரி சாத்தனார் நற் 152*

"என் காதலோ மடலை (பனங்கருங்கால் செய்த குதிரையை) எனக்குத் தந்தது இவ் ஊர் எடுக்கும் அலரோ ஆவிரை, பூளை, உழிஞை என்ற மலர்களை விரவித் தொடுத்த எருக்க மலர் மாலையை எனக்குத் தந்தது விளங்கும் கதிர் மழுங்கி ஞாயிறு விசும்பிலே மறைந்தது. யாவரும் கொண்டாடுதலைச் செய்யும் நிலவு தனிமைத் துன்பத்தைத் தந்தது. எல்லாம் தந்ததோடு அவற்றின் மேலும் மெல்ல வாடைக் காற்று பனித் துளிகளைத் தூவியது கூட்டிலே தன் பெடையைச் சேர்ந்திருக்கும் அன்றிலின் வருந்தும் குரல் கலந்து கங்குலும் செயலற்று வருந்துதலைத்

*தந்தது. யான் எவ்வாறு ஆவேனோ? யான் இரங்கத் தக்கவன்," என்று மடலேறக் கருதிய தலைவன் தோழியின் முன் வேறொருவருடன் பேசுவதுபோல் கூறினான்.*

## 205. தெரியவில்லையே யார் என்று!

'ஒள் இழை மகளிரொடு ஓரையும் ஆடாய்,
வள் இதழ் நெய்தற் தொடலையும் புனையாய்,
விரி பூங் கானல் ஒரு சிறை நின்றோய்,
யாரையோ? நிற் தொழுதனேம் வினவுதும்;
கண்டோர் தண்டா நலத்தை – தெண் திரைப்
பெருங் கடல் பரப்பின் அமர்ந்து உறை அணங்கோ?
இருங் கழி மருங்கு நிலைபெற்றனையோ?
சொல், இனி, மடந்தை,' என்றனென்: அதன் எதிர்
முள் எயிற்று முறுவல் திறந்தன;
பல் இதழ் உண்கணும் பரந்தவால், பனியே.

*– பராயனார் நற் 155*

*"ஒளியுள்ள அணிகள் அணிந்த மகளிரொடு பாவை செய்து விளையாடும் ஓரை விளையாட்டும் விளையாட மாட்டாய். பெரிய இதழ்களையுடைய நெய்தற் பூவால் புனைந்த மாலை களையும் அணியமாட்டாய். விரிந்த பூவுள்ள கடற்கரைச் சோலையின் ஒரு பக்கம் நின்றவளே; நீ யார்? உன்னைத் தொழுது வினைவுகின்றேன். கண்டவரால் நிலை நீங்காத கெடாத நலத்தையுடையவளே, தெளிந்த அலைகளையுடைய பெரிய கடற்பரப்பில் அமர்ந்து வாழும் அணங்கோ நீ? பெரிய கழியின் பக்கத்தில் நிலைபெற்று உள்ளாயோ நீ? 'ஏ பெண்ணே! பதில் சொல்' என்று வினவினேன். அதற்கு விடையாக, முள் போன்ற பல் தெரியும்படி முறுவல் வெளி வந்தது. தாமரை மலர் போன்ற கண்களிலும் கண்ணீர்த் துளிகள் பரந்தன," என்று தலைவியை எதிர்ப்பட்ட தலைவன் அவள் தோற்றங்கண்டு தன் நெஞ்சை நோக்கிக் கூறினான்.*

## 206. தேர் வந்து தங்குவதாக ஒலியுடன்!

மணி துணிந்தன்ன மா இரும் பரப்பின்
உரவுத் திரை கொழீஇய பூ மலி பெருந் துறை,

நிலவுக் குவித்தன்ன மோட்டு மணல் இடிகரை,
கோடு துணர்ந்ததன்ன குருகு ஒழுக்கு எண்ணி,
எல்லை கழிப்பினம்ஆயின், மெல்ல
வளி சீத்து வரித்த புன்னை முன்றில்,
கொழு மீன் ஆர்க்கைச் செழு நகர்ச் செலீஇய,
'எழு' எனின், அவளும் ஒல்லாள்; யாமும்,
'ஒழி' என அல்லம் ஆயினம்; யாமத்து,
உடைதிரை ஒலியின் துஞ்சும் மலி கடற்
சில் குடிப் பாக்கம் கல்லென
அல்குவதாக, நீ அமர்ந்த தேரே!

*– கண்ணம்புல்லனார் நற் 159*

*"நீலமணி தெளிவுற்றது போன்றது, கரிய பெரிய கடற் பரப்பு வலிய அலை மோதும் மலர் மிக்க பெரிய துறையில் நிலவைக் குவித்து வைத்தாற் போன்ற மணல் மேடு உண்டு. அதன் இடிந்து சரிந்த கரையில் நின்று, சங்குகள் பூத்தாற் போன்ற குருவிகளின் வரிசையை எண்ணிப் பகலைக் கழிப் போமாயின், மெல்லக் காற்றடித்துக் கோலம் செய்த புன்னை யின் முன்றிலில் கொழுமீன் உண்ணும் வளமான இல்லத் திற்குச் செல்ல 'எழு' என்றால் அதற்கு அவளும் இசை வாள் யாமும் அவளிடம் 'உன் கருத்தை ஒழி' எனக் கூறும் வல்லமை பெற்றேமில்லை. எனவே தலைவ, யாமத்து உடையும் அலை ஒலியினும் துயிலும் நிரம்பிய கடற் கரை யிலுள்ள சிற்சில குடியிருப்புகளையுடைய எம் பாக்கத்தில் கல் என ஒலிக்க நீ விரும்பி ஊர்ந்து வரும் தேர் வரை வுக்குத் தங்குவதாக," என்றாள் தோழி தலைவனிடம்*

## 207. ஓய்வுதான் குதிரைகளுக்கு

உயிர்த்தவாகுக, அளி, நாளும் –
அயிர்த் துகள் முகந்த ஆனா ஊதையொடு
எல்லியும் இரவும் என்னாது, கல்லெனக்
கறங்கு இசை இன மணி கைபுணர்ந்து ஒலிப்ப,
நிலவுத் தவழ் மணற் கோடு ஏறிச் செலவர,
இன்று என் நெஞ்சம் போல, தொன்று, நனி
வருந்துமன்; அளிய தாமே; பெருங் கடல்

நீல் நிறப் புன்னைத் தமி ஒண் கைதை,
வானம் மூழ்கிய வயங்கு ஒளி நெடுஞ் சுடர்க்
கதிர் காய்ந்து எழுந்து அகம் கனலி ஞாயிற்று
வைகுறு வனப்பின், தோன்றும்
கைதைஅம் கானல் துறைவன் மாவே!

*– ஆசிரியர் ? நற் 163*

*"பெருங்கடல் அருகிலுள்ள நீலநிறப் புன்னையின் பக்கத்தில் தனியான ஒள்ளிய தாழை இருந்தது. அது, வானத்தை மூழ்கிய மிக்க ஒளியுள்ள நெடிய ஞாயிற்றின் கதிர்களில் காய்ந்து எழுந்து உள்ளே வெதுப்பாகி ஞாயிறு தங்கிய வனப்புப் போல் தோன்றும். அத்தகைய தாழங் சோலை சூழ்ந்த துறைவனின் குதிரைகள் நாள்தோறும் இங்கு வரும். நுண்மணற் புழுதியை முகந்த - அமையாத ஊதைக் காற்றோடு பகல், இரவு என்று பாராது வரும். கல் என ஒலிக்கும் ஒலியுடைய இனமணி ஒருசேர ஒலிக்கவும், நிலவு பரந்தாற் போன்ற மணற் குன்றுகளில் ஏறியும் இறங்கியும் வரும், போகும். இன்று என் நெஞ்சம் வருந்தியது போல முன்பு அவை மிகவும் வருந்தின. அவை இரங்கத் தகுந்தன. இன்று தலைவன் வரைவொடு வருதலான் இனி அவை நாள் தோறும் வருந்தவேண்டா; இளைப்பாறுவன ஆகுக' என்றாள் தலைவி.*

## 208. தூதாய் வந்த பாணன்!

கருங் கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ் சினை
விருந்தின் வெண் குருகு ஆர்ப்பின், ஆஅய்
வண் மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற
பண் அமை நெடுந் தேர்ப் பாணியின், ஒலிக்கும்
தண்ணம் துறைவன் தூதொடும் வந்த
பயன்தெரி பனுவல் பை தீர் பாண,
நின்வாய்ப் பணி மொழி களையா — பல் மாண்
புது வீ ஞாழலொடு புன்னை தாஅம்
மணம் கமழ் கானல், மாண் நலம் இழந்த
இறை ஏர் எல் வளைக் குறுமகள்
பிறை ஏர் திரு நுதல் பாஅய பசப்பே. *– ஆசிரியர் ? நற் 167*

*"புன்னையின் மேல் வளைந்த கரிய கோட்டின் பெரிய கிளையில் புதிய வெண்குருகு உட்கார்ந்து ஆர்த்தல், ஆய் அண்டிரன் வண்மையினாகிய களிப்புள்ள நாளவையில் பரிசில் பெற்ற அழகு செய்தமைத்த நெடிய தேரின் ஒலி போல ஒலிக்கும். அவ்வாறான தண்ணம் துறைவனின் தூதாக வந்த பயனுக்குத் தக்கபடி கூறும் கேள்வியையுடைய துன்பம் தீர்ந்த பாணனே, உன் வாயின் மெல்லிய மொழிகள், பல மாண்புள்ள புது ஞாழல் மலரோடு புன்னை மலரும் மணம் கமழும் கானலில் மாட்சிமைப்பட்ட நலம் இழந்த, அழகிய முன் கையில் ஒளியுள்ள வளையல்களை அணிந்த இள மகளின், பிறைபோன்ற அழகிய நுதலில் உண்டாய பசப்பைக் களைய மாட்டா, எனவே மீண்டு செல்க," என்று வினைமுற்றி வந்த தலைவன் பாணனைத் தூதாய் அனுப்பத் தோழி மறுத்துக் கூறினாள்.*

## 209. வேறு நிழல் உண்டன்றோ?

விளையாடு ஆயமொடு வெண் மணல் அழுத்தி,
மறந்தனம் துறந்த காழ் முளை அகைய,
'நெய் பெய் தீம் பால் பெய்து இனிது வளர்ப்ப
நும்மினும் சிறந்தது; நுவ்வை ஆகும்' என்று,
அன்னை கூறினள், புன்னையது நலனே –
அம்ம! நாணுதும், நும்மொடு நகையே;
விருந்தின் பாணர் விளர் இசை கடுப்ப,
வலம்புரி வான் கோடு நரலும் இலங்கு நீர்த்
துறை கெழு கொண்க, – நீ நல்கின்,
நிறைபடு நீழல் பிறவுமார் உளவே. – *ஆசிரியர் ? நற் 172*

*"புதிய பாணர் பாடும் மெல்லிய இசைபோல வலம்புரிச் சங்கு ஒலிக்கும் விளங்கிய நீர்த்துறை பொருந்திய கொண்க, யாம் தோழிமாரோடு விளையாடும்போது வெண்மையான மணலில் புதைந்து மறந்து கைவிட்ட புன்னை மர விதை முளைத்து வெளி வந்தது அதற்குத் தேன் கலந்த இனிய பாலை ஊற்றி வளர்த்தோம். அது வளர்ந்து மரமாகியது. அப்போது அன்னை, 'நும்மிலும் சிறந்தது புன்னை; அது நும் தங்கையாகும்' என்று புன்னையது சிறப்பைக் கூறினாள்*

ஆகையால் புன்னையின் கீழ் உள்ள நிழலில் நும்மோடு அளவளாவலை யாம் நாணுகிறோம். நீ அருள் செய்யக் கூடுமானால், இவளோடு அளவளாவுதற்குச் சிறந்த மர நிழல் பிறவும் இங்கு உண்டு," என்று பகற்குறி வந்த தலைவனிடம் விரைந்து திருமணம் கொள்ள நகையாடிக் கூறினாள் தோழி.

## 210. பசலைப் படர்ந்த மேனி சுடுகின்றது

நெடுங் கடல் அலைத்த கொடுந் திமிற் பரதவர்
கொழு மீன் கொள்ளை அழி மணல் குவைஇ,
மீன் நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய
சிறு தீ விளக்கில் துஞ்சும், நறு மலர்ப்
புன்னை ஓங்கிய, துறைவனொடு அன்னை
தான் அறிந்தது அன்றோ இலனே; பானாள்
சேரிஅம் பெண்டிர்ச் சிறு சொல் நம்பி,
சுடுவான் போல நோக்கும்,
அடு பால் அன்ன என் பசலை மெய்யே.

*ஆசிரியர் ? நற் 175*

"நெடிய கடலை வருத்தியவர், வளைந்த மீன்பிடி படகை யுடைய பரதவர். கொழுவிய மீன் மிகுதியை மிக்க மணலில் குவித்தனர். மீன் நெய் ஊற்றி கிளிஞ்சலில் கொளுத்திய சிறிய எரியும் விளக்கு ஒளியில் உறங்குவர். நறுமண மலரை யுடைய புன்னை மரம் அத் துறையில் வளர்ந்திருக்கும். அத்துறைவனோடு நமக்கு ஏற்பட்ட நட்பினை அன்னை தான் அறிந்தாளில்லை. எனினும் பாதி நாள் இரவில் சேரியின் அழகிய பெண்டிர் சிறு சொல்லாகிய அலரை நம்பி, காய்ச்சிய பால்போன்ற என் பசலை படர்ந்த உடலைச் சுடுதல் போல அவள் நோக்குவாள்," என்று தலைவன் கேட்டு உணரும்படி களவைத் தவிர்க்கத் தோழி கூறினாள்.

## 211. கண் துயிலேன் இரவில்

ஆடு அமை ஆக்கம் ஐது பிசைந்தன்ன
தோடு அமை தூவித் தடந் தாள் நாரை
நலன் உணப்பட்ட நல்கூர் பேடை
கழி பெயர் மருங்கில் சிறு மீன் உண்ணாது,

கைதைஅம் படு சினைப் புலம்பொடு வதியும்
தண்ணம் துறைவன் தேரே கண்ணில்
காணவும் இயைந்தன்றுமன்னே; நாணி
நள்ளென் யாமத்தும் கண் படை பெறேஎன்;
புள் ஒலி மணி செத்து ஓர்ப்ப,
விளிந்தன்றுமாது, அவர்த் தெளிந்த என் நெஞ்சே.

*– ஆசிரியர் ? நற் 178*

*"அசையும் மூங்கிலின் உள்ளேயுள்ள பொருள் மெல்லி தாகப் பிசைந்து வைத்தது போலத் தொகுதியாக அமைந்த இறகுகளையும் வளைந்த கால்களையுமுடைய ஆண் நாரை யால் நலன் உண்ணப்பட்டதும் துன்பமுற்றதுமான பெண் நாரை, கழிக்கரையிலே பெயருமிடங்களில் சிறிய மீன்களை யும் உண்ணாது, தாழையின் அழகிய கிளையில் வருத்தத் தோடு தங்கியிருக்கும். அவ்வாறாய தண்ணிய துறைவனின் தேரை இப்போது கண்ணிற் காணவும் இயைந்ததன்று இற் செறிப்பிற்கு நாணி இருள்செறிந்த நடு இரவில் கண் துயில் பெறேன். பறவைகளின் ஒலியை அவர் தேர்மணி ஒலி என்று கருதி, முன்பு அவரைத் தெளிந்த என் நெஞ்சம் இப்பொழுது அழிந்ததாயிற்று," விரைந்து மணத்திற்கு ஏற்பாடு செய்யும் நோக்கத்தில் தோழி தலைவனுக்கு உரைத்தாள்.*

## 212. நாரை மிதிதத நெய்தல் மலர்

தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து,
பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி,
நெடு நெறி ஒழுகை நிலவு மணல் நீந்தி,
அவண் உறை முனிந்த ஒக்கலொடு புலம் பெயர்ந்து.
உமணர் மன்ற – கொண்க, – வயின்தோறு
இன்னாது அலைக்கும் ஊதையொடு ஒரும்
நும் இல் புலம்பின் மாலையும் உடைத்தே;
இன மீன் ஆர்ந்த வெண் குருகு மிதித்த
வறு நீர் நெய்தல் போல,
வாழாள் ஆதல் சூழாதோயே. *– ஆசிரியர் ? நற் 183*

*"நெய்தல் நிலத்தலைவனே, தம் நாட்டில் விளைந்த வெண்ணெல்லைக் கொண்டுவந்து தந்து பிற நாட்டில்*

விளைந்த உப்பைப் பெற்று விலை கூறி விற்கும் உமணர் நீண்ட நெறியிலே வண்டிகளோடு நிலவு போன்ற வெண் மணலைக் கடந்தும், ஒரே இடத்தில் தங்கியிருப்பதை விரும் பாத சுற்றத்துடனே புலம் பெயர்ந்து போய் வாழும் அவர் வாழ்வும் பிரிவினால் இன்னாதாகும். இடங்கள் தோறும் துன்புறுத்தி அலைக்கும் ஊதைக் காற்றுடனே நீ இல்லாத தனிமைக் காலத்து மாலைக் காலமும் எமக்கு உண்டே. மீன் இனத்தைத் தின்ற வெண்மையான குருகு மிதித்த நீரில்லாத நெய்தல் போல இவள் வாழாள் என்பதைச் சிந்தியாத நீ உறுதியாக அறியாமையுடையவன் ஆவாய்" என்று பொரு ளீட்டச் செல்லும் தலைவனைக் கண்ட தோழி தலைவியின் நிலையினை உரைத்தாள்.

## 213. எவ்வளவு துன்பம் தரப்போகிறதோ?

**நெய்தல் கூம்ப, நிழல் குணக்கு ஒழுகக்,**
**கல் சேர் மண்டிலம் சிவந்து நிலம் தணியப்,**
**பல் பூங் கானலும் அல்கின்றன்றே;**
**இன மணி ஒலிப்ப, பொழுது படப் பூட்டி,**
**மெய்ம்மலி காமத்து யாம் தொழுது ஒழியத்,**
**தேரும் செல் புறம் மறையும்; ஊரொடு**
**யாங்கு ஆவதுகொல் தானே – தேம்பட**
**ஊது வண்டு இமிரும் கோதை மார்பின்,**
**மின் இவர் கொடும் பூண், கொண்கனொடு**
**இன் நகை மேவி, நாம் ஆடிய பொழிலே?**

***– ஔவையார் நற் 187***

"நெய்தல் மலர் கூம்பியது ஞாயிறு மேற்குக் குன்றை அடைந்ததால் நிழல் கிழக்கே சென்றது. நிலத்திலுள்ள வெப்பம் தணிந்தது பல மலர்களையுடைய கடற்கரைச் சோலையும் பொலிவிழந்தது. பொழுதிருக்கும் போதே குதிரைகளைப் பூட்டிப் பல மணிகள் ஒலிக்கத் தேர் செல்வ தற்கு முன்பு, மிக்க அன்பினாலே யாம் அவரைத் தொழுது வழியனுப்பினோம். அவர் தேர் சென்று புறத்தே மறைந்தது தேனை உண்ண வண்டுகள் ஒலிக்கும் மலர் மாலையை மார்பில் அணிந்தவர் காதலர், மின்னல் போல ஒளிவிடும்

வளைந்த அணிகலன்களையும் அணிந்தவர். அக் காதலரோடு நாம் இனிமையாக இருந்து விளையாடிய இக் கடற்கரைச் சோலை இந்த ஊரோடு இனி எப்படி ஆகுமோ?" என்று பகற்குறி வந்து தலைவன் திரும்பிச் செல்லும் வேளை தலைவி தனக்குள் கூறிக் கொண்டாள்.

## 214. தேர் வந்து திரும்பியது

'சிறு வீ ஞாழல் தேன் தோய் ஒள் இணர்
நேர் இழை மகளிர் வார் மணல் இழைத்த
வண்டல் பாவை வன முலை முற்றத்து,
ஒண் பொறிச் சுணங்கின் ஐது படத் தாஅம்
கண்டல் வேலிக் காமர் சிறுகுடி,
எல்லி வந்தன்றோ தேர்?' எனச் சொல்லி,
அலர் எழுந்தன்று இவ் ஊரே; பலருளும்
என் நோக்கினளே அன்னை; நாளை
மணிப் பூ முண்டகம் கொய்யேன் ஆயின்,
அணிக் கவின் உண்மையோ அரிதே; மணிக் கழி
நறும் பூங் கானல் வந்து, அவர்
வறுந் தேர் போதல் அதனினும் அரிதே.

*– உலோச்சனார் நற் 191*

"சிறு மலர்களையுடைய ஞாழல் மரத்தின் தேன் பொருந்தி யிருக்கும் ஒள்ளிய கொத்துகள் செவ்விய அணி கலன் பூண்ட மகளிர் ஒழுங்குபட்ட மணலில் அமைத்த வண்டலால் செய்த விளையாட்டுப் பாவையின் அழகிய கொங்கையில் ஒள்ளிய புள்ளியுடைய தேமல் போல மெல்லி தாகப் படுமாறு பரவி இருக்கும் - கண்டல் மர வேலியுடைய அழகிய சிறுகுடியில் தேர் ஒன்று இரவில் வந்தது" எனச் சொல்லி இவ் ஊரில் அலர் எழுந்தது அப்போது பலர் இருக்கவும் அன்னை என்னையே நோக்கினாள். நாளை அழகிய கழி முள்ளிப்பூவை யான் பறிக்கவில்லையானால் என் மிக்க அழகு இருப்பது அரிது. அழகிய கழியிடத்துள்ள நறிய பூ மிகுந்த கானலில் வந்து தலைவர் நம்மைப் பார்க்கா மல் வறிதே தேரில் திரும்பிப் போதல் எம்மை இற்செறித்த அதனினும் அரிய துன்பமாகும்" என்று களவின்பத்தில்

நாட்டம் கொண்டு திருமணத்தைத் தள்ளிப் போடும் தலைவன் உணரத் தோழி உரைத்தாள்

## 215. கண் கலங்காது பார்த்துக் கொள்!

அருளாயாகலோ, கொடிதே! – இருங் கழிக்
குருளை நீர்நாய் கொழு மீன் மாந்தித்,
தில்லைஅம் பொதும்பில் பள்ளி கொள்ளும்
மெல்லம் புலம்ப! யான் கண்டிசினே –
கல்லென் புள்ளின் கானல்அம் தொண்டி,
நெல் அரி தொழுவர் கூர் வாள் உற்றெனப்,
பல் இதழ் தயங்கிய கூம்பா நெய்தல்
நீர் அலைத் தோற்றம் போல,
ஈரிய கலுழும், நீ நயந்தோள் கண்ணே.

*ஆசிரியர் ? நற் 195*

"கரிய கழியிலுள்ள நீர்நாய்க் குட்டி கொழுத்த மீன் களைத் தின்று தில்லைமரப் பொந்துகளில் படுத்திருக்கும் மெல்லிய கடற்கரைத் தலைவனே, கல் என ஒலிக்கும் பறவைக் கூட்டத்தையுடைய கடற்கரைச் சோலையாற் சூழ்ந்து தொண்டி என்னும் ஊர் அவ் ஊர் வயலிலே நெற்கதிர் அறுக்கும் உழவரின் கூர்மையான அரிவாளால் பல இதழ் களை உடையதும், விளங்கியதும், குவியாததுமான நெய்தல் மலர் அறுபடும் அறுபட்ட நெய்தல் மலர் நீரில் அலையும் தோற்றம் போல நீ நயந்த காதலியின் கண்கள் அலையும். அதனை யான் கண்டேன். அவள் அழாதிருக்க நீ அருளாதி ருப்பது கொடியது" என்று தலைவன் தலைவியை விரைந்து மண முடிக்க வேண்டி தோழி வற்புறுத்தினாள்.

## 216. திங்களே, நீ சிறுகிப் போவாய்

பளிங்கு செறிந்தன்ன பல் கதிர் இடைஇடைப்,
பால் முகந்தன்ன பசு வெண் நிலவின்,
மால்பு இடர் அறியா, நிறையுறு மதியம்!
சால்பும் செம்மையும் உடையை ஆதலின்,
நிற் கரந்து உறையும் உலகம் இன்மையின்,
எற் கரந்து உறைவோர் உள்வழி காட்டாய்!

நற் கவின் இழந்த என் தோள் போல் சாஅய்ச்,
சிறுகுபு சிறுகுபு செரீஇ,
அறி கரி பொய்த்தலின், ஆகுமோ அதுவே?

*– வெள்ளைக்குடி நாகனார் நற் 196*

*"பளிங்குகள் ஒன்று சேர்ந்தது போன்ற ஒளிக் கதிர்கள்; அவற்றின் இடையிடையே பாலை முகந்து வைத்தாற் போன்ற பசுமையான வெள்ளைநிலா; முகிலின் பிடரியிற்தோன்றிப் பிறர் அறியாக் கலைகள் பலவும் நிறைந்த திங்களே, நீ அமைதியும் நேர்மையும் உடையாய் ஆதலின் உனக்கு ஒளிந்து வாழும் உலக உயிர்கள் இல்லை ஆனால் எனக்கு ஒளிந்து வாழும் ஒருவர் உண்டு. அவர்தாம் என் காதலர் அவர் இருக்குமிடத்தை எனக்குக் காட்டுக காட்ட மாட்டாய் நீ அறிந்ததைச் சான்று கூறாது பொய்த்தலின், நல்ல அழகை இழந்த என் தோள் போல மெலிந்து சிறிது சிறிதாகக் குறைந்து செல்வாயாக நீ தேய்ந்து செல்லுதலின் காதலரைக் காட்டுவது உனக்கு இயலுமோ? முடியாதே" என்றாள் தலைவி தனக்குள்.*

## 217. இன்னும் உயிர் வாழ்கிறேனே!

ஓங்கு மணல் உடுத்த நெடு மாப் பெண்ணை
வீங்கு மடல் குடம்பைப் பைதல் வெண் குருகு,
நள்ளென் யாமத்து, உயவுதோறு உருகி,
அள்ளல் அன்ன என் உள்ளமொடு உள் உடைந்து,
உளனே – வாழி, தோழி! வளை நீர்க்
கடுஞ் சுறா எறிந்த கொடுந் திமிற் பரதவர்
வாங்கு விசைத் தூண்டில் ஊங்குஊங்கு ஆகி,
வளி பொரக் கற்றை தாஅய், நளி சுடர்,
நீல் நிற விசும்பின் மீனொடு புரைய,
பைய இமைக்கும் துறைவன்
மெய் தோய் முயக்கம் காணா ஊங்கே!

*– பேரி சாத்தனார் நற் 199*

*"வளைந்த கடல் நீரில் வலிய விரைவாகச் செல்லும் வளைந்த திமில் என்னும் படகில் பரதவர் மீன்பிடிக்கச் செல்வர் அவர் வளைந்த விசையான தூண்டிலை வீசி*

*எறிந்து இழுக்கும் போது தூண்டிலின் இடையிடையே காற்று வீசும். அதனால் பரத்வர் திமிலில் கொண்டு சென்ற விளக்கின் ஒளிக்கற்றை பரவி அமர்ந்து அவியாது நீலநிற வானில் உள்ள மீன்களோடு ஒப்பாகி மெல்ல மெல்ல மின்னும். அவ்வாறாய துறைவனின் உடம்பில் தோயும் முயக்கம் அடையாது யான் உள்ளேன். அப்போது, உயர்ந்த மணல் சூழ்ந்த நெடிய பெரிய பனை மரத்தின் பெரிய மடலில் கூடுகட்டி வாழும் வெண்மையான நாரை துணை யைப் பிரிவுற்றபோது இருள் செறிந்த இரவில் நரலும் அது கேட்டு யான் சேற்றுக்குழம்பு போல என் உள்ளத்தோடு மனமும் உருகி வருந்தும்; எனினும் யான் உயிரோடிருக்கி றேன்" என்று தலைவன் பிரிவால் வருந்திய தலைவியை ஆற்றுவித்தாள் தோழி.*

## 218. ஒருநாள் பிரினும் உய்வு அரிது

முழங்கு திரை கொழீஇய மூரி எக்கர்,
தடந் தாட் தழை முள்ளுடை நெடுந் தோட்டு
அக மடல் பொதுளிய முகைமுதிர் வான் பூங்
கோடு வார்ந்தன்ன, வெண் பூத் தாழை
எறி திரை உதைத்தலின், பொங்கித் தாது சோர்பு,
சிறுகுடிப் பாக்கத்து மறுகு புலா மறுக்கும்
மணம் கமழ் கானல், இயைந்த நம் கேண்மை
ஒரு நாள் பிரியினும் உய்வு அரிது என்னாது,
கதழ் பரி நெடுந் தேர் வரவு ஆண்டு அழுங்கச்
செய்த தன் தப்பல் அன்றியும்,
உயவுப் புணர்ந்தன்று, இவ் அழுங்கல் ஊரே.

*– உலோச்சனார் நற் 203*

*"ஒலிக்கும் அலை கொழித்த பெருமை பொருந்திய மணல் மேட்டில் இருப்பது, தாழை வளைந்த அடியை யுடையது முள்ளையுடைய நெடிய தொகுதியான உள்மடலில் நெருங்கிய அரும்பு முதிர்ந்தது. வெள்ளையான பொலிவுள்ள சங்கை நீட்டி வைத்தது போலக் காட்சியளிப்பது. வெள்ளை யான பூவையுடையது. மோதும் அலை உதைப்பதால் பொங்கித் தாதினை உதிர்ப்பது சிறுகுடிப் பாக்கத்துத் தெரு*

வின் புலால் மணத்தைப் போக்குவது. அவ்வாறாய மணம் கமழும் கடற்கரைச் சோலையில் இயைந்தது நம் நட்பு. ஒரு நாள் பிரியினும் நட்புப் பிழைத்தல் அரிது. இவ்வாறு கருதாமல் விரைவையுடைய குதிரைபூட்டிய நெடிய தேரின் வரவை ஆண்டுக் கெடும்படியாகச் செய்தது ஊர். இந்தத் தன் குற்றம் அன்றியும் இந்த ஆரவாரமுள்ள ஊர் வருத்த மும் பொருந்தியுள்ளது," என்று தலைமகன் கேட்பத் தோழி உரைத்தாள்.

## 219. வேறு மணமா? அழிவாள் தலைவி!

**கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை**
**முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்**
**கொழு மீன் கொள்பவர் பாக்கம் கல்லென,**
**நெடுந் தேர் பண்ணி வரல் ஆனாதே;**
**குன்றத்து அன்ன குவவு மணல் நீந்தி**
**வந்தனர், பெயர்வர்கொல் தாமே? அல்கல்,**
**இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇ,**
**கோட் சுறா எறிந்தென, சுருங்கிய நரம்பின்**
**முடி முதிர் பரதவர் மட மொழிக் குறுமகள்,**
**வலையும் தூண்டிலும் பற்றி, பெருங் கால்**
**திரை எழு பெளவம் முன்னிய**
**கொலை வெஞ் சிறாஅர் பாற்பட்டனளே.** – *ஆசிரியர் ? நற் 207*

"அன்னாய், உப்பங்கழி சூழ்ந்த கொல்லை, கண்டல் மர வேலியுடையது. முள்ளிச் செடிகளால் வேய்ந்த குறுகிய கூரையையுடைய சிறு மனைகள் அங்கு உண்டு. அங்கே கொழுவிய மீன் கொள்பவர் பாக்கம் உண்டு. 'கல்' என்னும் ஓசையுண்டாக நெடிய தேரை அழகுசெய்து இங்கே வருதல் காதலரைத் தவிர பிறர்க்கு அமையாதே. மலைபோல் திரண்டிருக்கும் மணலைக் கடந்து வந்தவர் தாமே வறிதே மீண்டு போவாரோ? நாள்தோறும் இளையரும் முதியரும் சுற்றத்தோடு கூடியிருந்து கொல்லுந் தன்மையுள்ள சுறாமீன் அறுத்ததனாலே வலையையும் தூண்டிலையும் பற்றிச் சுருங்கிய மெல்லிய கொடிகளால் முடிகின்ற முதிர்ந்த பரத வரின் குரலை மொழி பேசும் இளைய மகள் இவள்

*காதலருக்கே உரியவள். வேற்று வரைவுபடுத்தினால், பெருங் காற்றால் அலையெழும் நடுக்கடலையடையும் கொலைத் தொழிலில் விருப்பங் கொள்ளும் பரதவர் சிறு பிள்ளைகளிடத்தில் அகப்பட்டு அழிந்தவளே யாவாள்," என்று வேற்று மக்கள் மணமுடிவுக்கு வந்த போது தோழி தலைவி - தலைவன் களவியல் உரைத்தாள்.*

## 220. துறைகெழு கொண்கன் துறந்தனன்

யார்க்கு நொந்து உரைக்கோ யானே – ஊர் கடல்
ஓதம் சென்ற உப்புடைச் செறுவில்,
கொடுங் கழி மருங்கின், இரை வேட்டு எழுந்த
கருங் கால் குருகின் கோள் உய்ந்து போகிய
முடங்கு புற இறவின் மோவாய் ஏற்றை,
எறி திரை தொகுத்த எக்கர் நெடுங் கோட்டுத்
துறு கடற் தலைய தோடு பொதி தாழை
வண்டு படு வான் போது வெரூஉம்
துறை கெழு கொண்கன் துறந்தனன் எனவே?

*கோட்டியூர் நல்லந்தையார் நற் 211*

*"ஊரும் கடல்நீர் சென்ற உப்புடைய சேற்றைக் கொண்ட வளைந்த கழியிடத்து இரையை விரும்பி எழுந்த கரிய காலையுடைய குருகின் பாய்ந்து பிடித்தலுக்குத் தப்பிப் பிழைத்தோடியது வளைந்த முதுகும் தாடியுமுடைய ஆண் இறால் மீன். வீசும் அலை திரட்டிய மணல் மேட்டின் நெடிய கரையில் செறிந்த கடலின் புறத்திலே தலை சாய்ந்த இலைகள் பொதிந்த தாழையின் வண்டுகள் மொய்க்கும் பூவை நோக்கி இதுவும் ஒரு குருகு என இறால் மீன் அஞ்சும் அவ்வாறாய துறை பொருந்திய கடற்கரைத் தலைவன் என்னைத் துறந்தனன் என்று யாரிடத்தில் நொந்து உரைப்பேன்" என்று களவு நீட்டிக்கும் தலைவன் மணம் கொள்ளத் தோழி தானே கூறினாள்.*

## 221. எம்மொடு இருந்தால் என்ன?

குண கடல் இவர்ந்து, குரூஉக் கதிர் பரப்பி,
பகல் கெழு செல்வன் குடமலை மறைய,

புலம்ப வந்து இறுத்த புன்கண் மாலை,
இலங்கு வளை மகளிர் வியல் நகர் அயர,
மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண் சுடர்
நீல் நிறப் பரப்பில் தயங்கு திரை உதைப்பக்,
கரை சேர்பு இருந்த கல்லென் பாக்கத்து,
இன்று நீ இவணை ஆகி, எம்மொடு
தங்கின் எவனோதெய்ய? செங் கோல்
கொடு முடி அவ் வலை பரியப் போகிய
கோட் சுறாக் குறித்த முன்பொடு
வேட்டம் வாயாது எமர் வாரலரே.

*- மதுரைச் சுள்ளம்போதனார் நற் 215*

*"கீழைக்கடல் எழுந்து, நல்ல நிறத்தையுடைய கதிர்களைப் பரப்பி, பகல்கெழு செல்வன் என்னும் ஞாயிறு மேல் மலையில் மறையத் தனிமை வந்து தங்கிய துன்பம் தரும் மாலைக் காலத்தில், இலங்கிய வளையல்களை அணிந்த மகளிர் தத்தம் இல்லங்களிலே அணிசெய்ய மீன் கொழுப்பைச் சேர்த்து உருக்கிய நெய்யை ஊற்றி விளக் கேற்றுவர். நீலநிற முடைய பரப்பில் விளங்கும் அலைகள் மோதும், கரையிலிருக்கும் "கல்" என்னும் ஒலியுள்ள பாக்கத்து இன்று நீர் இவ் இடத்துள்ளவராகி எம்மோடு தங்கி யிருந்தால் என்ன? சிவந்த காம்புகளையும் வளைந்த முடி களையுமுடைய அழகிய வலை அறும்படியாகப் போகிய கொல்லும் தன்மையுள்ள சுறா மீன்கள் குறித்து மிக்க் வலிமையோடு வேட்டைக்குப் போன எம் சுற்றத்தார் வெற்றி பெறாது திரும்பி வரமாட்டார்" என்று பகற்குறி இடத்திற்கு வந்து மீளும் தலைவனிடம் தோழி சொன்னாள்*

## 222. தனியளாய் இன்னும் இருப்பதா?

ஞாயிறு ஞான்று கதிர் மழுங்கின்றே;
எல்லியும், பூ வீ கொடியின் புலம்பு அடைந்தன்றே;
வாவலும் வயின்தோறும் பறக்கும்; சேவலும்
நகை வாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும்;
ஆயாக் காதலொடு அதர்ப் படத் தெளிந்தோர்
கூறிய பருவம் கழிந்தன்று; பாரிய

பராரை வேம்பின் படு சினை இருந்த
குராஅற் கூகையும், இராஅ இசைக்கும்;
ஆனா நோய் அட வருந்தி, இன்னும்
தமியேன் கேட்குவென் கொல்லோ,
பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே?

*– கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார் நற் 218*

“ஞாயிறு மேற் திசையில் இறங்கிக் கதிர் மழுங்கியது. பூவுதிர்ந்த கொடிபோல, இரவும் தனிமை அடைந்தது. வெளவாலும் எல்லாப் பக்கமும் பறக்கும். ஆந்தைச் சேவலும் மகிழ்ச்சி அடைந்து நகைக்குந் தோறும் கூவும். குறையாத பொருட் காதலொடு வழியிற் செல்லத் துணிந்தவர் சொல்லிய காலம் கழிந்தது. மிகவும் பருத்த அடி மரத்தையுடைய வேம்பின் பெரிய கிளையில் இருந்த கொடிய குரலையுடைய கூகையும் இரவில் கூப்பிடும். தீராத காம நோய் துன்புறுத்த வருந்தி, இன்னும் தமியேனாய் இருந்து, பருத்த அடி மரத்தை யுடைய பனை மடலிலே இருக்கும் அன்றில் பறவையின் குரலையும் நான் கேட்க வேண்டும் போலும்?” என்று திருமணம் நீட்டித்த வழி ‘பொறுத்திரு’ என்ற தோழிக்கு வருந்தி தலைவி மொழிந்தனள்.

## 223. மகிழ்வித்தவன் மகிழ்விக்க வருவான்!

கண்ணும் தோளும் தண் நறுங் கதுப்பும்
பழ நலம் இழந்து பசலை பாய,
இன் உயிர் பெரும்பிறிது ஆயினும், என்னதூஉம்
புலவேன் வாழி – தோழி! – சிறு கால்
அலவனொடு பெயரும் புலவுத்திரை நளி கடல்
பெரு மீன் கொள்ளும் சிறுகுடிப் பரதவர்
கங்குல் மாட்டிய கனை கதிர் ஒண் சுடர்
முதிரா ஞாயிற்று எதிர் ஒளி கடுக்கும்
கானல்அம் பெருந் துறைச் சேர்ப்பன்
தானே யானே புணர்ந்தமாறே.

*– தாயங்கண்ணனார் நற் 219*

“தோழி, வாழி. என் கண்ணும், தோளும், குளிர்ந்த மணக்கும் கூந்தலும் பழைய அழகை இழந்து, பசலை பரவி

என் இன்னுயிர் இறந்துபடுவதாயினும் சிறிதும் புலவேன். ஏனென்றால் சிறிய கால்களையுடைய நண்டோடு வந்து போகும் புலவு நாறும் அலைகளையுடைய குளிர்ந்த கடலில் பெரிய மீன்களைப் பிடிக்கும் சிறுகுடிப் பரதவர் படகு களுக்குத் தெரியும்படி இரவில் கொளுத்திய நெருங்கிய கதிர்களைக் கொண்ட ஒள்ளிய விளக்கு முதிராத இள ஞாயிற்றின் எதிரே தோன்றிய ஒளிக்கு ஒப்பாகும். கழிக்கரைச் சோலையோடு பெரிய கடல் துறையுமுடைய சேர்ப்பன் முன்பு தானே வந்து என்னை மகிழ்வித்தான். இனியும் வருவான் என்பதால் யான் புலவேன்" என்று பொருள் தேடப் பிரிந்த தலைவன் பிரிவை ஆற்றாது தலைவி தோழிக்குச் சொன்னாள்.

## 224. விரைந்து மணத்தலே பழிப்பினை விரட்டும்

இவள்தன்
காமம் பெருமையின், காலை என்னாள்; நின்
அன்பு பெரிது உடைமையின், அளித்தல் வேண்டி,
பகலும் வருதி, பல் பூங் கானல்;
இன்னீர் ஆகலோ இனிதால் எனின், இவள்
அலரின் அருங் கடிப் படுகுவள் அதனால்
எல்லி வம்மோ, – மெல்லம் புலம்ப,
சுறவினம் கலித்த நிறை இரும் பரப்பின்
துறையினும் துஞ்சாக் கண்ணர்
பெண்டிரும் உடைத்து, இவ் அம்பல் ஊரே.

*– உலோச்சனார் நற் 223*

"நெய்தல் நிலத் தலைவனே, இவள் தன் காமம் மிகுதியாலே இது காலை நேரம் எனக் கருதமாட்டாள் உன்னிடம் மிகவும் அன்பு கொண்டிருத்தலால் இவளை நீ அளித்தல் வேண்டும். அதனைப் நீ பல பூக்களையுடைய சோலையில் பகலிலும் வருவாயாக. இவ்வாறு நீ வருதல் இனிதாகுமா என்றால் இல்லை. இவள் பழியினால் அரிய காவலில் வைக்கப்படுவாள். அதனால் நீ இனி இரவில் வருக அவ்வாறு வரின் இந்த அம்பல் நிறைந்த ஊரில் சுறா மீனினம் மிக்க நிறைந்த கடற் பரப்பிலுள்ள துறையிடத்தி

லும் துஞ்சாத கண்ணுடைய பெண்டிரும் உண்டு. ஆதலின் இவளை நீ வரைந்து கொள்ளுக' என்று தோழி கூறினாள்.

## 225. நீ செய்த அருள் அலராயிற்று!

அறிந்தோர் 'அறன் இலர்' என்றலின், சிறந்த
இன் உயிர் கழியினும் நனி இன்னாதே;
புன்னை அம் கானல் புணர் குறி வாய்ந்த
பின் ஈர் ஓதி என் தோழிக்கு, அன்னோ
படு மணி யானைப் பசும்பூட் சோழர்
கொடி நுடங்கு மறுகின் ஆர்க்காட்டு ஆங்கண்,
கள்ளுடைத் தடவில் புள் ஒலித்து ஓவாத்
தேர் வழங்கு தெருவின் அன்ன,
கௌவை ஆகின்றது – ஐய! – நின் அருளே.

*– தேவனார் நற் 227*

*"ஐய, அறிந்தோர் என்பவரெல்லாரும் "அறநெறியிலே ஒழுகுபரல்லர்" என்பதால் சிறந்த இவளது இனிய உயிர் கழி யினும் மிகவும் துன்பமுடையதே யாகும். புன்னை மரச் சோலையில் கூடுதற்குக் குறித்த இடம் வாய்க்கும்படி செய்த, பின்னிய குளிர்ந்த கூந்தலையுடைய என் தோழிக்கு ஐயோ, நீ செய்த அருள்தான் பெரிய அலராய் ஆயிற்று. அல்லவா? தொங்கும் மணிகளையுடைய யானைகளையும் பசிய பொன்னாலாகிய பூண்கள்ளயுமுடைய சோழரின் கொடியசை யும் தெருக்களையுடைய ஆர்க்காடு என்னும் ஊரில் கள்ளை யுடைய பானையில் வண்டுகள் ஒலித்து நீங்காத தேர்கள் வழங்கும் தெருவில் ஏற்படும் ஆரவாரம் போன்றதாய் இருந்தது எனவே விரைவில் வரைக" என களவொழுக்கம் நீட்டித்த தலைவனிடம், தோழி கூறினாள்.*

## 226. நெஞ்சம் நீங்காத காதல்

மை அற விளங்கிய மணி நிற விசும்பில்
கைதொழும் மரபின் எழு மீன் போல,
பெருங் கடற் பரப்பின் இரும் புறம் தோயச்,
சிறு வெண் காக்கை பலவுடன் ஆடும்
துறை புலம்பு உடைத்தே – தோழி, – பண்டும்,

உள் ஊர்க் குரீஇக் கரு உடைத்தன்ன,
பெரும் போது அவிழ்ந்த கருந் தாள் புன்னைக்
கானல் அம் கொண்கன் தந்த
காதல் நம்மொடு நீங்காமாறே. — *இளநாகனார் நற் 231*

"தோழி, கரிய அடி மரத்தையுடைய புன்னையின் பெரிய அரும்பு, வீட்டிலேயுள்ள ஊர்க்குருவியின் முட்டை உடைந்தது போல மலர்ந்தது. அவ்வாறாய சோலையில் நெய்தல் நிலத் தலைவன் முன்பு தந்த காதல் நம்மை விட்டு நீங்காமலுள்ளது. மாசற விளங்கிய நீலமணி போன்ற நிறத்தை யுடைய, விசும்பிலிருக்கும், கைதொழும் தகுதியுள்ள எழு மீன் போலப் பெரிய கடற்பரப்பிலே கரிய முதுகு நனையும்படி சிறிய, வெள்ளை நிறமான நீர்க் காக்கைகள் பலவும் நீராடும் கடற்துறை நமக்கு வருத்தம் தருவதாய் உள்ளது ஏனென்றால் அக் கடல் துறையில்தான் கொண்கன் பண்டு காதல் தந்தான்" என்று தலைவன் ஒருபுறமாக இருந்தபோது விரைவில் தலைவியை மணக்கத் தோழி கூறினாள்.

## 227. திருமணத்திற்குத் திரும்புகிறான்

உரவுத் திரை பொருத பிணர்படு தடவு முதல்,
அரவு வாள் வாய முள் இலைத் தாழை
பொன் நேர் தாதின் புன்னையொடு கமழும்
பல் பூங் கானல் பகற்குறி வந்து, நம்
மெய் கவின் சிதையப் பெயர்ந்தனன் ஆயினும்,
குன்றின் தோன்றும் குவவு மணல் ஏறி,
கண்டனம் வருக்ம் சென்மோ — தோழி, —
தண் தார் அகலம் வண்டு இமிர்பு ஊத,
படு மணிக் கலி மாக் கடைஇ,
நெடு நீர்ச் சேர்ப்பன் வரூஉமாறே. — *ஆசிரியர் ? நற் 235*

"தோழி! தாழை வலிய அலை மோதும் இடத்தில் இருப்பது. சொரசொரப்புள்ள வளைந்த அடிப்பாகத்தை யுடையது. அராவும் வாளரம் போன்ற வாயையுடையது. முள்ளுள்ள இலைகளைக் கொண்டது அத் தாழை பொன் போன்ற பூந்தாதையுடைய புன்னை மலரொடு சேர்ந்து கமழும் அவ்வாறாயதும் பல பூக்களை உடையதுமான

*சோலையில் பகற்குறி வந்து நம் உடலழைச் சிதையச் செய்து பெயர்ந்து போயினன் தலைவன். ஆயினும் அவன் குளிர்ந்த மாலையைப் பூண்ட மார்பில் வண்டுகள் ஒலித்து ஊத, ஒலிக்கும் மணி பூண்ட குதிரை பூட்டிய தேரைச் செலுத்தி வரைவொடு வருவான். ஆழமான நீர்ச் சேர்ப்பன் அவ்வாறு வரும் வழியைக் குன்றுபோல் தோன்றும் திரண்ட மணலில் ஏறிக் கண்டுவரச் செல்வோமா?" என்று திருமணத்திற்கு வருவான் தலைவன் எனத் தோழி கூறினாள்.*

## 228. வளையல்கள் உடைய முயங்குக

ஞான்ற ஞாயிறு குடமலை மறைய,
மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்
இனிது பெறு பெரு மீன் எளிதினின் மாறி,
அலவன் ஆடிய புலவு மணல் முன்றில்
காமர் சிறுகுடிச் செல்நெறி வழியின்,
ஆய் மணி பொதி அவிழ்ந்தாங்கு, நெய்தல்
புல் இதழ் பொதிந்த பூத் தப மிதிக்கும்
மல்லல் இருங் கழி மலி நீர்ச் சேர்ப்பற்கு,
அமைந்து தொழில் கேட்டன்றோ இலமே; 'முன்கை
வார் கோல் எல் வளை உடைய வாங்கி,
முயங்கு' எனக் கலுழ்த்த இவ் ஊர்
எற்று ஆவதுகொல், யாம் மற்றொன்று செயினே?

*– குன்றியனார் நற் 239*

*"இறங்கிய ஞாயிறு மேற்கு மலையில் மறைந்தது மயங்கின மாலை நேரத்தில் குடியால் மகிழ்ந்த பரதவர் இனிதிற் பெற்ற பெரிய மீன்களை எளிதில் விற்றனர். நண்டு விளையாடிய புலால் மணக்கும் மணல் முன்றிலையுடையது அழகிய சிறுகுடி. அதற்குச் செல்லும் ஒழுங்குபட்ட வழி யில் ஆய்ந்த நீலமணியின் மொட்டு அவிழ்ந்தது போல நெய்தலின் புல்லிய இதழ் குவிந்த மலர் கெடும்படியாகப் பரதவர் மிதித்துச் செல்வர். அவ்வாறாய வளப்பமான கரிய கழியுள்ள கடல் நீர்ச் சேர்ப்பற்கு யாம் உடன்பட்டுத் தொழில் கேட்டோமில்லை அப்படியிருக்க "முன் கையில் அமைந்த நெடிய கோல் தொழிலமைந்த ஒளி வளைகள் உடைய*

முயங்குக" எனக் கூறி அழுதது இவ்வூர். யாம் மற்றொன்று செயின் இவ்வூர் என்ன பாடுபடுமோ?" என்று தலைவன் வந்து மறைந்திருப்பது கண்டு குறிப்பாகக் கூறினாள் தோழி.

## 229. சிரிப்பு வருகிறதில்லையா?

நகையாகின்றே – தோழி, – 'தகைய
அணி மலர் முண்டகத்து ஆய் பூங்கோதை
மணிமருள் ஐம்பால் வண்டு படத் தைஇ,
துணி நீர்ப் பௌவம் துணையோடு ஆடி,
ஒழுகு நுண் நுசுப்பின், அகன்ற அல்குல்,
தெளி தீம் கிளவி, யாரையோ, என்
அரிது புணர் இன் உயிர் வவ்விய நீ?' என,
பூண் மலி நெடுந் தேர்ப் புரவி தாங்கி,
தான் நம் அணங்குதல் அறியான், நம்மின்
தான் அணங்குற்றமை கூறிக் கானல்
சுரும்பு இமிர் சுடர் நுதல் நோக்கி,
பெருங் கடற் சேர்ப்பன் தொழுது நின்றதுவே.

*அல்லங்கீரனார் நற் 245*

"தோழி, - தகுந்த அழகிய மலரையுடைய கழிமுள்ளியாற் செய்தது ஆய்ந்த பூங்கோதை அதை நீலமணி போன்ற கூந்தலில் வண்டுகள் இசைக்கும்படி சூடியிருக்கிறாய். தெளிந்த நீர்க் கடலிலே தோழிமாரோடு நீராடியிருக்கிறாய் நேரான நுண்ணிய இடையையும், அகன்ற அல்குலையும், தெளிந்த இனிய மொழியையும் உடைய பெண்ணே! "என்னை அரிதாகக் கூடியிருக்கும் இனிய உயிரைக் கவர்ந்த நீ யார்?" என்று பூண்கள் நிறைந்த நெடிய தேரில் குதிரை பூட்டி வந்த தலைவன் வினாவினான் அவன் நம்மை வருத்தம் செய்ததை அறியான். நம்மால் அவன் வருத்தம் அடைந்ததைக் கூறினான். கானல் வண்டுகள் ஓசையிடும் ஒளிமிக்க நம் நெற்றியைக் கண்டு பெருங்கடற் சேர்ப்பன் தொழுது நின்றான் அது நகையாய் இருக்கிறது.," என்றாள் தோழி

## 230. வருவாரோ யாதோ?

இரும்பின் அன்ன கருங் கோட்டுப் புன்னை
நீலத்து அன்ன பாசிலை அகம்தொறும்,

வெள்ளி அன்ன விளங்கு இணர் நாப்பண்
பொன்னின் அன்ன நறுந் தாது உதிரப்,
புலிப் பொறிக் கொண்ட பூ நாறு குரூஉச் சுவல்
வரி வண்டு ஊதலின் புலி செத்து வெரீஇ
பரியுடை வயங்கு தாள் பந்தின் தாவத்
தாங்கவும் தகை வரை நில்லா ஆங்கண்,
மல்லல்அம் சேரி கல்லெனத் தோன்றி,
அம்பல் மூதூர் அலர் எழச்,
சென்றது அன்றோ, கொண்கன் தேரே.

*– உலோச்சனார் நற் 249*

*“இரும்பு போன்ற கரிய கிளைகளையுடையது புன்னை மரம். நீலம் போன்ற பசிய இலைகளை எங்கும் உடையது அம் மரம். வெள்ளி போன்ற விளங்கிய பூங்கொத்துகளை கொண்டதாயிற்றே. பொன் போன்ற நறுந்தாது அம் மரப் பூங்கொத்தின் நடுவில் இருக்கும். அந் நறுந்தாது உதிரும். புலியின் புள்ளியைக் கொண்ட அழகு விளங்கிய நல்ல நிறமுள்ள மேற்புறத்தையுடைய வரிகள் அமைந்தவை வண்டுகள் அவை ஊதலால் இது புலியோசையோ என்று தேரிற் பூட்டிய குதிரைகள் அச்சமுறும் அவற்றைப் பலமுறை இழுத்து நிறுத்தியும் நில்லாது குதிரைகளின் விளங்கிய கால்கள் பந்து போலத் தாவும். அக் குதிரைகள் பூட்டிய காதலன் தேர், வளப்ப மிக்க நம் சேரியிலே கல் என்னும் படி ஒலி தோன்றி அம்பல் மூதூரில் பழி எழ நில்லாது சென்றதன்றோ? இனி வருவாரோ யாதோ?” என்று மணத்திற்குப் பொருள் தேடச் சென்ற தலைவனை எண்ணி மெலிந்து உரைத்தாள் தலைவி*

## 231. படுக்கைக்குத் துணை உண்டு

வண்டல் தைஇயும், வரு திரை உதைத்தும்,
குன்று ஓங்கு வெண் மணற் கொடி அடும்பு கொய்தும்,
துனி நல் நல்மொழி இனிய கூறியும்,
சொல் எதிர் பெறஅய் உயங்கி, மெல்லச்
செலீஇய செல்லும் ஒலி இரும் பரப்ப!
உமணர் தந்த உப்பு நொடை நெல்லின்

அயினி மா இன்று அருந்த, நீலக்
கணம் நாறு பெருந் தொடை புரளும் மார்பின்
துணை இலை தமியை சேக்குவை அல்லை —
நேர் கண் சிறு தடி நீரின் மாற்றி
வானம் வேண்டா உழவின் எம்
கானல்அம் சிறு குடிச் சேந்தனை செலினே.

*— உலோச்சனார் நற் 254*

"வண்டற்பாவை செய்து கொடுத்தும், வரும் அலைகளை எற்றியும், குன்றுபோல் ஓங்கியிருக்கும் வெள்ளை நிறமான மணலில் கொடியாகப் படர்ந்திருக்கும் அடும்பு மலரைக் கொய்தும், வெறுப்பில்லாத நல்ல மொழிகளில் இனியவற்றைக் கூறியும், சொல் எதிர் பெறாமல் வருந்தி மெல்லத் திரும்பிப் போவதென்று செல்லும் ஒலியுள்ள பெரிய கடற் பரப்பையுடைய தலைவனே, நேர்மையான இடத்திலே இருக்கும் உப்புப் பாத்திகளிலே கடல்நீரைப் பாய்ச்சி மாற்றி உப்பு விளைத்துக் கொள்வதன்றி, மழை வேண்டாத இவ் உழவுத் தொழில் செய்யும் எம் கானலிலுள்ள சிறு குடியில் வந்து தங்கிச் செல்வாயாக. செல்லின், உப்பு வணிகர் எம்மிடம் வாங்கிக் கொண்ட உப்புக்கு விலையாகத் தந்த நெல்லால் ஆக்கிய உணவு உன் குதிரை இன்று தின்னும். நீயும் நீலமலர்த் தொகுதி கமழும் பெருமாலை புரளும் உன் மார்போடு துணையில்லாமல் தனியாகப் படுத்து உறங்குவாயுமில்லை" என்று தலைவனிடம் தோழி உரைத்தாள்.

## 232. இல்லில் அடைத்தாள் அன்னை

பல் பூங் கானல் பகற்குறி மரீஇச்
செல்வல் — கொண்க, — செறித்தனள் யாயே —
கதிர் கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத்
திருவுடை வியன் நகர் வரு விருந்து அயர்மார்,
பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்கு உகிர் நிமிரல் மாந்தி, எல் பட,
அகல் அங்காடி அசை நிழல் குவித்த
பச்சிறாக் கவர்ந்த பசுங் கட் காக்கை
தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்

மருங்கூர்ப் பட்டினத்து அன்ன, இவள்
நெருங்கு ஏர் எல்வளை ஓடுவ கண்டே.

*– நக்கீரர் நற் 258*

*"தலைவனே, பல பூக்களையுடைய கானலில் பகற்குறி இடத்திற்கு யான் வந்து உன்னிடம் தலைவியைத் தாய் இல்லில் செறித்தாள் என்னும் செய்தியைச் சொல்லிப் போகிறேன். கிழக்கு மலையில் தோன்றிய ஞாயிற்றின் வெயில் கால் சுடும்படியாகக் காயும். பகற் பொழுதில் செல்வமுடைய அகன்ற இல்லத்திற்கு வரும் விருந்தினரை ஓம்பவேண்டும். பொன் வளையல் அணிந்த பெண்கள் வீட்டின் பக்கம் போட்ட, கொக்கின் நகம் போன்ற வெள்ளை நிறமான சோற்றைப் பசிய கண்களையுடைய காக்கைகள் உண்ணும். உண்டபின் அவை மாலையில் அகன்ற கடைத் தெருவிற் சென்று அசையும் நிழலில் குவித்திருக்கும் இறால் மீனைக் கவர்ந்து தின்னும். அதன்பிறகு தொழிலில்லாது மிதந்து கொண்டிருக்கும் தோணியினுடைய பாய்மரத்திலே சென்று உட்கார்ந்திருக்கும். அவ்வாறான மருங்கூர்ப்பட்டினம் போன்ற அழகுள்ளவள் தலைவி. அவளது நெருங்கிய அழகிய ஒளி யுள்ள வளையல்கள் கழன்று ஓடுவதைக் கண்டு தாய் இல்லி னுள் தலைவியை வெளி வராமற் செய்தாள்" என்ற தோழி தலைவனிடம் இயம்பினாள்.*

## 233. நாணம் விட்டுத் சொல்லத்தான் வேண்டும்!

பிறை வனப்பு இழந்த நுதலும், யாழ நின்
இறை வரை நில்லா வளையும், மறையாது
ஊர் அலர் தூற்றும் கௌவையும், நாண் விட்டு
உரை அவற்கு உரையாம் ஆயினும், இரை வேட்டு,
கடுஞ் சூல் வயவொடு கானல் எய்தாது,
கழனி ஒழிந்த கொடு வாய்ப் பேடைக்கு,
முட முதிர் நாரை கடல் மீன் ஒய்யும்
மெல்லாம் புலம்பல் கண்டு, நிலைசெல்லாக்
கரப்பவும் கரப்பவும் கைம்மிக்கு,
உரைத்த – தோழி! – உண்கண் நீரே.

*– இளவெயினனார் நற் 263*

"உடல் வளைந்த ஆண் நாரை ஒன்று. அதன் பேடை முதற் கருப்பத் துன்பத்தோடு இருந்தது. வளைந்த வாயைக் கொண்டிருந்தது. அது கடற்கரைக்கு வராமல் மருதநில வயலிலேயே தங்கியிருந்தது. அதற்கு இரை கொடுக்க விரும்பிய முடமுதிர் நாரை வேட்டைக்கு எழுந்தது. கடலில் மீனைப் பிடித்துக்கொண்டு வந்து கொடுத்தது. அவ்வாறாய நெய்தல் நிலத் தலைவனைக் கண்டு, தலைவியாகிய உன் பிறைபோன்ற அழகு இழந்த நெற்றியையும், முன்கை வரை நில்லாத வளையல்களையும், மறைக்காமல் ஊரவர் அலர் தூற்றும் பழியையும், நாம் சொல்லவேண்டும். ஆனால் அந்த உரையை அவற்கு நாம் நாணைவிட்டு எடுத்துரைக்கவில்லை. ஆயினும் மையுண்ட உன் கண்களின் நீர்த்துளிகளே நாம் பலமுறை மறைத்து வைத்தாலும் நிலை நில்லாது கைமிகுந்து உரைத்துவிட்டன. நாம் யாது செய்வோம்?" என்று தலைவன் சிறைப்புறமாக இருந்தபோது தோழி மணம் செய்திடத் தூண்டி உரைத்தாள்.

## 234. காமம் பெருகியது

நொச்சி மாஅரும்பு அன்ன கண்ண<br>
எக்க ஞெண்டின் இருங் கிளைத் தொழுதி,<br>
இலங்கு எயிற்று ஏஎர் இன் நகை மகளிர்<br>
உணங்கு தினை துழவும் கை போல், ஞாழல்<br>
மணம் கமழ் நறு வீ வரிக்கும் துறைவன் –<br>
தனனொடு புணர்த்த இன் அமர் கானல்,<br>
தனியே வருதல் நனி புலம்பு உடைத்து' என,<br>
வாரேன்மன் யான், வந்தனென் தெய்ய;<br>
சிறு நா ஒண் மணித் தெள் இசை கடுப்ப,<br>
இன மீன் ஆர்கை ஈண்டு புள் ஒலிக்குரல்,<br>
'இவை மகன்' என்னாஅளவை,<br>
வய மான் தோன்றல் வந்து நின்றனனே. — *கபிலர் நற் 267*

"விளங்கும் பற்களோடு அழகிய இனிய நகையையுடைய பெண்கள் காய வைத்த தினையைக் கை விரல்களால் துழாவுவர். அதுபோல நொச்சியின் கரிய அரும்பு போன்ற கண்களையுடைய மணல் மேட்டினுள் வாழும் நண்டின் பெரிய

*கிளைகளையுடைய கூட்டம் மணம் கமழும் ஞாழலின் உதிர்ந்த மலரைக் காலால் துழாவி விரித்துக் கோலம் செய்யும். அவ்வாறாய துறையையுடைய தலைவனோடு கூட்டிய இனிய விருப்பத்தையுடைய கானலில் தலைவி யின்றித் தனியாக யான் வருதல் மிகவும் வருத்தமுடையதாக இருக்கிறது" எனக்கருதி வாராமலிருந்த யான் முன்பு ஒரு நாள் வந்தனன். சிறிய நாவுடைய ஒள்ளிய மணியின் தெளிந்த ஓசையைப்போலக் கூட்டமான மீனைத் தின்ன வந்து கூடும் பறவை ஒலிக்கும் குரலைக் கேட்டு இவ்வொலி தலைவன் தேரின் மணியொலி எனக் கருதி, 'இதோ தலைவன்' என்று சொல்லுமுன் வலிய குதிரையைக் கொண்ட தோன்றல் வந்து நின்றனன்.*

## 235. உன் செயல் கொடிது

தடந் தாட் தாழைக் குடம்பை, நோனாத்
தண்டலை கமழும் வண்டு படு நாற்றத்து
இருள் புரை கூந்தல் பொங்கு துகள் ஆடி,
உருள் பொறி போல எம் முனை வருதல்,
அணித் தகை அல்லது பிணித்தல் தேற்றாப்
பெருந் தோட் செல்வத்து இவளினும் – எல்லா! –
எற் பெரிது அளித்தனை, நீயே; பொற்புடை
விரி உளைப் பொலிந்த பரியுடைய நன் மான்
வேந்தர் ஒட்டிய ஏந்து வேல் நன்னன்
கூந்தல் முரற்சியின் கொடிதே:
மறப்பல் மாதோ, நின் விறற் தகைமையே. – *பரணர் நற் 270*

*"எல்லா! அகன்ற தளையுடைய தாழையின் பகுதிகளாலே உண்டாக்கப்பட்ட எம் குடிலிலிருந்து பெறாதபடி, சோலை யில் கமழும் மலர்களைச் சூடியதால் வண்டுகள் வீழும் நறுமணமுள்ள இருள் போன்ற கூந்தலில் மிக்க துகளில் ஆடி உருளும் இயந்திரம் போல எம்முன் வருதலாகிய அழகுத் தகுதி தவிர உன்னை வயப்படுத்திக் கொள்ளத் தெரியாத பெரிய தோள்களையுடைய செல்வ மகளாகிய இவளைக் காட்டிலும் நீ என்மேல் பெரிதும் அருள் காட்டி னாய். எனினும், அழகிய விரிந்த பிடரி மயிர் பொலிவு*

பெற்றதும் விரைந்த நடையையுடையதுமான நல்ல குதிரைப் படையையுடைய பிண்டன் முதலான பகைவரைப் போரிலே தோற்று ஓடச் செய்து, அவரின் மகளிர் கூந்தலால் செய்யப் பட்ட கயிற்றால் அவரின் களிற்றைப் பிணிக்கும் ஏந்திய வேலையுடைய நன்னன் செய்கையினும் உன் செய்கை கொடி யதே. ஆதலால், உன் வலிய தகுதிப்பாட்டை மறந்து விடு கிறேன்" என்று தலைவனிடம் தோழி வாயில் எதிர் கொண்டு கூறினாள்.

## 236. நோயினும் பெரிது அம்பல்!

கடல்அம் காக்கைச் செவ் வாய்ச் சேவல்,
படிவ மகளிர் கொடி கொய்து அழித்தப்
பொம்மல் அடும்பின் வெண் மணல் ஒருசிறை,
கடுஞ் சூல் வதிந்த காமர் பேடைக்கு,
இருஞ் சேற்று அயிரை தேரிய, தெண் கழிப்
பூவுடைக் குட்டம் துழவும் துறைவன்
நல்காமையின், நசை பழுதாகப்,
பெருங் கையற்ற என் சிறுமை, பலர்வாய்
அம்பல் மூதூர் அலர்ந்து,
நோய் ஆகின்று; அது நோயினும் பெரிதே.

*– முக்கால் ஆசான் நல்வெள்ளையார் நற் 272*

"கடற் காக்கையின் சிவந்த வாயையுடைய சேவல், நோன்பு கொண்ட மகளிர் தங்கியிருப்பதற்காகக் கொடிகளைக் கொண்டு அழித்த அழகிய அடும்பின் கொடியைக் கொண்ட வெண்மணற் பரப்பின் ஒரு பக்கத்தில், முதற் கருப்பதோடு தங்கியிருந்த அழகிய பேடைக்கு இரை கொடுக்க விரும்பியது. கரிய சேற்றிலிருக்கும் அயிரை மீனைத் தேர்ந்தெடுக்க வேண்டித் தெளிந்த கழியிடத்துப் பூவுள்ள மடுவில் துழாவி யது. அவ்வாறாய நெய்தல் துறையையுடைய தலைவன் தலையளி செய்யாமையால் என் விருப்பம் வீணாகி விடவே அதனால் பெரிதும் செயலற்ற என் சிறுமை பலர் வாயிலும் அம்பலாகி மூதூரில் அலர்ந்து நோய் ஆயது, அது இப் போது பல நோயினும் பெரிதாயது" என்று மணநாளைத் தள்ளிப் போடும் ஆற்றாமையால் தலைவி வருந்தி கூறினாள்.

## 237. அறனிலாலன் ஆயினும் வரின் அணைப்பேன்!

செந்நெல் அரிநர் கூர் வாட் புண்ணுறக்
காணார் முதலொடு போந்தெனப், பூவே
படையொடும் கதிரொடும் மயங்கிய படுக்கைத்
தன்னுறு விழுமம் அறியா, மென்மெல,
தெறு கதிர் இன் துயில் பசு வாய் திறக்கும்
பேதை நெய்தல் பெரு நீர்ச் சேர்ப்பற்கு
யான் நினைந்து இரங்கேனாக, நோய் இகந்து,
அறனிலாளன் புகழ, எற்
பெறினும், வல்லேன்மன் – தோழி, – யானே.

*– அம்மூவனார் நற் 275*

"தோழி, செந்நெல் அறுக்கும் உழவர் கூரிய அரிவாள் கொண்டு வயலில் இருக்கும் நெற்கதிரோடு நெய்தல் மலரையும், அது அறுபடுமோ என்று காணாது சேர்த்து அறுப்பர். பேதை நெய்தல் மலர் அரிவாளோடு கதிரோடும் கலந்து நெல்லரிப் படுக்கையில் கிடந்து தனக்கு ஏற்பட்ட துன்பத்தை அறியாது மெல்ல மெல்ல ஞாயிற்றின் கதிரைக் கண்ட போது இனிய துயில் விலகி நெல்லரியிலிருந்து தன் பசிய வாயைத் திறக்கும். இவ்வாறாய கடற்கரைத் துறைவன் நம் தலைவன். யான் அவனை நினைந்து வருந்தவில்லை. குறித்த காலத்தில் வாராததால் அவன் அறனிலாளன். ஆனாலும் அயலார் புகழும்படி மீண்டும் வந்தடைந்து என்னைப் பெறினும், யான் என் நோய் நீங்கி அவனை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்வேன்" என்று தலைவி வன்புறை எதிர் மொழிந்தாள்.

## 238. பொருளொடு வந்தான் புரிக திருமணம்

படு காழ் நாறிய பராஅரைப் புன்னை,
அடு மரல் மொக்குளின், அரும்பு வாய் அவிழ,
பொன்னின் அன்ன தாது படு பல் மலர்
சூடுநர் தொடுத்த மிச்சில் கோடுதொறும்
நெய்கனி பசுங் காய் தூங்கும் துறைவனை

**இனி, அறிந்திசினே, கொண்கன் ஆகுதல் –**
**கழிச் சேறு ஆடிய கணைக் கால் அத்திரி**
**குளம்பினும் சேயிறா ஒடுங்கின;**
**கோதையும் எல்லாம் ஊதை வெண் மணலே.**

***– உலோச்சனார் நற் 278***

*“பொருந்திய வயிரம் தோன்றிய பருத்த அடியையுடைய புன்னை மரத்தின் அரும்புகள், அழிந்த பெருங் குரும்பையின் கொப்புளம் போன்றவை, வாய் திறந்து மலர்ந்தன. பொன் போன்ற தாது மிக்க பல மலர்களில் சூடுவோர் கொய்து தொடுத்தன போக எஞ்சியவை கிளைகள் தோறும் புன்னை யில் நெய்கனியும் பசிய காயாகத் தொங்கும் அவ்வாறாய கடற்றுறையுடைய தலைவனை இப்போது அறிந்தேன் உப்பங்கழிக் கரையிலுள்ள சேறுபட்ட திரண்ட கால்களை யுடைய கோவேறு கழுதைகள் தலைவனின் தேரில் பூட்டப் பட்டிருக்கும். அவற்றின் குளம்பெங்கும் சிவந்த இறால் மீன்கள் ஒடுங்கியிருக்கும். அவனது மார்பு மாலையிலும், பிறவற்றிலும் காற்று எறியும் வெண்மணல் ஒடுங்கியிருக்கும்! அவன் உனக்குக் கணவன் ஆவதற்கு வந்தனன் போலும் என்பது இப்போது தான் யான் அறிந்து கொண்டேன்” என்று மகிழ்ந்து கூறினாள் தோழினாள்.*

## 239. வருத்தம் செய்பவர் ஆகலாமா?

**ஒள் நுதல் மகளிர் ஓங்கு கழிக் குற்ற**
**கண் நேர் ஒப்பின கமழ் நறு நெய்தல்**
**அகல் வரிச் சிறு மனை அணியும் துறைவ! –**
**வல்லோர் ஆய்ந்த தொல் கவின் தொலைய,**
**இன்னை ஆகுதல் தகுமோ – ஓங்கு திரை**
**முந்நீர் மீமிசைப் பலர் தொழத் தோன்றி,**
**ஏமுற விளங்கிய சுடரினும்,**
**வாய்மை சான்ற நின் சொல் நயந்தோர்க்கே?**

***– மதுரை மருதன் இளநாகனார் நற் 283***

*“ஒளியுள்ள நெற்றியுடைய மகளிர் சிறந்த உப்பங் கழியினில் பறித்த நறுமணம் கமழும் நெய்தல் மலர்கள் பெண்கள் கண்களைப் போல் அழகுள்ளவை அவை, அகன்ற*

*வரிகள் பொருந்திய சிறிய மனைகளை அலங்கரிக்கும்படி யான துறைவனே, உயர்ந்த அலைகளையுடைய கடலின் மேலே பலரும் தொழும்படி தோன்றி, யாவரும் மகிழும்படி விளங்கும் ஞாயிறு போன்ற வாய்மை நிரம்பிய உம் சொல்லை விரும்பியவர்களுக்கு நீ நற்பண்பு உடையவனில்லை போலும்! சிலவாகிய மெல்லிய கூந்தலையுடைய எம் தலைவியின், திறமையாளர்கள் ஆராய்ந்து தெரிவித்தபடி அமைந்த பழமை யான அழகு தொலைந்து போக, வருத்தம் செய்பவர் ஆகுதல் தகுமோ? நீரே ஆராய்ந்து சொல்லும். செய்யும்" என்று பகற் குறி வந்த தலைனைத் தோழி விரைந்து மணம் முடிக்கக் கூறினாள்.*

## 240. தேர் ஒலி கேட்கையில் வேர்க்குது நெஞ்சம்

'விசும்பு உறழ் புரிசை வெம்ப முற்றிப்,
பைங் கண் யானை வேந்து புறத்து இறுத்த;
நல் எயிலுடையோர் உடையம்' என்னும்
பெருந்தகை மறவன் போல – கொடுங் கழிப்
பாசடை நெய்தற் பனி நீர்ச் சேர்ப்பன்,
நாம முதலை நடுங்கு பகை அஞ்சான்,
காமம் பெருமையின், வந்த ஞான்றை –
அருகாது ஆகி அவன்கண் நெஞ்சம்
நள்ளென் கங்குல் புள்ஒலி கேட்டொறும்,
'தேர்மணித் தெள் இசைகொல்?' என,
ஊர் மடி கங்குலும் துயில் மறந்ததுவே.

*– உலோச்சனார் நற் 287*

*"வானம் போல உயர்ந்த மதில் கெடும்படி முற்றி, பசிய கண்களையுடைய யானைப்படைப் பகைவேந்தன் புறத்தே இருந்தகாலை, அந்த நல்ல எயிலையுடையவர்கள் 'யாம் பாதுகாவலரைப் பெற்றுள்ளோம்' என்று கருதத் தக்க வகையில் பெருந்தகை மறவன் ஒருவன் உறக்கம் மறந்து காவல் செய்து மதிலினுள்ளே இருப்பது போல என் நிலை ஆனது. வளைந்த கழியின் பசிய இலையையுடைய நெய்தலின் மிக்க நீரையுடைய சேர்ப்பன் அஞ்சத் தக்க முதலையின் நடுங்கும் பகைக்கும் அஞ்சானாய் காதல் மிகுதியால் இரவில் இங்கு*

வந்த பொழுதும் எந் நெஞ்சம் வருந்தாததாகி அவனிடம் அன்புடையதாய் இருந்தது. ஆனால், அது இப்போது நள்ளிரவில் பறவைகள் ஒலிகேட்கும் தோறும் “என் தலைவன் தேரில் கட்டிய மணியின் தெளிந்த ஒலியோ” என்று ஊரார் சோர்ந்து உறங்கும் கங்குல் நேரத்திலும் உறக்கத்தை மறந்து ஏங்குகிறதே” என்று இற்செறிப்புக் காப்பு மிகுதி போல் ஆற்றாது தலைவி புலம்பி உரைத்தாள்.

## 241. போர்க்களம் ஆனது என் நலன்கள்

நீர் பெயர்ந்து மாறிய செறி சேற்று அள்ளல்
நெய்த் தலைக் கொழு மீன் அருந்த, இனக் குருகு
குப்பை வெண் மணல் ஏறி, அரைசர்
ஒண் படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்,
தண் பெரும் பௌவ நீர்த் துறைவற்கு, நீயும்,
கண்டாங்கு உரையாய்; கொண்மோ – பாண!
மா இரு முள்ளூர் மன்னன் மா ஊர்ந்து,
எல்லித் தரீஇய இன நிரைப்
பல் ஆன் கிழவரின் அழிந்த இவள் நலனே?

*– கபிலர் நற் 291*

“பாணனே, நீர் தன்னிலையிலிருந்து பெயர்ந்து மாறிப் போன செறிந்த அள்ளற்சேற்றில் நிணமிக்க தலையையுடைய கொழுவிய மீன்களை உண்ணுதற்குக் குருகுக் கூட்டம் குவிந்து வெண் மணலில் ஏறி, அரசரின் ஒள்ளிய படைத் தொகுதி போல விளங்கித் தோன்றும். அக் குளிர்ந்த பெரிய கடல்நீர்த் துறைவனுக்கு உரைப்பாயாக. மிக்க பெரிய முள்ளூர் மன்னன் மலையமான் திருமுடிக்காரி குதிரையேறி இரவில் கொண்டு வந்து சேர்த்த பகைவர் பசுக்கூட்டத்திற்கு உரியவர்களின் முகம் வாடியிருப்பது போல, வாடியிருக்கும் இத் தலைவியது நலத்தைக் கண்டாங்கு நீயும் உரை செய்யாய், சொல்வாயா?” என்று தூதாக வந்த பாணனிடம் தோழி தலைவியின் குறிப்பறிந்து வினவினாள்.

## 242. வீட்டிலிருந்தே முதிர்ந்தோம் - விரைக மணவிழா

முரிந்த சிலம்பின் நெரிந்த வள்ளியின்,
புறன்அழிந்து ஒலிவரும் தாழ்இருங் கூந்தல்
ஆயமும் அழுங்கின்று; யாயும் அஃது அறிந்தனள்,
அருங்கடி அயர்ந்தனள், காப்பே; எந்தை,
வேறு பல் நாட்டுக் கால் தர வந்த,
பல வினை நாவாய் தோன்றும் பெருந் துறை,
கலி மடைக் கள்ளின் சாடி அன்ன, எம்
இள நலம் இற்கடை ஒழியச்
சேறும்; வாழியோ! முதிர்கம் யாமே. — *ஔவையார் நற் 295*

*"தலைவியே, கேள். சரிவான மலைப் பக்கத்திலே தீயால் எரிந்து தோன்றும் வள்ளிக் கொடி போல உடலழகு அழிந்து தழைத்து முதுகில் தொங்கும் கரிய கூந்தலையுடைய தோழியர் கூட்டமும் வருந்துகிறது. களவொழுக்கத்தை அன்னையும் அறிந்தாள். அறிந்து நின்னை இற்செறித்துக் காப்பு வைத்தாள். எம் தந்தையின், வேறு பல நாட்டினின்றும் காற்றால் வந்து சேரும் பல வேலைப்பாடுகள் நிறைந்த கப்பல்கள் பெரிய துறையில் விளங்கிக் காணும். அத் துறையிலே வைக்கப் பட்டிருக்கும் செருக்கைத் தரும் கள்சாடி போன்ற என் இளைய அழகு வீட்டுவாயிலிலேயே அழிந்தொழிய யாம் செல்வோம். யாம் எம் இல்லினுள் இருந்தே முதிர்ந்து முடிகின்றோம். யாம் அழகை இழந்து முதிர்ந்து முடிவதற்குக் காரணமாய் இருந்த நீர் நெடுங்காலம் வாழ்க" என்று இற்செறிப்புற்ற தலைவி தலைவனை விரைந்து மணக்க அறிவித்தாள்.*

## 243. அவரே நம் தலைவர்

உரு கெழு யானை உடை கோடு அன்ன,
ததர் பிணி அவிழ்ந்த தாழை வான் பூ,
தயங்கு இருங் கோடை தூக்கலின், நுண் தாது
வயங்கு இழை மகளிர் வண்டல் தாஅம்
காமர் சிறுகுடி புலம்பினும், அவர்காண்;

நாம் இலம் ஆகுதல் அறிதும் மன்னோ —
வில் எறி பஞ்சி போல, மல்கு திரை
வளி பொரு வயங்கு பிசிர் பொங்கும்
நளி கடற் சேர்ப்பனொடு நகாஅ ஊங்கே.

*— வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் நற் 299*

*"நெருங்கிய பிணிப்பு அவிழ்ந்த தாழையின் வெள்ளை நிறமான பூக்கள் அச்சம் விளைக்கும் யானையின் உடைந்த கொம்புபோலக் காணப்படும். அசையும் கடிய மேல்காற்று வீசுதலாலே அப் பூக்கள் நுண்ணிய தாதுகளை, ஒளிமிகு கலன் அணிந்த மகளிர் விளையாட்டாகக் கட்டிய சிற்றில்லில் உதிர்க்கும் தாதுகள் பரந்துகிடக்கும். வில்லால் அடிபட்ட பஞ்சுபோலப் பெருகிய அலைகளிலே காற்று வீசுவதால் வயங்கிய பிசிர்கள் பொங்கும் நளி கடற்சேர்ப்பனொடு மகிழாத நாளில் இருந்தும் இல்லாதேம் போல ஆதலை உணர்கின்றேன்" என்று தலைவன் மறைவாக இருந்தபோது தோழி கூறினாள்.*

## 244. துஞ்சாக் கண்ணள் துயரால் மெலிந்தாள்

ஒலி அவிந்து அடங்கி, யாமம் நள்ளெனக்,
கலி கெழு பாக்கம் துயில் மடிந்தன்றே;
தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்கு மடற் குடம்பைத்
துணை புணர் அன்றில் உயவுக் குரல் கேட்டொறும்,
'துஞ்சாக் கண்ணள், துயர் அடச் சாஅய்,
நம்வயின் வருந்தும், நன்னுதல்' என்பது
உண்டுகொல்? — வாழி. தோழி! — தெண் கடல்
வன் கைப் பரதவர் இட்ட செங் கோல்
கொடு முடி அவ் வலை பரியப் போக்கிக்,
கடு முரண் எறி சுறா வழங்கும்
நெடுநீர்ச் சேர்ப்பன்தன் நெஞ்சத்தானே.

*— மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார் நற் 303*

*"ஒலியெல்லாம் ஒய்ந்து அடங்கி நள்ளிரவு வந்தது செருக்கு மிகுந்த பாக்கம் துயிலில் ஆழ்ந்தது தெளிந்த கடலில் வலிய கையையுடைய பரதவர் மீன்பிடிக்கச் செல்வர்*

அவர் இட்ட சிவந்த கோலையும் வலித்துக் கட்டிய முடியை யும் உடைய அழகிய வலையைக் கிழித்துச் சென்று கடுமை யான வலிமையால் எறியும் சுறாமீன் கடலில் வழங்கும். அவ்வாறாய நெடுநீர்ச் சேர்ப்பன் தன் உள்ளத்தில் என்னை நினைப்பதுண்டா? தொன்றுதொட்டு உறையும் கடவுள் சேர்ந்த பருத்த அடியையுடைய ஊர்ப்பொது மன்றத்தி லுள்ள பனைமரத்தின் வளைந்த மடலில் உள்ள கூட்டில் தன் பெடையோடு சேர்ந்திருக்கும் அன்றிலின் வருத்தம் தரும் குரலைக் கேட்கும் தோறும். 'நன்னுதல் தலைவி, உறங்காத கண்ணையுடையவளாய், துயர் வருத்துதலானே உடல் மெலிந்தாளாய் நம் காரணமாக வருந்துவாளே' என்று எண்ணுதலும் உண்டா? ஆராய்ந்து கூறுக" என்று கழி காமம் தாங்க முடியாத தலைவி தலைவன் கேட்ப தோழி யிடம் வினவினாள்.

## 245. வருபவன் காணாமல் வருந்துக சிறிதே!

கவர் பரி நெடுந் தேர் மணியும் இசைக்கும்;
பெயர்பட இயங்கிய இளையரும் ஒலிப்பர்;
கடல் ஆடு வியல் இடைப் பேர் அணிப் பொலிந்த
திதலை அல்குல் நலம் பாராட்டிய
வருமே – தோழி, – வார் மணற் சேர்ப்பன்:
இறை பட வாங்கிய முழவுமுதற் புன்னை
மாஅரை மறைகம் வம்மதி – பானாள்,
பூ விரி கானல், புணர் குறி வந்து, நம்
மெல் இணர் நறும் பொழில் காணா
அல்லல் அரும் படர் காண்கம் நாம், சிறிதே.

*– அம்மூவனார் நற் 307*

"தோழி, விரைவாகச் செல்வதில் மனமுள்ள குதிரை பூட்டிய பெரிய தேரின் மணியும் இசைக்கும். தேரோடு பெயர்ந்து நடந்து வரும் இளையரும் ஆரவாரம் செய்வர். கடலில் நீராடும் அகன்ற இடத்தில், பெரிய அழகாக விளங்கிய திதலை பரவிய அல்குலின் நலத்தைப் பாராட்டிய வார்மணல் சேர்ப்பன் வருகின்றான். எனவே வீட்டின் உட்பக்கம் வளைந்த குடமுழாப் போன்ற அடிமரத்தை

யுடைய புன்னையின் கரிய அடிப்பாகத்தில் ஒளிந்து கொள் வோம், வா இந்தப் பாதிநாள் இருட்டில் பூக்கள் விரிந்த சோலையில் கூடும் இடத்தில் வந்து மெல்லிய பூங்கொத்து களையுடைய நறுமணமுள்ள பொழிலில் நம்மைக் காணாமல் அவன் படும் அல்லல் அரும்படரை நாம் சிறிது காண்போம்" குறி நீட ஆற்றாளாகிய தலைவியிடம் தோழி கூறினாள்.

## 246. தேர் ஒலி கேட்டல் அரிதாகிவிட்டது!

**பெயினே,**
**விடு மான் உளையின் வெறுப்பத் தோன்றி, பெயினே,**
**இருங் கதிர் நெல்லின் யாணரஃதே:**
**மா நீர் முண்டகம் தாஅய்ச் சேறு புலர்ந்து, வறப்பின்,**
**இருங் கழிச் செறுவின் வெள் உப்பு விளையும்,**
**அழியா மரபின் நம் மூதூர் நன்றே –**
**கொழு மீன் சுடு புகை மறுகினுள் மயங்கிச்,**
**சிறு வீ ஞாழல் துறையுமார் இனிதே;**
**ஒன்றே – தோழி, – நம் கானலது பழியே;**
**கருங் கோட்டுப் புன்னை மலர்த்தாது அருந்தி,**
**இருங் களிப் பிரசம் ஊத, அவர்**
**நெடுந் தேர் இன் ஒலி கேட்டலோ அரிதே.**

***– உலோச்சனார் நற் 311***

"தோழி, அழியாத மரபினையுடைய நம் ஊர் நல்ல தொன்றாகும். மழை பெய்யின், ஓட விட்ட குதிரையின் பிடரி மயிர்போல மிகுந்து தோன்றிப் பெரிய கதிர்களைக் கொண்ட நெல்லின் புது வருவாயை உடையதாய் இருக்கும். பெய்யா தொழியின், சிறந்த நீரிலிருக்கும் முள்ளிச் செடியின் மலர் உதிர்ந்து பரந்து சேறெல்லாம் ஒருசேரக் காய்ந்து கரிய கழிச் சேற்றிடமெங்கும் வெள்ளை நிற உப்பு விளையும். இவை தவிர, கொழுத்த மீனைச் சுடும் புகை, தெருவினுள் கலந்து சிறிய மலருடைய ஞாழல் மரங்களுள்ள துறையும் இனிதாய் இருக்கும். ஆனால் நம் கடற்கரைச் சோலை யொன்றுமே ஊரார் எடுக்கும் ஒரு பழியுடையது. கரிய கிளை களையுடைய புன்னை மர மலரிலுள்ள தேனை அருந்திக் களிப்புடைய கரிய வண்டுகள் ஒலிக்க, அவர் நெடுந்தேரின்

இனிய ஒலி கேட்டலோ அரிதாய் உள்ளதே" என்று பழிச் சொல்லால் அஞ்சி ஆற்றாத தலைவி தோழியிடம் முறை யிட்டாள்.

## 247. விழுமிய நட்பு வீணாவதுவோ?

ஈண்டு பெருந் தெய்வத்து – யாண்டு பல கழிந்தெனப்,
பார்த் துறைப் புணரி அலைத்தலின், புடைகொண்டு,
மூத்து, வினை போகிய முரி வாய் அம்பி,
நல் எருது நடை வளம் வைத்தென, உழவர்
புல்லுடைக் காவில் தொழில் விட்டாங்கு,
நறு விரை நன் புகை கொடாஅர், சிறு வீ
ஞாழலொடு கெழீஇய புன்னை அம்கொழு நிழல்
முழவு முதற் பிணிக்கும் துறைவ! நன்றும்
விழுமிதின் கொண்ட கேண்மை நொவ்விதின்
தவறும்; நற்கு அறியாய் ஆயின், எம் போல்,
ஞெகிழ் தோள், கலுழ்ந்த கண்ணர்,
மலர் தீய்ந்தனையர், நின் நயந்தோரே.

*– அம்மூவனார் நற் 315*

"நல்ல எருது நடைச் சிறப்பு நீங்கியதானால் அதற்கு உரிமையாளரான உழவர் அதனை வைத்துத் தொழில் செய்யாது புல்லையுடைய தோட்டத்திலே மேய்வதற்கு விட்டுவிடுவர். அதுபோல, பெருந் தெய்வத்தின் ஆணைப்படி கூடிய யாண்டுகள் பல கழிந்து போயின என்பதாலும் பாறையை அடுத்த துறையிடத்திலே கடல் நீர் அலைத்தலால் பக்கம் கொண்டு மோதப்பட்டு முதிர்ந்து தொழில் செய்ய உதவாது ஒழிந்தாலும் முரிந்த குறட்டையுடைய அம்பி என்னும் ஓடத்திற்கு நறிய மணமுடைய நல்ல புகை போடா மல் சிறிய மலரையுடைய ஞாழல் மரத்தோடு சேர்ந்த புன்னை மரத்தின் அழகிய செழிப்பான நிழலிலே அந்த மரத்தின் குடமுழாப் போன்ற அடிப்பாகத்தில் அம்பியைக் கட்டிப் போடுவர். அவ்வாறாய துறைவனே, கேள். நன்றாக வும் சிறப்பாகவும் கொண்ட நட்பு நட்பாகாமல் தவறிப் போகும் என்பதனை நீ நன்கு அறியாமற்போனால், உன்னை விரும்புவோர் பெருந் துன்பம் அடைவர். எம்மைப் போல்,

*நெகிழ்ந்த தோளும் அழுத கண்ணும் உடையவராய், மலர் தீப்பட்டு தீய்ந்து போனது போன்ற நிலையை அடைவர்" என்று பரத்தை தலைவனை நொந்துரைத்தாள்.*

## 248. மீன் கண்துஞ்சும் யான் கண் துஞ்சேன்

ஓதமும் ஒலி ஓவின்றே; ஊதையும்
தாது உளர் கானல் தவ்வென்றன்றே;
மணல் மலி மூதூர் அகல் நெடுந் தெருவில்,
கூகைச் சேவல் குராலோடு ஏறி,
ஆர் இருஞ் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்,
அணங்கு கால் கிளரும், மயங்கு இருள் நடு நாள்;
பாவை அன்ன பலர் ஆய் வனப்பின்,
தட மென் பணைத் தோள், மடம் மிகு குறுமகள்
சுணங்கு அணி வன முலை முயங்கல் உள்ளி,
மீன் கண் துஞ்சும் பொழுதும்,
யான் கண் துஞ்சேன்; யாதுகொல் நிலையே?

*– வினைத்தொழில் சோகீரனார் நற் 319*

*"கடலும் ஒலி அடங்கிற்று. ஊதைக் காற்றும் பூந்துகள் உதிரும் சோலையில் தவ்வென்று அடங்கிற்று. மணல் மிக்க மூதூரின் அகன்ற நீண்ட தெருவில் ஆண் கூகை பெண் கூகையோடு சென்று பெரிய சதுக்கத்தில் அச்சம் உண்டாகும் படி கூவும். மயங்கிய இருளையுடைய நடு நாளில் பேய்கள் வெளிக் கிளம்பும், பாவையன்ன பலரும் புகழும் அழகும் அகன்ற மெல்லிய பருத்த தோளுமுடைய என் இளமை மிக்க காதலியின் தேமல் படர்ந்த அழகிய கொங்கையைத் தழுவ நினைத்து மீன்கள் உறங்கும் நேரத்திலும் யான் கண் உறங்காமல் உள்ளேன். என் நிலை யாதாகுமோ?" என்று தலைவிக் குற்ற காப்பு மிகுதியால் தலைவன் தன்னுள் சொல்லினான்.*

## 249. நேரம் குறித்தேன் மறவாது வருக

ஓங்கித் தோன்றும், தீம் கள், பெண்ணை
நடுவணதுவேதெய்ய – மடவரல்
ஆயமும் யானும் அறியாது அவண

மாய நட்பின் மாண் நலம் ஒழிந்து, நின்
கிளைமை கொண்ட வளை ஆர் முன்கை
நல்லோள் தந்தை சிறுகுடிப் பாக்கம்;
புலி வரிபு எக்கர்ப் புன்னை உதிர்த்த
மலி தாது ஊதும் தேனோடு ஒன்றி,
வண்டு இமிர் இன் இசை கறங்க, திண் தேர்த்
தெரி மணி கேட்டலும் அரிதே;
வரும் ஆறு ஈது; அவண் மறவாதீமே.

*– வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் நற் 323*

*“உன் மாயமான நட்பினால் உன் நல்ல காதலியின் மாட்சிமைப்பட்ட நலம் தொலைந்தது. உன் உறவைக் கொண்ட, வளையல் அணிந்த முன் கைகளையுடைய நல்லவளான அவள் தந்தையின் சிறு குடிப்பாக்கம், இனிய கள் வடியும், ஓங்கித் தோன்றும் பனை மரங்களின் நடுவில் உள்ளது. அங்கே மட நோக்குடைய ஆயமும் யானும் ஒருவரை ஒருவர் அறியாதபடி இருப்போம். அங்கே புலியின் வரி போன்ற மணல்மேட்டில் இருக்கும் புன்னை மரம் உதிர்த்த தாது நிரம்பிய பூக்களில் தேன் எடுக்க ஊதும் ஆண் - பெண் வண்டுகள் முரலும். இந்த இனிய ஓசை மிக்கு ஒலித்தலால் உன் திண்ணிய தேரின் விளங்கிய மணி ஒலிக்கும் ஓசையைப் பிறர் கேட்டு அறிய முடியாது. அங்கு வரும் வழி இதோ இது. மறவாது அங்கு வருக” என்று தோழி இரவுக் குறிக்கு உடன்பட்டுரைத்தாள்.*

## 250. சாதலும் இனிதே காதல் தோழி

நாடல் சான்றோர் நம்புதல் பழி எனின்,
பாடு இல கலுழும் கண்ணொடு சாஅய்ச்
சாதலும் இனிதே – காதல்அம் தோழி!–
அந் நிலை அல்லஆயினும், 'சான்றோர்
கடன்நிலை குன்றலும் இலர்' என்று, உடன் அமர்ந்து,
உலகம் கூறுவது உண்டு என, நிலைஇய
தாயம் ஆகலும் உரித்தே – போது அவிழ்
புன்னை ஓங்கிய கானல்
தண்ணம் துறைவன் சாயல் மார்பே. *– அம்மூவனார் நற் 327*

*"நம்மை நாடி வந்த சான்றோரை விரும்புதல் பழி என்றால், உறக்கம் இல்லாது கலங்கி அழும் கண்களோடு வருந்தி மெலிந்து சாதலும் இனியதே. அன்புமிக்க தோழி, அப்படிச் சாதல் கிடைக்காவிட்டாலும், "சான்றோர், கடமையைச் செய்யும் நிலையிலிருந்து தவற மாட்டார்" என்று ஒருசேர உலகம் கூறும் மொழி உண்மையாகுமாறு அவர் மார்பு நிலையான உரிமையாக ஆவது கூடும். சாதல் அல்லது மார்பு என்ற இரண்டில் ஒன்று கிடைத்தால் நல்லது. அரும்பு கள் மலரும்படியான புன்னை மரங்கள் நிரம்பியிருக்கும் சோலைக்கு உரிமையுடையவரும் குளிர்ந்த நீர்த் துறைக்குத் தலைவருமான நம் தலைவருடைய மார்பு மென்மையான மார்பு; நாம் பெறுவதற்கு உரிமையுடையது" என்று மணவாது காலம் நீட்டிக்கும் காதலனால் வருந்திய தலைவி தோழி யிடம் சொன்னாள்.*

## 251. இனிதே நம் ஊர் இரவில் வருக!

**உவர் விளை உப்பின் உழாஅ உழவர்**
**ஒழுகை உமணர் வரு பதம் நோக்கி,**
**கானல் இட்ட காவற் குப்பைப்,**
**புலவு மீன் உணங்கல் படு புள் ஒப்பி,**
**மட நோக்கு ஆயமொடு உடன் ஊர்பு ஏறி,**
**'எந்தை திமில், இது, நுந்தை திமில்' என**
**வளை நீர் வேட்டம் போகிய கிளைஞர்**
**திண் திமில் எண்ணும் தண் கடற் சேர்ப்ப!**
**இனிதேதெய்ய, எம் முனிவு இல் நல் ஊர்;**
**இனி, வரின் தவறும் இல்லை; எனையதூஉம்**
**பிறர் பிறர் அறிதல் யாவது –**
**தமர் தமர் அறியாச் சேரியும் உடைத்தே.**

***– உலோச்சனார் நற் 331***

*"உழாத உழவராகிய பரதவர் உவர் நிலத்திலே விளைத்த உப்பை வாங்கும் வண்டியுடைய உப்பு வாணிகர் வரும் காலம் பார்த்துக், காவலையுடைய உப்புக் குவியலைக் கானலில் இட்டு வைப்பர். அங்கே பரதவர் மகளிர் புலவு நாறும் மீன்களைக் காய வைப்பர். அப்போது மீனைக் கவர வந்து*

விழும் பறவைகளை ஓட்டுவர். மட நோக்குடைய ஆயமொடு சேர்ந்து பரதவர் மகளிர் ஊர்ந்து ஏறி உப்புக்குவியலில் நின்று, வளைந்த கடல் நீரில் மீன் வேட்டைக்குப் போயிருந்த சுற்றத்தாரது திண்ணிய மீன் படகை, 'இது எந்தை திமில், அது நுந்தை திமில்' என்று எண்ணுவர். அக் குளிக்கடல் சேர்ப்பனே, வெறுப்பில்லாத எம் நல்ல ஊர் இனியதே. இப்போது நீ அங்கு வந்தாலும் தவறில்லை. தமர், தமரை அறியாத சேரி அது. ஆதலால் பிறர், பிறரை எந்த அளவும் அறிவது எப்படி? ஆதலின் ஐயமின்றி வருக" எனத் தோழி தலைவியை இரவில் வந்து காணுமாறு தலைவனிடம் உரைத்தாள்.

## 252. காமம் மிகுதி களைவார் இல்லையே!

**திங்களும் திகழ் வான் ஏர்தரும்; இமிழ் நீர்ப்**
**பொங்கு திரைப் புணரியும் பாடு ஓவாதே;**
**ஒலி சிறந்து ஓதமும் பெயரும்; மலி புனற்**
**பல் பூங் கானல் முள் இலைத் தாழை**
**சோறு சொரி குடையின் கூம்பு முகை அவிழ,**
**வளி பரந்து ஊட்டும் விளிவு இல் நாற்றமொடு**
**மை இரும் பனைமிசைப் பைதல உயவும்**
**அன்றிலும், என்புற நரலும்; அன்றி,**
**விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல் யாழ்**
**யாமம் உய்யாமை நின்றன்று;**
**காமம் பெரிதே; களைஞரோ இலரே!**

***– வெள்ளிவீதியார் நற் 335***

"திங்களும் திகழும் வானத்தில் தோன்றுகின்றது. கடலும் பொங்கும் அலையோடு ஒலிக்கின்றது. கடல்நீரும் ஒலி மிகுந்து கரையை உடைத்துப் புறப்படுகிறது. தாழையும், நிரம்பிய நீரையும் பல பூவையுமுடைய கானலில் முள்ளுடைய இலையைக் கொண்டது. சோறு எடுத்துச் சொரியும் அகப்பை போலக் கூம்பிய அரும்பு மலர்ந்து நறுமணத்தைக் காற்றில் வீசுகிறது. காற்று, விளிவில்லாத அம் மணத்தோடு கரிய பெரிய பனையில் மோதுகிறது. அன்றில், அப் பனை மரத்தில் உள்ளது. என் பக்கத்து வந்து எலும்பு உருகக்

கத்துகிறது. நல்ல யாழ், இவையெல்லாம் தவிர, விரலால் வாசிக்கப் படுவது யாமம் வரை வாசிக்கப்படுகிறது என் காமம், இவை யாவற்றாலும் பெரிதாகிறது. அக் காமத்தைக் களையும் தலைவர் அருகில் இல்லையே" என்று காதற் காம மிகுதியாள் வருந்தி சொன்னாள் தலைவி

## 253. குருகு துணை கூப்பிடல் நிறுத்தவில்லையே!

கடுங் கதிர் ஞாயிறு மலை மறைந்தன்றே;
அடும்பு கொடி துமிய ஆழி போழ்ந்து, அவர்
நெடுந் தேர் இன் ஒலி இரவும் தோன்றா;
இறப்ப எவ்வம் நலியும், நின் நிலை;
'நிறுத்தல் வேண்டும்' என்றி; நிலைப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே!—மால் கொள
வியல் இரும் பரப்பின் இரை எழுந்து அருந்துபு,
புலவு நாறு சிறுகுடி மன்றத்து ஓங்கிய
ஆடு அரைப் பெண்ணைத் தோடு மடல் ஏறி,
கொடு வாய்ப் பேடைக் குடம்பைச் சேரிய,
உயிர் செலக் கடைஇப் புணர் துணைப்
பயிர்தல் ஆனா, பைதல்அம் குருகே?

*– மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார் நற் 338*

"தோழி, கடுமையான வெப்பக் கதிர்களையுடைய ஞாயிறு மலையில் மறைந்தது. அடும்பின் கொடி துணிபட ஊடறுத்த அவரின் நெடிய தேரின் இனிய ஒலி தோன்றும் இரவும் வரவில்லை என்னைக் காமநோய் மிகவும் வாட்டும். ஆனால் அந் நிலையைப் "பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்று நீ சொல்கிறாய். பொறுத்துக் கொண்டிருக்க எப்படி விடுமோ? தெரியவில்லை. யான் மயக்கம் கொள்ளத் துன்பம் செய்யும் அழகிய நாரை அகன்ற கரிய நெய்தல் நிலப் பரப்பில் எழுந்து சென்று இரை தின்னும். புலவு நாறும் நம் சிறுகுடி மன்றத்தில் உயர்ந்த காற்றாலசையும் பருத்த அடி மரத்தையுடைய பனையின் தொகுதியான மடலில் நாரை ஏறி உட்கார்ந்திருக்கும். வளைந்த வாயையுடைய பேடை குடம்பை சேர, என் உயிர் பிரியும்படியாகச் செலுத்தித், தன்

*புணர் துணையைக் கூப்பிடக் கூவுதலை நிறுத்தவில்லையே" என்று தலைவி, ஆற்றியிருக்கக் கோரிய தோழிக்கு எதிர் உரைத்தாள்.*

## 254. சிறந்த நட்பு நன்மை செய்யும்

**கானற் கண்டல் கழன்று உகு பைங் காய்**
**நீல் நிற இருங் கழி உட்பட வீழ்ந்தென,**
**உறு கால் தூக்கத், தூங்கி ஆம்பல்,**
**சிறு வெண் காக்கை ஆவித்தன்ன,**
**வெளிய விரியும் துறைவ! என்றும்,**
**அளிய பெரிய கேண்மை நும்போல்,**
**சால்பு எதிர்கொண்ட செம்மையோரும்**
**தேறா நெஞ்சம் கையறுபு வாட,**
**நீடின்று விரும்பார் ஆயின்,**
**வாழ்தல் மற்று எவனோ? தேய்கமா தெளிவே!**

*– நம்பி குட்டுவனார் நற் 345*

*"கடற்கரைச் சோலையிலுள்ள கண்டல் மரத்திலிருந்து கழன்று உதிரும் பசிய காய் நீல நிறமான பெரிய கழியின் அடித்தளம் வரை போகும்படி வீழ்ந்தது. வீசும் காற்றுத் தூக்க உயர்ந்த ஆம்பல் அரும்பு, சிறிய வெளிய நீர்க்காக்கை கொட்டாவி விட்டது போல் மலர்ந்தது. அப்படிப்பட்ட துறைவ, எப்போதும் இரக்கமுள்ள சிறந்த நட்பு நன்மை செய்யும். உம் போன்ற நற்பண்புகளை எதிர் ஏற்றுக் கொண்ட செம்மையாளர்களும் தெளிவற்ற நெஞ்சம் உடைய எம் போன்றோர் கையற்று வாட்டமடைய நீண்ட நாள் விரும்பா மல் இருந்தார்களானால் வாழ்வது எப்படி? நீ நயந்து தெளிவிக்கும் தெளிவு தேய்ந்து போகட்டும்" என்று தலை வன் தலைவியை ஆற்றுவித்தபோது தோழி குறுக்கிட்டு மொழிந்தாள்.*

## 255. போராடும் நெஞ்சம்!

**நிலவே,**
**நீல் நிற விசும்பில் பல் கதிர் பரப்பி,**
**பால் மலி கடலின், பரந்து பட்டன்றே;**

ஊரே,
ஒலி வரும் சும்மையொடு மலிபுதொகுபு ஈண்டி,
கலி கெழு மறுகின், விழவு அயரும்மே;
கானே,
பூ மலர் கஞலிய பொழிய அகம்தோறும்
தாம்அமர் துணையொடு வண்டு இமிரும்மே;
யானே,
புனை இழை ஞெகிழ்த்த புலம்பு கொள் அவலமொடு
கனை இருங் கங்குலும் கண்படை இலெனே:
என்னொடு பொரும்கொல், இவ் உலகம்? அதனால்,
உலகமொடு பொரும்கொல், என் அவலம் உறு நெஞ்சே?

*– வெள்ளிவீதியார் நற் 348*

*"நிலவு, நீல நிற வானத்தில் வெண்ணிறமான பல கதிர் களையும் பரப்பிப்பால் நிறைந்த கடல் போலப் பரந்து பட்டது. ஊர், ஒலிக்கூட்டத்தோடு மக்கள் நிறையச் சேர்ந்து திரண்டு ஆரவாரமான தெருக்களில் திருவிழாக் கொண்டா டும். காடு, அழகிய மலர்கள் நிரம்பிய பொழில்கள் தோறும் வண்டுகள் தாம் விரும்பிய துணை வண்டுகளோடு ஊதும். யான்: புனைந்த அணிகலன் நெகிழுமாறு செய்த தனிமைத் துயரத்தோடு மிக நீண்ட இராப்பொழுது முழுதும் கண் உறங்காமல் இருக்கின்றேன். அதனால் இவ் உலகம் என்னைத் தாக்கிப் போர் புரியுமோ? உலகத்தோடு என் துயருற்ற நெஞ்சம் போர் செய்யுமோ? அறியேன்" என்று வேட்கை மிகுதியின் ஆற்றாமையால் தலைவி உரைத்தாள்.*

## 256. பரதவர் மகள் என்ன நினைப்பாளோ?

கடுந் தேர் ஏறியும், காலின் சென்றும்,
கொடுங் கழி மருங்கின் அடும்பு மலர் கொய்தும்,
கைதை தூக்கியும், நெய்தல் குற்றும்,
புணர்ந்தாம் போல, உணர்ந்த நெஞ்சமொடு
கைவலும் இனையம் ஆகவும், செய் தார்ப்
பசும் பூண் வேந்தர் அழிந்த பாசறை,
ஒளிறு வேல் அழுவத்துக் களிறு படப் பொருத
பெரும் புண்ணுறுநர்க்குப் பேஎய் போலப்,

**பின்னிலை முனியா நம் வயின்,**
**என் என நினையும்கொல், பரதவர் மகளே?**

***– மிளைகிழான் நல்வேட்டனார் நற் 349***

*"விரைந்த தேரில் ஏறிச் சென்றும், காலால் நடந்து சென்றும், வளைந்த கழியின் பக்கத்தில் அடும்பு மலரைக் கொய்தும், தாழம்பூவைப் பறிக்க அசைத்தும், நெய்தல் மலரைப் பறித்தும், முயங்கியது போலக் கருதிய நெஞ்சத் தோடு நாள்தோறும் இத் தன்மையம் ஆனோம். அப்படி யிருக்க, அழகுறச் செய்த மாலையணிந்த பசிய கலன்களை யுடைய வேந்தர்கள் போரிலே மடிந்த பாசறையில், வேல் விளங்கும் போர்க்களத்திலே யானை சாகும்படி, போர் செய்து, பெரும் புண்பட்டுக் கிடந்தாரைப் பேய் காத்தது போல இத் தோழியின் செயல் இருக்கிறது. இவன் பின்னின்று வெறுப்படையாது திரியும் நம்மிடத்து நம் காதலியாகிய பரதவர் மகள் என்ன என்று நினைப்பாளோ? தெரியவில்லையே" என்று தலைவன் தோழி கேட்பத் தன்னுள்ளே கூறினாள்.*

## 257. நட்பு அலர் ஆகிறது உப்பளம் போல!

**தான் அது பொறுத்தல் யாவது – கானல்**
**ஆடு அரை ஒழித்த நீடு இரும் பெண்ணை**
**வீழ் காவோலைச் சூழ் சிறை யாத்த**
**கானல் நண்ணிய வார் மணல் முன்றில்,**
**எல்லி அன்ன இருள்நிறப் புன்னை**
**நல் அரை முழுமுதல் அவ் வயின் தொடுத்த**
**தூங்கல் அம்பித் தூவல் அம் சேர்ப்பின்,**
**கடு வெயில் கொதித்த கல் விளை உப்பு**
**நெடு நெறி ஒழுகை நிரை செலப் பார்ப்போர்**
**அளம் போது ஆகுலம் கடுப்ப,**
**கௌவை ஆகின்றது, ஐய, நின் நட்பே?**

***– உலோச்சனார் நற் 354***

*"ஐய, நெய்தற் கானலில் காற்றால் ஆடும் அடியிலுள்ள ஓலையை வெட்டி ஒழித்தலால் நெடிய கரிய பனையின் வீழும் முற்றின ஓலையில் சூழ்ந்த காவலாகக் கட்டிய*

கடற்கரைச் சோலையை அடுத்த வெள்ளையான மணலை யுடைய முற்றத்திலே இரவு போன்ற இருண்ட நிறத்தை யுடைய புன்னை மரத்தின் நல்ல அடியின் முழு முதலிலே அசையும் தோணியைத் தொடுத்துக் கட்டியிருப்பர். அங்கே நீர்த் திவலை தெறித்து விழும். அவ்வாறாய அழகிய கடற் கரைச் சோலை யிலே கடுவெயில் கொதித்தலால் கல்லாக விளைந்த உப்பு மூடைகளை ஏற்றி நீண்ட வழியிலே செல்லும் வண்டிகள் நிரையாகச் செல்லப் பார்ப்போராகிய உப்பு வணிகர் உப்பளம் விட்டுப் போகும்போது எழுப்பும் ஆர வாரம் போல உன் நட்பு அலர் ஆகின்றது. ஆதலால் வீட்டடைப்பைப் பொறுத்தல் எவ்வாறாகும்? கூறுக" என்று கூறி மணம் முடிக்கக் கூறினாள் தோழி.

## 258. சூள் உரைத்தவரைப் பாழ் செய்யாதே!

'பெருந் தோள் நெகிழ, அவ் வரி வாடச்,
சிறு மெல் ஆகம் பெரும் பசப்பு ஊர
இன்னேம் ஆக, எற் கண்டு நாணி,
நின்னொடு தெளித்தனர் ஆயினும் என்னதூஉம்,
அணங்கல் ஓம்புமதி, வாழிய நீர்!' என,
கணம் கெழு கடவுட்கு உயர் பலி தூஉய்ப்,
பரவினம் வருகம் சென்மே – தோழி!
பெருஞ் சேயிறவின் துய்த் தலை முடங்கல்
சிறு வெண் காக்கை நாள் இரை பெறூஉம்
பசும் பூண் வழுதி மருங்கை அன்ன, என்
அரும் பெறல் ஆய் கவின் தொலைய
பிரிந்து ஆண்டு உறைதல் வல்லியோரே. – *நக்கீரர் நற் 358*

"தோழி, என் பெரிய தோள்கள் நெகிழ்ந்தன. அழகிய வரிகள் வாடின. சிறிய மெல்லிய என் மார்பில் பெரிய பசலை பரவியது. இந் நிலையில் என்னை அவர் கண்டு நாணம் அடைந்தார். "கடவுளே! இவளைப் பிரியேன்" என்று கடவுள் முன் சூள் உரைத்தார். ஆயினும் பிரிந்தார். "கடவுளே! சூள் தவறிய அவரைச் சிறிதேனும் நீ வருத்துதலைச் செய்யாதே; அவரைக் காப்பாயாக; நீ வாழிய" இவ்வாறு கூறிக் கணங் களையுடைய கடவுளுக்கு நாம் உயர்ந்த பலி தூவி, வணங்கி

*வரச் செல்வோமா தோழி. பெரிய சிவந்த இறாமீனின் பஞ்சு போன்ற தலையை யுடைய முடங்கலைச் சிறிய வெள்ளிய காக்கை நாட் காலையின் இரையாகப் பெறும். பசிய பூண் களையணிந்த பாண்டியனின் மருங்கை என்னும் ஊர் போன்ற என் பெறுதற் கரிய சிறந்த அழகு தொலையுமாறு என்னை விட்டுப் பிரிந்து அங்கே தங்கியிருக்க வல்ல தலைவர் பொருட்டு வணங்கி வரச் செல்வோமா?" என்று பொருள் தேடச் சென்ற தலைவன் பிரிந்தபோது ஆற்றாத தலைவி தோழிக்குக் கூறினாள்.*

## 259. கொண்டுவருவது மணலையா? மனத்தையா?

**'கண்டல் வேலிக் கழி சூழ் படப்பைத்**
**தெண் கடல் நாட்டுச் செல்வென் யான்' என**
**வியம் கொண்டு ஏகினை ஆயின், எனையதூஉம்**
**உறு வினைக்கு அசாவா உலைவு இல் கம்மியன்**
**பொறி அறு பிணைக் கூட்டும் துறை மணல் கொண்டு**
**வம்மோ தோழி மலி நீர்ச் சேர்ப்ப**
**பைந் தழை சிதையக், கோதை வாட,**
**நன்னர் மாலை, நெருநை, நின்னொடு**
**சில விளங்கு எல் வளை ஞெகிழ**
**அலவன் ஆட்டுவோள் சிலம்பு ஞெமிர்ந்து எனவே.**

*– உலோச்சனார் நற் 363*

*"மிக்க நீர் பொருந்திய சேர்ப்பனே, பசுமையான தழை யுடை சிதைய, பூமாலை வாட, சிலவாய் விளங்கும் ஒளி யுள்ள வளையல்கள் கழல, நேற்று மாலைப்பொழுது உன் னோடு சேர்ந்து நண்டோடு விளையாடிய என் தோழியின் நல்ல சிலம்புகள் உடைந்தன. "கண்டல் மர வேலியுடைய கழிகள் சூழ்ந்த கொல்லைகளை யுடைய தெளிந்த கடல் நாட்டுச் செல்வன் யான்" எனச் சொல்லி வழிக்கொண்டு போயினாய். ஆனால் எத்துணையளவேனும் தான் செய்த தொழில் உலைவுக்குத் தளராது தோல்வி கொள்ளாத கம்மியன் அணிகலனின் மூட்டுவாய் நீங்கிப் போயின் இணைத்துச் சந்து ஊதிக் கூட்டுதற்கு மண்கூட்ட வேண்டு*

மன்றோ! எனவே அதற்கு மண் எடுக்கும் நீர்த்துறையி லுள்ள மணலைக் கொண்டுவந்து தந்து செல்க" என்று பகற்குறி வந்து நீங்கும் தலைவனிடம் தலைவியை நீயே ஆற்றுவி என்றாள் தோழி.

## 260. காம வெள்ளத்தை எங்ஙனம் நீந்துவேன்?

சுடர் சினம் தணிந்து குன்றம் சேர,
நிறை பறைக் குருகினம் விசும்பு உகந்து ஒழுக,
எல்லை பைபயக் கழிப்பிப், பெரும் புன் மாலை
இன்றும் வருவது ஆயின் நன்றும்
ஞெமை ஓங்கு உயர் வரை இமையத்து உச்சி
வாஅன் இழிதரும் வயங்கு வெள் அருவிக்
கங்கை அம் பேர் யாற்றுக் கரை இறந்து இழிதரும்
சிறை அடு கடும் புனல் அன்ன என்
நிறை அடு காமம் நீந்துமாறே.

*– மதுரை மேலைக் கடையத்தார் நல்வெள்ளையார் நற் 369*

"தோழியே, ஞாயிறு வெம்மை தணிந்து மேற்குன்றில் சேர்ந்தது. நிறைந்த சிறகுகளையுடைய நாரைக் கூட்டம் விசும்பிலே நெருங்கிப் பறந்து சென்றன. பகற்பொழுது மெல்ல மெல்லக் கழிந்தது. முல்லை அரும்பு மலர்ந்த பெரிய புல்லிய மாலைக்காலம் இன்றும் வருமாயின் நல்லதா, தீயதா என்று யான் அறியேன். ஞெமை, மரங்கள் வளர்ந்த உயர்ந்த மலையாகிய இமைய மலையில் உச்சியில் தோன்றி, வானி லிருந்து கீழே இறங்கி, விளங்கிய வெள்ளை நிறமான அருவியாகி, கங்கையாறு என்ற பெயர் பெற்று, கரையைக் கடந்து, அணைகளை உடைத் தெறியும் கடும்புனல் போல எனது நிறையை அடித்துக் கொண்டு போகும் என் காமம். இக் காம வெள்ளத்தை யான் நீந்துவது எங்ஙனம்? அதனை அறியேன்" என்று மணவாது பொருள் தேடப் பிரிந்த தலை வனை எண்ணித் தலைவி உரைத்தாள்.

## 261. அண்டதற்கு இளையயல்

அழிதக்கன்றே – தோழி, கழி – சேர்பு
கானற் பெண்ணைத் தேனுடை அளி பழம்,

வள் இதழ் நெய்தல் வருந்த, மூக்கு இறுபு,
அள்ளல் இருஞ் சேற்று ஆழப் பட்டெனக்,
கிளைக் குருகு இரியும் துறைவன் வளைக் கோட்டு
அன்ன வெண் மணற்று அகவயின், வேட்ட நின்
அண்ணல் உள்ளமொடு அமர்ந்து இனிது நோக்கி,
அன்னை தந்த அலங்கல் வான் கோடு
அலைத்தாங்கு நோதல் அஞ்சி, அடைந்ததற்கு
இனையல் என்னும் என்ப மனை இருந்து,
இருங் கழி துழவும் பனித் தலைப் பரதவர்
திண் திமில் விளக்கம் எண்ணும்
கண்டல் வேலிக் கழி நல் ஊரே. *– உலோச்சனார் நற் 372*

"தோழியே, உப்பங்கழி சேர்ந்த சோலையிலுள்ள பனை மரத்தின் தேனுடைய குளிர்ந்த பழம் மூக்கு இற்றுப் பெரிய இதழ்கொண்ட நெய்தல் வருந்த அள்ளல் இருஞ்சேற்றில் விழுந்து ஆழ்ந்து விட்டது. அதனால் குருகுக் கூட்டம் பறக்கும் துறைவன், வளைந்த சங்கு போன்ற வெண் மண லிடத்தில், விரும்பிய தலைமை உள்ளத்தோடு பொருந்தி இருந்தான் மகளிர் மனையிலிருந்து, கரிய கழியிடத்து மீனைத் தேடும் குளிர்ந்த தலையுடைய கழி சூழ்ந்த நம் நல்ல ஊர் அன்னை இனிதாக நோக்கி உனக்குத் தந்த அசையும் பெரிய புள் ஓட்டும் கோல் உலைந்ததற்கு நீ வருந்துவதாகக் கருதி அஞ்சி, "நடந்ததற்கு 'நீ வருந்தாதே" என்று கூறுவள். அதனால் வீட்டில் வைத்தார். ஆதலின் நீ வருந்துவது தக்கதன்று. இனி இற்செறியார்" என்று தோழி தலைவி பொறுத்திருக்கக் கூறினாள்.

## 262. நன்னுதல் உவப்ப நறுமணம் புரிக

நீடு சினைப் புன்னை நறுந் தாது உதிரக்
கோடு புனை குருகின் தோடு தலைப் பெயரும்
பல் பூங் கானல் மல்கு நீர்ச் சேர்ப்ப!
அன்பு இலை ஆதலின், தன் புலன் நயந்த
என்னும் நாணும் நன்னுதல் உவப்ப,
வருவை ஆயினோ நன்றே பெருங் கடல்
இரவுத் தலை மண்டிலம் பெயர்ந்தென உரவுத் திரை

எறிவன போல வரூஉம்
உயர் மணல் படப்பை எம் உறைவின் ஊரே.
*– பொதும்பில் கிழார்மகன் வெண்கண்ணி நற் 375*

*"நீண்ட கிளைகளையுடைய புன்னை மரத்தின் நறிய தாது உதிரும்படி அம் மரக்கிளையின் மீது அழகாக அமர்ந்திருக்கும் நாரையின் கூட்டம் இரைவேண்டிப் புறப்படும் பல் பூங்கானலையும் மிக்க நீரையுமுடைய சேர்ப்பனே, நீ அன்புடையவனில்லை. இருந்தால் மணம் செய்து கொண்டிருப்பாய் யான் அவளது அறிவின் வழியே ஒழுகுபவள். இருந்தும் என்னிடமும் சொல்லுவதற்கு நாணும் நன்னுதலாள் அவள். பெருங் கடலிடத்து இராப் பொழுதிலே தண்கதிர்த் திங்கள் தோன்றியதால் வலிய அலைகள் எறிவன போல வரும். உயர் மணல் உள்ள கொல்லைகளையுடைய எம் உறைவின் ஊரிடத்து, அவள் உவப்ப நீ அவளை மணம் செய்ய வருவாயாயின் அது ஒரு நல்ல அறச் செயலாகும்" என்று மணவாது நீட்டிக்கும் தலைவனிடம் தோழி மணந்துக் கொள்ளக் கூறினாள்.*

## 263. யாமம் கழிய காமம் மிகுதே

யாமமும் நெடிய கழியும், காமமும்
கண்படல் ஈயாது பெருகும், தெண் கடல்
முழங்கு திரை, முழவின் பாணியின், பைபயப்
பழம் புண் உறுநரின், பரவையின் ஆலும்;
ஆங்கு அவை நலியவும் நீங்கி யாங்கும்
இரவு இறந்து, எல்லை தோன்றலது; அலர் வாய்
அயல் இற் பெண்டிர் பசலை பாட,
ஈங்கு ஆகின்றால் தோழி, ஓங்கு மணல்
வரி ஆர் சிறு மனை சிதைஇ வந்து,
பரிவுதரத் தொட்ட பணிமொழி நம்பி,
பாடு இமிழ் பனி நீர்ச் சேர்ப்பனொடு
நாடாது இயைந்த நண்பினது அளவே.
*– வடம வண்ணக்கன் பேரி சாத்தனார் நற் 378*

*"தோழி, யாமங்கள் நெடும்பொழுது உடையனவாய்க் கழிகின்றன காமமும் என்னைக் கண்ணுறங்க விடாமல்*

பெருகுகிறது தெளிந்த கடலில் முழங்கும் அலைகள், முழவின் ஒலிபோல் மெல்ல மெல்ல ஒலித்துப் பல நாள்கள் ஆறாத பழம்புண் உற்றாரைப் போலப் புரண்டு புரண்டு அக் கடலில் வீழ்கின்றன. அவையெல்லாம் அப்படி நம்மை வருத்தவும் இரவு கழிந்து போகவில்லை; பொழுது விடிந்து ஞாயிறு தோன்றிய பாடில்லை உயர்ந்த மணற் பரப்பிலே புனைந்து கோலமிட்ட சிறிய மணற் சிற்றிலைச் சிதைத்து நம்மிடம் வந்து அன்பு உண்டாகும்படி கூறிய பணிவான மொழியை நம்பி ஒலிக்கும் குளிர்ந்த கடற்கரைச் சேர்ப்பனொடு ஆரா யாமல் பொருந்திய நட்பின் அளவானது, அலர் கூறும் வாய் உடைய அயல் வீட்டுப் பெண்டிர் நம் பசலையைக் குறித்துத் தூற்றும்படி இவ்வாறு ஆயிற்று" என்று தலைவன் ஒரு புறம் இருக்க, அப்போது அவன் கேட்கத் தோழி சொல்லினாள்.

## 264. ஆருயிர் அழியினும் காதல் நோய் உரைப்பதோ?

கானல் மாலைக் கழி நீர் மல்க,
நீல் நிற நெய்தல் நிரை இதழ் பொருந்த,
ஆனாது அலைக்கும் கடலே மீன் அருந்திப்,
புள்ளினம் குடம்பை உடன் சேர்பு உள்ளார்
துறந்தோர் தேஎத்து இருந்து, நனி வருந்தி,
ஆர் உயிர் அழிவது ஆயினும் நேரிழை
கரத்தல் வேண்டுமால் மற்றே, பரப்பு நீர்த்
தண்ணம் துறைவன் நாண,
நண்ணார் தூற்றும் பழிதான் உண்டே.

*– நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் நற் 382*

"நேரிய அணி அணிந்த தோழி, பரந்த கடல் நீரையுடைய குளிர்ந்த துறைவன் நாணும்படி நண்ணாராகிய பெண்கள் தூற்றும் பழி தான் மிகுதியாக உண்டல்லவா! எனவே கடற் கரைச் சோலையில் மாலைக் காலத்திலே கழியிடத்து நீர் பெருக, நீலநிற நெய்தற் பூவின் நிரையாகிய இதழ்கள் குவிய, ஓயாது அலையடிக்கும் கடலில் மீன்களைத் தின்று பறவைக் கூட்டம் ஆணும் பெண்ணுமாகக் கூட்டில் ஒன்றாய்ப் போய்ச் சேரும் அந்த மாலைக் காலத்தை அவர் நினைக்கவில்லை.

எனினும் நம்மைத் துறந்தவரை நினைத்து நாம் அவர் இருந்த விடத்து இருந்து மிகவும் வருந்தி ஆருயிர் அழிவதாயினும் பிரிவுநோய் மற்றவர்க்குத் தெரியாதவாறு மறைத்தல் வேண்டும்" எனக் களவில் தலைவன் வராத பொழுது தலைவி தோழியிடம் இவ்வாறு கூறினாள்.

## 265. தலைவ, தனியாய் வருகிறாய்

எல்லை சென்றபின், மலரும் கூம்பின;
புலவு நீர் அடைகரை யாமைப் பார்ப்போடு
அலவனும் அளைவயிற் செறிந்தன; கொடுங் கழி
இரை நசை வருத்தம் வீட மரமிசைப்
புள்ளும் பிள்ளையொடு வதிந்தன, அதனால்,
பொழுதன்று ஆதலின், தமியை வருதி
எழுது எழில் மழைக்க.................. – *அஞ்சிலாந்தையார் நற் 385*

"ஞாயிறு சென்றபின் மலரும் கூம்பின. புலால் நாற்ற முள்ள நீரின் பரந்த கரையிலுள்ள யாமைக் குட்டியோடு நண்டும் தத்தம் வளையாகிய இருப்பிடம் போய்ச் சேர்ந்தன. வளைந்த கழியில் இரை விரும்பிய வருத்தம் நீங்க, பறவை களும் தம் குஞ்சுகளோடு மரத்தின் மேல் போய்த் தங்கின. அதனால் பொருத்தமான பொழுதன்று ஆதலின் நீ தனியாக வருகின்றாய்" என்று தலைவி தலைவனிடம் கூறினாள்.

## 266. நெஞ்சிலிருந்து நீங்காது உள்ளான்!

அம்ம வாழி, தோழி! நன்னுதற்கு
யாங்கு ஆகின்றுகொல் பசப்பே – நோன் புரிக்
கயிறு கடை யாத்த கடு நடை எறி உளித்
திண் திமில் பரதவர் ஒண் சுடர்க் கொளீஇ
நடு நாள் வேட்டம் போகி, வைகறைக்
கடல் மீன் தந்து, கானற் குவைஇ,
ஓங்கு இரும் புன்னை வரி நிழல் இருந்து
தேம் கமழ் தேறல் கிளையோடு மாந்திப்
பெரிய மகிழும் துறைவன் எம்
சிறிய நெஞ்சத்து அகல்வு அறியானே.
– *மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் நற் 388*

*"தோழி, வாழ்க. யான் கூறுவதைக் கேள். வலிமையான புரிகளால் ஆன கயிற்றின் நுனியிலே கட்டி, நீரில் விரைந்து செல்ல திண்ணிய மீன் படகிலே, எறியும் ஈட்டியாகிய உளி யோடு செல்லும் பரதவர் ஒள்ளிய விளக்குகளைக் கொளுத் திக் கொண்டு நடுநாளில் செய்யும் வேட்டைக்குப் போய்ச் சாலையில் கடலில் பிடித்த மீன்களைக் கொண்டு வந்து கடற்கரைச் சோலையில் குவிப்பர். உயர்ந்த கரிய புன்னை மரத்தின் செறியாத நிழலிலிருந்து தேன்மணம் கமழும் தெளிந்த கள்ளைச் சுற்றத்தோடு குடித்துப் பெரிதும் மகிழ்வர். அவ்வாறான துறைவன் எம் சிறிய நெஞ்சத்திலிருந்து நீங்கு வதை அறியாது உள்ளான். அப்படியிருந்தும் என் நல் நுதலுக்குப் பசப்பு எப்படி வந்தது?" என்று மணநாள் நீள் கையில் தலைவன் ஒருபுறம் இருக்க தலைவி வினவினாள்.*

## 267. அம்ம வருக செம்மல் நெஞ்சமொடு

கடுஞ் சுறா எறிந்த கொடுந் தாட் தந்தை
புள் இமிழ் பெருங் கடல் கொள்ளான் சென்றென,
மனை அழுது ஒழிந்த புன் தலைச் சிறாஅர்
துணையதின் முயன்ற தீம் கண் நுங்கின்
பணை கொள் வெம் முலை பாடு பெற்று உவக்கும்
பெண்ணை வேலி உழை கண் சீறூர்
நன் மனை அறியின் நன்றுமன் தில்ல;
செம்மல் நெஞ்சமொடு தாம் வந்து பெயர்ந்த
கானலொடு அழியுநர் போலாம் பானாள்,
முனி படர் களையினும் களைப
நனி போர் அன்பினர் காதலரோ.

*– மதுரை மருதன் இளநாகனார் நற் 392*

*"தலைவியே, நம் காதலர் மிகப் பெரிய அன்பினர். அவர் நடுநாள் இரவில் வந்து நம்மை வருத்தும் துன்பத்தைப் போக்கினாலும் போக்குவார். கடும் முயற்சியுடைய தந்தை ஒருவன் கொடிய சுறாமீனை எறிந்தான். ஒலிக்கும் பெரிய கடலில் வேட்டைக்குச் செல்லும் போது அவன் தன் சிறு வர்களை உடன் அழைத்துக் கொண்டு செல்லாமல் மனை யில் நிறுத்திவிட்டுச் சென்றான். மனையிலிருந்து அழுது*

ஒய்ந்த பின், புல்லிய தலையுடைய அச் சிறுவர்கள் கடுமை யான முயற்சியெடுத்து இனிய கண்ணையுடைய பனை நுங்கைப் பெற்று உண்டு மகிழ்ந்தனர். அம் மகிழ்ச்சி, பருத்த மைந்த - விருப்பமுண்டாக்கும் கொங்கையின் பயனைப் பெற்று மகிழ்ந்தது போன்றிருந்தது அப்படி வளமான பனை வேலி சூழ்ந்த அகன்ற இடத்தையுடைய சிறிய ஊரில் நமது நல்ல மனையை அறிந்த காதலர் வந்தாரானால் மிகவும் நல்லது. அவர் செம்மல் உள்ளத்தோடு தாமே வந்து நம்மைக் காணாது கடற்கரைச் சோலையொடு மனம் அழிந்து வருந்துவர் போலாம்" என்று இரவுக் குறிக்கு ஒப்பிய தலைவி செப்பினாள்.

## 268. இழந்த அழகைத் தந்துவிடுக

யாரை, எலுவ? யாரே நீ எமக்கு
யாரையும் அல்லை; நொதுமலாளனை;
அனைத்தால் கொண்க, நம்மிடையே நினைப்பின்
கடும் பகட்டு யானை நேடுந் தேர்க் குட்டுவன்
வேந்து அடு மயக்கத்து முரசு அதிர்ந்தன்ன,
ஓங்கற் புணரி பாய்ந்து ஆடு மகளிர்
அணிந்திடு பல் பூ மரீஇ, ஆர்ந்த
ஆ புலம் புகுதரு பேர் இசை மாலைக்
கடல் கெழு மரந்தை அன்ன எம்
வேட்டனை அல்லையால் நலம் தந்து சென்மே.

– *அம்மூவனார் நற் 395*

"எலுவ! நீ யார்? நீ யாரோ? நீ எமக்கு யாரும் இல்லை. அயலானைப் போன்றவனே. நம்மிடையுள்ள தொடர்பை ஆராய்ந்தால் அவ்வளவுதான், தலைவ, கடிய வலிமையான யானை, நெடிய தேர்களையுடைய குட்டுவன், பிற வேந்தர்க ளோடு போரிடும் போர்க்களத்தில் முழங்கும் முரசொலியைப் போன்று கடல் அலை முழங்கும். அங்கே பாய்ந்து தின்று விட்டு மாலைநேரத்தில் வீடு திரும்பும் அவ்வாறாய கடற் துறை வளப்பமுடையது மராத்தை என்னும் ஊர். அந்த ஊர் போன்ற அழகுடையவள் தலைவி. நீ எம்மை விரும்ப வில்லையாதலால் இழந்த அந்த அழகைத் தந்து விட்டுச்

*செல்க." என்று தலைவனைத் தோழி கூறி தலைவியை மணம் முடிக்கக் கூறினாள்.*

## 269. எதிர்மொழி கூறா ஏந்திழை

**உரு கெழு தெய்வமும் கரந்து உறையின்றே;**
**விரி கதிர் ஞாயிறும் குடக்கு வாங்கும்மே;**
**நீர் அலைக் கலைஇய கூழை வடியாச்**
**சாஅய் அவ் வயிறு அலைப்ப, உடன் இயைந்து,**
**ஓரை மகளிரும், ஊர் எய்தினரே;**
**பல் மலர் நறும் பொழில் பழிச்சி, யாம் முன்,**
**சென்மோ, சேயிழை? என்றனம்; அதன் எதிர்**
**சொல்லாள் மெல்லியல், சிலவே நல் அகத்து**
**யாணர் இள முலை நனைய,**
**மாண் எழில் மலர்க் கண் தெண் பனிக் கொளவே.**

***– உலோச்சனார் நற் 398***

*அச்சம் செய்யும் தெய்வமும் மறைந்து வாழவில்லை. விரிந்த கதிரையுடைய ஞாயிறும் மேற்கே சாயும். ஓரை விளையாடிய மகளிரும் நீராடிக் கலைந்த கூந்தலின் நீரை பிழிந்து புலர்த்தி முடித்து அழகிய வயிறு குலுங்க ஓடி ஒன்று சேர்ந்து தம்மூர் அடைந்தனர். அன்னபொழுதில் பன் மலருள்ள நறும்சோலையில் உன் காதலியை வணங்கி யாம், 'சேயிழாய்! அவர்களுக்கு முன் செல்வோமா?' என்று கேட்டேன். அதற்கு மெல்லியலாளான அவள் தன் புதிய இளைய கொங்கை நனைய, மாட்சிமைப்பட்ட அழகுடைய மலர் போன்ற கண்ணிலிருந்து தெளிந்த கண்ணீர் வடித்தாளே தவிர சிலவாய மொழியும் எதிர்மொழியாகக் கூறினாள் இல்லை."*

# நெய்தல்

## அகநானூறு

### 270. மணந்து கொள் இவளை!

வான் கடற் பரப்பில் தூவற்கு எதிரிய,
மீன் கண்டன்ன மெல் அரும்பு ஊழ்த்த,
முடவு முதிர் புன்னைத் தடவு நிலை மாச் சினை,
புள் இறைகூரும் மெல்லம் புலம்ப!—
நெய்தல் உண்கண் பைதல கலுழ,
பிரிதல் எண்ணினைஆயின், நன்றும்
அரிது உற்றனையால் – பெரும! உரிதினின்
கொண்டு ஆங்குப் பெயர்தல்வேண்டும் – கொண்டலொடு
குரூஉத் திரைப் புணரி உடைதரும் எக்கர்ப்
பழந் திமில் கொன்ற புது வலைப் பரதவர்
மோட்டு மணல் அடைகரைக் கோட்டுமீன் கெண்டி,
மணம் கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளம்கெழு தொண்டி அன்ன இவள் நலனே.

*– அம்மூவனார் அக 10*

*பெரிய கடற்பரப்பில் உண்டாகும் அலைத் திவலை களை ஏற்றுக் கொண்ட, விண்மீன் போன்ற மெல்லிய அரும்புகள் மலர்ந்துள்ள முடமான புன்னை மரத்தின் பெரிய நிலையை உடைய கரிய கிளையில் பறவைகள் தங்கியிருக்கும் மெல்லரும்பு உதிர்ந்த கடற்கரைக்குத் தலைவனே! பெரும! நீ எம் தலைவியின் நெய்தல் பூவைப் போன்ற கண்கள் துன்பம்*

அடைந்து வருந்துமாறு பிரிந்து வாழ்தலை நினைத்தாயா யின் நுகர்தற்கரிய தீவினையைச் செய்து அதன் பயனைத் துய்தவனாகின்றாய் கீழ்க்காற்றினால் உந்தப்படும் பேரலை களையுடைய கடல் மோதி உடைக்கின்ற எக்கர் மணலானது தம் திமிலை உடைத்திட, அதனால் புதிய வலைகளை உடைய வராயிருந்தும் பரதவர் வேட்டைக்குச் செல்லவில்லை உயர்ந்த மணலால் ஆன கரையில் தாமே வந்து அகப்பட்ட சுறா மீனைப் பிடித்து வந்து, மணம் வீசும் பக்கத்தில் அங்கு வாழ் பவர்க்குப் பகுத்துக் கொடுத்தற்குக் காரணமான தொண்டிப் பட்டினம் அப் பட்டினத்தைப் போன்ற எம் பெருமாட்டியின் அழகு அவளுக்கே உரியதாகுமாறு நீ அவளையும் அழைத்துக் கொண்டு உன் ஊர்க்குப் போதல் வேண்டும் இதுவே இப் போது நீ செய்யக் கூடியது என்றாள் தோழி.

## 271. கடிகிறாள் அன்னை

பெருநீர் அழுவத்து எந்தை தந்த
கொழு மீன் உணங்கற் படு புள் ஓப்பி,
எக்கர்ப் புன்னை இன் நிழல் அசைஇ,
செக்கர் ஞெண்டின் குண்டு அளை கெண்டி,
ஞாழல் ஓங்கு சினைத் தொடுத்த கொடுங் கழித்
தாழை வீழ் கயிற்று ஊசல் தூங்கி,
கொண்டல் இடு மணல் குரவை முனையின்
வெண் தலைப் புணரி ஆயமொடு ஆடி,
மணிப் பூம் பைந் தழை தைஇ, அணித்தகப்
பல் பூங் கானல் அல்கினம் வருதல்
கவ்வை நல் அணங்கு உற்ற, இவ் ஊர்,
கொடிது அறி பெண்டிர் சொற்கொண்டு, அன்னை
கடி கொண்டனளே – தோழி! – 'பெருந் துறை,
எல்லையும் இரவும் என்னாது, கல்லென
வலவன் ஆய்ந்த வண் பரி
நிலவு மணல் கொட்கும் ஓர் தேர் உண்டு' எனவே.

– உலோச்சனார் அக 20

தோழியே! கடற்கரையின் மணல் மேட்டில் உள்ள புன்னை மரத்தின் இனிய நிழலில் தங்குவோம் நம் தந்தை

கடற்பரப்பினின்று கொணர்ந்த கொழுமையான மீனின் வற்றலை உண்ணவரும் பறவைகளை ஓட்டுவோம்; சிவந்த நண்டின் ஆழமான வளைகளையெல்லாம் தோண்டுவோம்; வளைந்த உப்பங்கழிக் கரையில் உள்ள தாழையின் விழுதால் ஆன கயிற்றால் ஞாழல் மரத்தின் உயர்ந்த கிளையில் கட்டிய ஊசலில் ஆடுவோம். கீழைக்காற்று கொணர்ந்து குவித்த மணலில் குரவைக் கூத்தாடுவோம் இவற்றை வெறுத்தால் வெண்மையான தலையையுடைய கடல்நீரில் தோழியருடன் விளையாடி அழகிய மலர்களால் ஆன பசிய தழையுடையை அழகு பொருந்த உடுத்திய கடற்கரைச் சோலையில் நாம் தலைவருடன் தங்கியும், வருவோம் இவ்வாறு தங்கி வருதலைப்பற்றி, ஊரில் அலர் கூறுதல் என்ற நல்ல பேய் பிடித்திருக்கும், கொடியவற்றையே பேசும் பெண்களின் சொல்லைக் கேட்டு நம் தாய் பெரிய துறையகத்து இரவு பகல் என்னாது, பாகன் ஆய்ந்து கொண்ட குதிரை பூட்டப் பெற்று, நிலவு போன்ற மணலில் கல் என்ற ஒலியுடன் சுழன்று திரியும் ஒரு தேர் உண்டு என எங்கும் கூறும் அலரை நினைத்து, வீட்டில் காவலை ஏற்படுத்தியுள்ளாள்! என் செய்வோம்? என்றாள் தோழி

## 272. கெடுவது யாது இல்லில் தங்கினால்?

நெடுங் களிறு வலந்த குறுங் கண் அவ் வலை,
கடல் பாடு அழிய, இன மீன் முகந்து,
துணை புணர் உவகையர் பரத மாக்கள்
இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி,
உப்பு ஒய் உமணர் அருந் துறை போக்கும்
ஒழுகை நோன் பகடு ஒப்பக் குழீஇ,
அயிர் திணி அடைகரை ஒலிப்ப வாங்கி,
பெருங் களம் தொகுத்த உழவர் போல,
இரந்தோர் வறுங் கலம் மல்க வீசி,
பாடு பல அமைத்து, கொள்ளை சாற்றி,
கோடு உயர் திணி மணல் துஞ்சும் துறைவ!
பெருமை என்பது கெடுமோ – ஒரு நாள்
மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத்

**தண் நறுங் கானல் வந்து, 'நும்**
**வண்ணம் எவனோ?' என்றனிர் செலினே?**

*- முடங்கிக் கிடந்த நெடுஞ் சேரலாதன் அக 30*

*நெய்தல் நிலப் பரத மக்கள் இளையரும் முதியவருமாய்த் தம் மக்களுடன் வந்து நெருங்கித் தத்தம் காதல் துணைவருடன் கூடிய மகிழ்ச்சி பெற்றவராய் உப்பு மூடைகளை ஏற்றி உப்பு வாணிகர் கடத்தற்கரிய துறைகளில் செலுத்துகின்ற வண்டிகளில் பூட்டிய வலிய எருதுகளைப் போல் ஒன்றாய்க் கூடுவர் கடலின் பேரொலியும் அடங்கும்படி ஆரவாரம் செய்து, நீண்ட கயிற்றால் பின்னிய குறுகிய கண்களையுடைய வலைகளை வீசிப் பலவகையான மீன்களைப் பிடிப்பர் மணல் மிக்க கரைகளில் அம் மீன்களை ஒலி உண்டாக இழுப்பர் பெரிய நெற்களத்தில் குவித்த உழவர்களைப் போலத் தம்மிடம் வந்து இரந்தவர்களின் வறிய பாத்திரங்கள் நிறைய அம் மீன்களைத் தருவர் எஞ்சிய மீன்களைப் பல கூறுகளாகச் செய்து விலை கூறி விற்பர். பின் கரை உயர்ந்த திண்ணிய மணற் பரப்பில் உறங்குவர் இத்தகைய இயல்புடையார் தலைவனே! கழுவப்படாத முத்துகளைப் போன்று அரும்புகள் அரும்பியுள்ள புன்னை மரங்கள் அடர்ந்த குளிர்ந்த நறுமணம் வீசுகின்ற கடற்கரைச் சோலைக்கு ஒருநாள் நீவிர் வந்து, அங்கு விளையாடும் எங்களைப் பார்த்து, 'உம் அழகு என்ன வாயிற்று?' என்று வினவிவிட்டுச் சென்றால் உன் பெருமை என்பது கெட்டுப் போகுமோ? நீ வாராதிருக்கக் காரணம் யாது? என்று பகற்குறி தலைவனிடம் தோழி வினவினாள்*

## 273. சென்ற நெஞ்சம் திரும்பாதிடுக

**கானல், மாலைக் கழிப் பூக் கூம்ப,**
**நீல் நிறப் பெருங் கடல் பாடு எழுந்து ஒலிப்ப,**
**மீன் ஆர் குருகின் மென் பறைத் தொழுதி**
**குவை இரும் புன்னைக் குடம்பை சேர,**
**அசை வண்டு ஆர்க்கும் அல்குறுகாலை,**
**தாழை தளரத் தூக்கி, மாலை**
**அழிதக வந்த கொண்டலொடு கழி படர்க்**
**காமர் நெஞ்சம் கையறுபு இனைய,**

துயரம் செய்து நம் அருளார் ஆயினும் –
அறாஅலியரோ அவருடைக் கேண்மை!
அளி இன்மையின் அவண் உறை முனைஇ,
வாரற்கதில்ல – தோழி! – கழனி
வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்
தண்ணுமை வெரீஇய தடந் தாள் நாரை
செறி மடை வயிரின் பிளிற்றி, பெண்ணை
அகமடல் சேக்கும் துறைவன்
இன் துயில் மார்பில் சென்ற என் நெஞ்சே!

*– குன்றியனார் அக 40*

*தோழி! கடற்கரைச் சோலையைச் சார்ந்துள்ள கழியில் வரிசையாய் உள்ள மலர்கள் குவியவும்; நீல நிறம் கொண்ட கடல் ஒலி மிக்கு ஒலிக்கும் மீனை உண்ணும் மென்மையான இறகையுடைய பறவைக் கூட்டம் திரண்ட பெரிய புன்னை மரத்தில் உள்ள கூடுகளைச் சேரும். அங்கும் இங்கும் அலையும் வண்டுகள் ஒலிக்கும் இப்படி யாவும் தம் இடங்களில் போய்த் தங்கும் காலமான மாலைப் பொழுதில், தாழைச் செடிகள் தளர்ந்து அசைந்து, பிரிந்துள்ளார் வருந்த வந்த கீழைக் காற்றால் மிகுந்த துன்பம் கொண்ட அழகிய நெஞ்சம் செயலிழந்து வருந்தும் நமக்குப் பிரிவுத் துன்பத்தைச் செய்து சென்றவர் மீண்டு வந்து அருள் செய்யாரானாலும், அவரது நட்பு நமக்கு நீங்காதிருப்பதாகும் வயலில் வெண்மையான நெல்லை அரிபவரின் பின்பு நின்றொலிக்கும் பறை ஒலியைக் கேட்டு அஞ்சிய நீண்ட கால்களைக் கொண்ட நாரை செறிந்த மூட்டுவாயையுடைய கொம்பைப் போல் ஒலித்துப் பனை மரத்தின் மடலில் தங்கும். இத்தகைய கடல்துறையை உடைய தலைவனின் இனிய துயிலுக்குரிய மார்பின் பொருட்டுச் சென்ற என் நெஞ்சம் அவர் அருள் செய்யவில்லை என்று அங்குத் தங்குதலை வெறுத்து விட்டு இங்கு என்னிடம் வாராதிருப்பதாகுக என்று தலைவி தோழியிடம் கூறினாள்*

## 274. பாண, தலைவியின் துன்பத்தைச் சொல்

கடல்பாடு அவிந்து தோணி நீங்கி,
நெடு நீர் இருங் கழிக் கடுமீன் கலிப்பினும்;

வெவ் வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினும்;
மாண் இழை நெடுந் தேர் பாணி நிற்ப,
பகலும் நம்வயின் அகலானாகிப்
பயின்றுவரும் மன்னே, பனி நீர்ச் சேர்ப்பன்,
இனியே, மணப்பருங் காமம் தணப்ப நீந்தி,
'வாராதோர் நமக்கு யாஅர்?' என்னாது,
மல்லல் மூதூர் மறையினை சென்று,
சொல்லின் எவனோ – பாண! 'எல்லி
மனை சேர் பெண்ணை மடி வாய் அன்றில்
துணை ஒன்று பிரியினும் துஞ்சாகாண்' என,
கண் நிறை நீர் கொடு கரக்கும்,
ஒண் நுதல் அரிவை, 'யான் என்செய்கோ? எனவே.

*– கருவூர்ப் பூதஞ்சேந்தனார் அக 50*

*பாணனே! குளிர்ந்த நீரையுடைய கடற்கரைத் தலைவ னான நம் பெருமான், களவொழுக்கத்தில், காற்று வீசாது ஒடுங்குவதால் ஒலியின்றி அமைதி அடைதலால், பரதவரின் கடலில் செலுத்தும் தோணிகளும் கடலில் செல்லாமல் நீங்கின பெரிய நெய்தல் நிலத்துக்குரிய ஓடைகளில் கொடிய சுறாமீன்கள் அஞ்சாது செருக்கித் திரிகின்றன கொடிய சொற்களைப் பேசும் இயல்புடைய பெண்கள் தம் பழியை ஊர் அறியத் தூற்றினர், அவற்றுக்கு எல்லாம் அஞ்சாமல் வருவான் தலைவன் சிறந்த இழையையுடைய நீண்ட தேர் தான் மீண்டு வருதலை எதிர்பார்த்து நீண்ட பொழுது நிற்பினும், பகற் காலத்திலும் நம்மிடத்தினின்றும் பிரியாதவ னாகி அடிக்கடி வருவான்' அது இப்போது குறைந்து விட்டது "இனிக் களவுக் காலத்துக் கூடுவதற்கரிய வேட்கை நீங்கிவிட்டதால் தாம் போயிருக்கும் இடத்தைவிட்டு வாரார் நமக்கு எத்தகைய உறவினர் ஆவர் என்னாமல் ஒளியுடைய நெற்றியையுற்ற தலைவி, இரவில் வீட்டைச் சார்ந்திருக்கும் பனை மரத்தில் ஒன்றியிருத்தலினின்றும், துணை சிறிது பிரிந் தாலும் வளைந்த வாயை உடைய அன்றில் பறவைகள் துயிலாமல் இருப்பதைக் காண்பாயாக கண்ணில் நிறையும் நீரைக் கொண்டு தன் பிரிவாற்றாமையை மற்றவர் அறியாமல் மறைப்பாள்! இதற்கு யான் என்ன செய்வேன்!" என்ற இதனை*

*வளம் பொருந்திய பழைய ஊரில் மறைந்து சென்று நம் தலைவர்க்குச் சொல்லின் என்ன தவறாகும்? என்று தோழி பாணனிடம் கூறினாள்.*

## 275. கை விடுக அடிக்கடி வருவதை

பெருங் கடற் பரப்பில் சேயிறா நடுங்க,
கொடுந் தொழில் முகந்த செங் கோல் அவ் வலை
நெடுந் திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு,
உப்பு நொடை நெல்லின் மூரல் வெண் சோறு
அயிலை துழந்த அம் புளிச் சொரிந்து,
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்
திண் தேர்ப் பொறையன் தொண்டி அன்ன எம்
ஒண் தொடி ஞெமுக்காதீமோ தெய்ய;
'ஊதை ஈட்டிய உயர் மணல் அடைகரை
கோதை ஆயமொடு வண்டல் தைஇ,
ஒரை ஆடினும் உயங்கும் நின்ஒளி' எனக்
கொன்னும் சிவப்போள் காணின், வென் வேற்
கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடு தரு நிதியினும் செறிய
அருங் கடிப் படுக்குவள், அறன் இல் யாயே.

*– குடவாயிற் கீரத்தனார் அக 60*

*பெரும! பெரிய கடல் பரப்பில் சிவந்த இறால் மீன், நடுக்கம் கொள்ளக் கொடிய தொழில் செய்து பிடித்துக் கொள்வதற்குக் கருவியான கோல்களை உடைய அழகிய வலைகளுடன் நெடிய திமிலில் அத் தொழிலில் கருத்துக் கொண்டு தங்கியவன் தந்தை பரதவன். அப் பரதவனுக்கு அவனுடைய மகள் உப்புக்கு விலையாய்ப் பெற்று நெல்லினது அரிசியால் ஆன வெண் சோற்றின் மீது அயிரை மீனை இட்டுச் சமைத்த அழகிய புளிக்கறியைச் சொரிந்து, கொழு விய மீன் கருவாட்டுப் பொறிக்கறியுடன் உண்ணத் தருவாள். இத்தகைய நிகழ்ச்சி நிகழ்வதற்கு இடமான, திண்மையான தேரையுடைய சேர மன்னனின் தொண்டிப் பட்டினம் போன்ற எம் தலைவியான ஒளி பொருந்திய வளையலை கொண்டவளைப் பகற் குறியிடத்து அடிக்கடி வந்து வருத்*

*தாதே! அதற்குக் காரணம் எதுவென்றால் வாடைக் காற்றால் குவிக்கப்பட்ட உயர்ந்த மணற் குன்றமான நீர்க்கரையில், மாலை அணிந்த தோழியருடன் சிற்றில் கட்டி விளையாடினும், அறப்பண்பற்ற எம் தாய் 'உம் உடம்பின் ஒளி குன்றும், அங்குப் போகாதே' எனக் கடிந்து வீணே சினம் கொள்வாள். அத்தகையவள் உன் வருகையை ஒரு முறை கண்டால், வெற்றி வேலையும் கொற்றத்தையும் பெற்ற சோழ மன்னர் குட வாயில் என்ற நகரத்தில் பாதுகாப்புடன் வைத்த பகைவர் திறையாகக் கொடுத்த செல்வத்தை விட மிக அரிய காவலில் வைத்துப் போற்றுவாள். எனவே இங்ஙனம் வாராதே! என்று தோழி கூறித் திருமணத்திற்கு ஆவன செய்க என்றாள்.*

## 276. அடங்கியது ஊர்

கொடுந் திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென,
இரும் புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங் கண் அவ் வலைப் பயம் பாராட்டி,
கொழுங் கண் அயிலை பகுக்கும் துறைவன்
நம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே
அலர் வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்ற,
பலரும் ஆங்கு அறிந்தனர்மன்னே; இனியே
வதுவை கூடிய பின்றை, புதுவது
பொன் வீ ஞாழலொடு புன்னை வரிக்கும்
கானல்அம் பெருந் துறைக் கவினி மா நீர்ப்
பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
விழவு அணி மகளிர் தழை அணிக் கூட்டும்
வென் வேற் கவுரியர் தொல் முது கோடி
முழங்கு இரும் பௌவம் இரங்கும் முன் துறை,
வெல்போர் இராமன் அரு மறைக்கு அவித்த
பல் வீழ் ஆலம் போல,
ஒலி அவிந்தன்று, இவ் அழுங்கல் ஊரே.

*– மதுரைத் தமிழக்கூத்தனார் கடுவன் மள்ளனார் அக 70*

*வளைந்த படகைக்கொண்ட பரதவர் கடலில் ஆடிய மீன் வேட்டை நன்றாய் அமைந்திட, பெரிய புலால் நாற்றம் கமழும் சிறிய குடில்களையுடைய தம் ஊரில் புகுந்து குறுகிய*

கண்களையுடைய அழகிய வலையின் பயனைப் பாராட்டினர் பின் தாம் கொணர்ந்த கொழுவிய அயிரை மீனைப் பலர்க்கும் பகுத்துக் கொடுத்து மகிழ்ந்தனர் இத்தகைய இடமான கடல் துறையையுடைய நம் பெருமான் நம்முடன் கொண்ட காதல் தொடர்பானது முன் அலர் கூறும் வாயையுடைய பெண்டிர் அம்பலாக்கிப் பரப்பப் பலரும் அறிந்தனர் இப்போது மணம் கைகூடிற்று இதன் பின்பு புலிநகக் கொன்றையின் புதிய பொன்நிற மலர்களுடன் புன்னையின் மலர்கள் உதிர்ந்து ஓவியத்தை வரைந்தாற் போல் அழகு செய்யும் கடற்கரைச் சோலை. பக்கத்தில் அமைந்துள்ள வயல்களின் கரிய நீரில் பசுமையான இலைகளை யுடைய திரண்ட தண்டினையுடைய நெய்தல் மலர்களை விழாக்களுக்கு ஒப்பனை செய்யும் மகளிர், தம் தழையுடைக்கு அழகுபெறச் சேர்ப்பர்; இவ் வகை இயல் புடைய வெற்றிவேலை ஏந்திய பாண்டியரின் மிகுந்த பழமை உடைய திருவணைக் கரையின் அருகில், ஒலிக்கும் இயல்புடையதான பெரிய கடலின் துறையில் பறவைகள் ஒலிக்கும் ஆரவாரத்தை, வெல்லும் போரில் வல்ல இராமன் வெல்வதற்குச் செய்யும் போர் பற்றிய அரிய மறைச் செய்தியை வானர வீரர்களுடன் ஆராயும் பொருட்டுப் பறவைகளின் ஆரவார ஒலியைக் கை கவித்து அடக்கிடச் செய்த பல விழுதுகளையுடைய ஆலமரம் போன்று இந்த ஆரவாரம் கொண்ட ஊர் குரலடங்கப் பெற்றது என்று தோழி தலைவி யிடம் சொன்னாள்

## 277. அரியவர் அல்லோம் உனக்கு

கொடுந் தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும்
இருங் கழி இட்டுச் சுரம் நீந்தி, இரவின்
வந்தோய்மன்ற – தண் கடற் சேர்ப்ப!–
நினக்கு எவன் அரியமோ, யாம? எந்தை
புணர் திரைப் பரப்பகம் துழைஇத் தந்த
பல் மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்,
முண்டகம் கலித்த முதுநீர் அடைகரை
ஒண் பல் மலர கவட்டு இலை அடும்பின்
செங் கேழ் மென் கொடி ஆழி அறுப்ப,

இன மணிப் புரவி நெடுந் தேர் கடைஇ,
மின் இலைப் பொலிந்த விளங்கு இணர் அவிழ் பொன்
தண் நறும் பைந் தாது உறைக்கும்
புன்னைஅம் கானல், பகல் வந்தீமே.

*– மருங்கூர் கிழார் பெருங்கண்ணனார் அக 80*

*குளிர்ந்த கடற்கரையை உடைய தலைவனே! நீதான், வளைந்த காலையுடைய முதலையுடன் சுறாமீன் இயங்கும், கரிய உப்பங்கழிகள் நெருங்கிய அரிய வழிகளைக் கடந்து இரவில் இங்கு வந்தனை இங்ஙனம் நீ துன்பம் மிக்க நெறி யில் வருவதற்குப் பெருந்தகையான உனக்கு யாங்கள் எப்படி அரியவர் ஆவோம்? இது எமக்கு விளங்கவில்லை! நீ இங்ஙனம் இரவில் அரிய வழியில் வராதே அதை எம் தலைவி பொறுத்துக் கொள்ள மாட்டாள் நாளைப் பகலில் யாங்கள் எம் தந்தை, அலைகள் பொருந்திய கடல் பரப்பில் புகுந்து நீரைத் துழவிக் கொண்டு வந்த பலவகைப்பட்ட மீன்களின் வற்றலில் பொருந்தும் பறவைகளை ஓட்டும் தொழிலில் ஈடுபட்டிருப்போம் ஆதலால் - நீர் முள்ளிச்செடி தழைத்திருக்கும் கடலின் நீரடை கரையில் படர்ந்துள்ள ஒள்ளிய பலவான மலர்களை உடையவும் கவடுபட்ட இலைகளைக் கொண்டதும் ஆகிய அரும்பு அந்த அரும் பினது சிவந்த மெல்லிய கொடிகளை உன் தேரின் உருளை கள் அறுத்து வரும்படி, மணிகளைப் பூண்ட ஓர் இனமான குதிரைகள் பூட்டிய பெருந் தேரைச் செலுத்தி, ஒளியுடைய இலையுடன் பொலிந்து விளங்கும் பூங்கொத்துகள் மலர்ந்த பொன் போன்ற குளிர்ந்த மணமுடைய பூந்துகள் களை உதிர்க்கின்ற புன்னை மரங்கள் அடர்ந்த அழகிய கடற்கரைச் சோலையில் பகற் போதிலேயே வருவாயாக என்று தலை வனிடம் தோழி செப்பினாள்.*

## 278. மணக்க எண்ணுவாயாக

மூத்தோர் அன்ன வெண் தலைப் புணரி
இளையோர் ஆடும் வரிமனை சிதைக்கும்
தளை அவிழ் தாழைக் கானல்அம் பெருந் துறை,
சில் செவித்து ஆகிய புணர்ச்சி அலர் எழ,

இல்வயிற் செறித்தமை அறியாய்; பல் நாள்
வரு முலை வருத்தா, அம் பகட்டு மார்பின்,
தெருமரல் உள்ளமொடு வருந்தும், நின்வயின்,
'நீங்குக' என்று, யான் யாங்ஙனம் மொழிகோ?
அருந் திறற் கடவுட் செல்லூர்க் குணாஅது
பெருங் கடல் முழக்கிற்று ஆகி, யாணர்,
இரும்பு இடம் படுத்த வடுவுடை முகத்தர்,
கருங் கட் கோசர் நியமம்ஆயினும்,
'உறும்' எனக் கொள்ளுநர்அல்லர் –
நறு நுதல் அரிவை பாசிழை விலையே

*– மதுரை மருதனின் நாகனார் அக 90*

*ஐயனே! முதியவரைப் போன்ற வெண்மையான தலையை உடையது கடல். இளம் பெண்கள் விளையாடும் மணல் வீட்டை அழிப்பதற்கு இடமான மடல் விரிந்து மலரும் தாழையை யுடைய கடற்கரைச் சோலையிடத்தே நிகழ்ந்த ஒரு சில மகளிர் செவிகளில் மட்டும் பட்டிருந்த உங்களது இயற்கைப் புணர்ச்சி, பின்பு அலராக எங்கும் பரவியது. அதனால் எம் உறவினர் தலைவியை இல்லில் இருக்கச் செய்தமையை நீ அறியவில்லை. பல நாளாக நீ வளர்கின்ற முலையையுடைய எம் தலைவியை நின் அழகிய பெருமையை யுடைய மார்பினால் வருத்திச் சுழலும் நெஞ்சத்துடன் வருந்தும் உன்னிடம் நீ இங்ஙனம் வராதே என்று எவ்வாறு சொல்வேன்? இவளுடைய தந்தை மணக்கும் நெற்றியை யுடைய அரிவையான இவளது பசிய அணிகளுக்கு விலை யாய், அரிய வலிமை வாய்ந்த தெய்வங்களைக் கொண்ட செல்லூரின் கிழக்கில், உள்ளதான பெரிய கடல் போன்ற ஆரவாரத்தைக் கொண்ட இரும்பால் இயன்ற படைக்கலங் கள் உண்டாக்கிய வடுக்களைப் பெற்ற முகமுடையவரான அஞ்சாமையுடைய கோசரி... நியமம் என்ற ஊரையே தந்தாலும் அது போதும் எனக் கொள்ள மாட்டார், என்று பகலில் வந்து மீளும் தலைவனிடம் தோழி கூறினாள்.*

## 279. அலர் எழுந்தது நாரைகள் ஒலி போல

அரையுற்று அமைந்த ஆரம் நீவி,
புரையப் பூண்ட கோதை மார்பினை,

நல் அகம் வடுக் கொள முயங்கி, நீ வந்து,
எல்லினில் பெயர்தல் எனக்குமார் இனிதே.
பெருந் திரை முழக்கமொடு இயக்கு அவிந்திருந்த
கொண்டல் இரவின் இருங் கடல் மடுத்த
கொழு மீன் கொள்பவர் இருள் நீங்கு ஒண் சுடர்
ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை,
ஆடு இயல் யானை அணி முகத்து அசைத்த
ஓடைஒண் சுடர் ஒப்பத் தோன்றும்
பாடுநர்த் தொடுத்த கை வண் கோமான்,
பரியுடைய நல் தேர்ப் பெரியன், விரிஇணர்ப்
புன்னைஅம் கானல் புறந்தை முன்துறை
வம்ப நாரைஇனன் ஒலித்தன்ன
அம்பல் வாய்த்த தெய்ய – தண் புலர்
வைகுறு விடியல் போகிய எருமை
நெய்தல் அம் புது மலர் மாந்தும்
கைதை அம் படப்பை எம் அழுங்கல் ஊரே!

*– உலோச்சனார் அக 100*

*மற்ற நறுமணப் பொருளுடன் கூட்டி அரைக்கப் பெற்ற சந்தனத்தைப் பூசி உயர்வுடைய மலர் மாலையைப் பூண்ட மார்பை உடையவனே! நீ இரவில் நாள்தோறும் வந்து மார்பு வடு உண்டாகுமாறு தலைவியைத் தழுவிவிட்டுப் போதல் எமக்கு மிகவும் இனிதாகும். என்றாலும், பெரிய அலையின் ஒலியுடன் இயக்கம் அற்றிருக்கும் கடலையும் முகிலையும் உடைய இரவில் கொழு மீனைப் பிடிப்பவர் ஆகிய பரதவர் கரிய கடலில் தம் தோணியில் உள்ள இருள் நீங்குவதற்குக் காரணமான ஒளியுடைய விளக்குகள், புறங்காட்டி ஓடாத கொள்கையைக் கொண்ட மன்னனின் பாசறையில் உள்ள ஆடும் இயல்புடைய யானைகளின் முகத்தில் கட்டப்பட்ட பொன்னால் ஆன முகபடாங்களின் ஒள்ளிய சுடர் போல் தோன்றும் அத்தகைய இடம், பாடி வருபவரை வளைத்துக் கொள்ளும் கைவண்மை பெற்ற மன்னனான குதிரைகள் பூண்ட சிறந்த தேரையுடைய 'பெரியன்' என்பவனின், மலர்கள் மலர்ந்த கொத்துகளைப் பெற்ற புன்னை மரங்கள் நிறைந்த அழகிய சோலை சூழ்ந்த புறையாற்றின் கடல்துறையில் உள்ள*

புதிய நாரைக் கூட்டம் ஒலித்தாற் போன்ற அலர் எழும். குளிர்ந்த இருள் புலர்தலையுடைய விடியற்காலத்தே வெளிச் சென்ற எருமை நெய்தலின் புதிதாய் மலர்ந்த மலரைத் தின்னும் தாழை வேலிகளைக் கொண்ட தோட்டங்களை யுடைய எம் ஆரவாரம் மிக்க ஊரில் எழுந்தது எனவே இனி நீ இரவில் வாராது ஒழிக என்று தோழி தலைவனைப் பார்த்துச் சொன்னாள்

## 280. அறியினும் அறிக அன்னை!

அன்னை அறியினும் அறிக; அலர்வாய்
அம் மென் சேரி கேட்பினும் கேட்க;
பிறிது ஒன்று இன்மை அறியக் கூறி,
கொடுஞ் சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கி,
கடுஞ் சூள் தருகுவன், நினக்கே; கானல்
தொடலை ஆயமொடு கடல் உடன் ஆடியும்,
சிற்றில் இழைத்தும், சிறு சோறு குவைஇயும்,
வருந்திய வருத்தம் தீர, யாம் சிறிது
இருந்தனமாக, எய்த வந்து,
'தட மென் பணைத் தோள் மட நல்லீரே!
எல்லும் எல்லின்று; அசைவு மிக உடையேன்;
மெல் இலைப் பரப்பின் விருந்து உண்டு, யானும் இக்
கல்லென் சிறுகுடித் தங்கின் மற்று எவனோ?'
என மொழிந்தனனே, ஒருவன், அவற் கண்டு,
இறைஞ்சிய முகத்தெம் புறம் சேர்பு பொருந்தி,
'இவை நுமக்கு உரிய அல்ல; இழிந்த
கொழு மீன் வல்சி' என்றனம், இழுமென.
'நெடுங் கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ
காணாமோ?' எனக் காலின் சிதையா
நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்
என்னே குறித்த நோக்கமொடு, 'நன்னுதால்!
ஒழிகோ யான்?' என அழிதகக் கூறி,
யான் 'பெயர்க' என்ன, நோக்கி, தான் தன்
நெடுந் தேர்க் கொடிஞ்சி பற்றி
நின்றோன் போலும் என்றும் என் மகட்கே.

*— போந்தைப் பசலையார் அக 110*

தாயே, இவள் ஏன் இவ்வாறு ஆனாள் என்பதை யானும் அறியேன் என்றாலும் யானும் தலைவியான இவளும் மாலை போல் எங்களைத் தொடர்ந்து வரும் தோழியர் கூட்டத்துடன் சென்று கடலில் ஆடினோம்; கடற்கரைச் சோலையில் மணல் வீடு கட்டியும் சிறு சோறு சமைத்தும் விளையாடினோம் இவற்றால் எங்களுக்கு உண்டான வருத்தம் நீங்க யாம் சிறிது இளைப்பாறிச் சோலையில் இருந்தோம் அப்போது, ஒருவன் எம்மிடம் நெருங்கி வந்தான் "நீண்ட மென்மையான தோளை யுடைய மடப்பம் வாய்ந்த மெல்லியரே, பகற் போதும் ஒளி குன்றியது நானும் மிகவும் இளைப்புடையவனாய் உள்ளேன் ஆதலால் இந்த மெல்லிய இலைப் பரப்பிலே நீங்கள் சமைத்த இந்தச் சோற்றை விருந்தினனாய் இருந்து உண்டு, 'கல்' என்ற ஆரவாரம் உடைய இச் சிறு குடிலில் தங்கினால் உங்களுக்கு ஏதேனும் இடையூறு உண்டோ?" என்று வின வினான். யாங்கள் அந்தப் புதியவனைக் கண்டமையால் குனிந்த முகத்துடன், ஒருவன் பின் ஒருவர் மறைவான இடத்தைச் சேர்ந்திருந்து 'இழும்' என்னும் மென்மையான சொல்லால் அவன் வினவியதற்கு விடையாய் 'இந்த உணவு உமக்கு ஏற்றது அன்று; இழிந்த கொழுமீனால் ஆன உணவு!' எனச் சொன்னோம் பின்பு - தோழியரே, கொடிகள் அசையும் நாவாய்கள் தோன்றுகின்றன அவற்றைச் சென்று காண் போம் எனச் சொல்லிக் கொண்டு நாங்கள் கட்டிய சிற்றில், சிற்றுணவு முதலியவற்றைக் காலால் அழித்துவிட்டு அங்கு நில்லாமல் சென்றனர் ஆயத்தார். அப் பலருள்ளும், அவன் என்னை நோக்கிய பார்வையுடனே 'நல்ல நெற்றியை உடைய வளே, நான் போகவோ?' என்று தன் நெஞ்சம் அழியுமாறு கூறினான்

அதைக் கேட்ட நான் 'நீவிர் செல்லுக!' என்று சொன். னேன் அவன் அவ் இடத்தினின்றும் அகலவில்லை அவன் தன் தேரின் கொடிஞ்சியைப் பற்றிக் கொண்டு தலைவியை நோக்கியபடியே நின்றனன் இன்றும் என் கண்முன் நிற்பது அதுவே போலும்! இந்த நிகழ்ச்சியை நற்றாய் அறியினும் அறிக! அலர் கூறும் வாயையுடைய இச் சேரியில் வாழ்பவர் களான மகளிர் அலர் தூற்றினும் தூற்றுக அன்னையே,

*யான் உனக்குத் தலைவியின் மெய் வேறுபாட்டிற்கு இது வல்லாது யான் அறிந்த காரணம் வேறு ஒன்றும் இல்லாமையை நீ அறியச் சொல்லி, வளைந்த கழிகள் பொருந்திய புகாரிடத்துள்ள வருணனான தெய்வத்தை நோக்கிப் பொய்க்க ஒண்ணாத சூள் செய்து தருவேன் என்று தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நின்றாள்.*

## 281. இரவில் இங்குத் தங்குவாய்

நெடு வேள் மார்பின் ஆரம் போல,
செவ் வாய் வானம் தீண்டி, மீன் அருந்தும்
பைங் காற் கொக்கினம் நிரை பறை உகப்ப,
எல்லை பைப்பயக் கழிப்பி, குடவயின்
கல் சேர்ந்தன்றே, பல் கதிர் ஞாயிறு –
மதர் எழில் மழைக் கண் கலுழ, இவளே
பெரு நாண் அணிந்த சிறு மென் சாயல்
மாண் நலம் சிதைய ஏங்கி, ஆனாது,
அழல் தொடங்கினளே – பெரும! – அதனால்
கழிச் சுறா எறிந்த புண் தாள் அத்திரி
நெடு நீர் இருங் கழிப் பரி மெலிந்து, அசைஇ,
வல் வில் இளையரொடு எல்லிச் செல்லாது,
சேர்ந்தனை செலினே சிதைகுவது உண்டோ –
பெண்ணை ஓங்கிய வெண் மணற் படப்பை
அன்றில் அகவும் ஆங்கண்,
சிறு குரல் நெய்தல் எம் பெருங் கழி நாட்டே?

*– நக்கீரர் அக 120*

*தலைவனே! பெரும் புகழையுடைய திருமுருகனின் மார்பில் சூட்டப்பட்ட முத்துமாலை போலச் சிவந்த வானத்தில் பொருந்தி, மீனை உண்ணும் பசிய காலையுடைய கொக்கினம், வரிசையாய்ப் பறந்து உயர, பகற்பொழுதை மெல்ல மெல்லப் போக்கிப் பல கதிர்களையுடைய ஞாயிறு மேற்குத் திக்கில் மறையும் மலையை அடைந்தது மிக்க நாணத்தை உடைய மெல்லிய சாயல் பொருந்திய இவள், மாண்புற்ற அழகு கெட ஏக்கமுற்று மதர்த்த அழகை யுடைய குளிர்ந்த கண்கலங்க இடைவிடாமல் அழத் தொடங்கி*

*யுள்ளாள். அதனாலும், உப்பங்கழியில் உள்ள சுறாமீன் எறிதலால் புண் அடைந்த காலையுடைய நின் ஊர்தியான கோவேறு கழுதையும் நீண்ட நீரையுடைய கழியில் மீண்டும் செல்வதற்கு இயலாதபடி மெலிந்துள்ளது. எனவே, வலிய வில்லையுடைய நின் ஏவலருடன், இந்த இரவில் உன் ஊர்க்குச் செல்லாது, பனை மரங்கள் உயர்ந்த வெள்ளிய மணல் பரவிய தோட்டங்களில் அன்றிற் பறவை தன் துணையை அழைக்கும். அத்தகைய இடத்தே, சிறிய பூக் கொத்துகளையுடைய நெய்தல் கழி சூழ்ந்த எமது பெரிய ஊரில் இளைப்பாறி இருந்து நாளை சென்றால் கெடுவது ஏதேனும் உண்டோ? இல்லையன்றே! என்று இரவு எதிர் பட்ட தலைவனிடம் தோழி சொல்லினாள்.*

## 282. அவள் விழிகளின் இயல்பு

**அம்ம வாழி கேளிர்! முன்நின்று
கண்டனிர் ஆயின், கழறலிர் மன்னோ—
நுண்தாது பொதிந்த செங்காற் கொழுமுகை
முண்டகம் கெழீஇய மோட்டு மணல் அடைகரை,
பேஎய்த் தலைய பிணர்அரைத் தாழை
எயிறுடை நெடுந்தோடு காப்ப, பல உடன்
வயிறுடைப் போது வாலிதின் விரீஇ,
புலவுப் பொருது அழித்த பூநாறு பரப்பின்
இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்
கவர்நடைப் புரவிக் கால் வடுத் தபுக்கும்
நல்தேர் வழுதி கொற்கை முன் துறை
வண்டு வாய் திறந்த வாங்குகழி நெய்தற்
போது புறங்கொடுத்த உண்கண்
மாதர் வாள் முகம் மதைஇய நோக்கே.**

*– வெண்ணாகனார் அக 130*

*கேண்மை யுடையவரே, நீவிர் வாழ்க! யாம் சொல்வதைக் கேட்பீராக: நுட்பமான பூந்துகளால் மூடப்பட்ட சிவந்த தண்டினையும் கொழுவிய மொட்டையும் உடைய கழி முள்ளி பொருந்திய உயர்ந்த மணல் பொருந்திய கரை. அங்குப் பேய் போலும் தலையையுடைய சருச்சரை கொண்ட*

அடிப் பகுதியைக் கொண்ட தாழையின் முள்ளாகிய பற்களை பெற்ற நீளமான பல புற இதழ்கள் காக்க, அதன் வயிற்றை இடமாக உற்ற அரும்பு விரிந்து, புலால் நாற்றத்தைத் தாக்கி ஒழித்த மலர் மணம் கமழும் இடம் அந்த இடத்தில் - பரவிய அலைகள் கொணர்ந்து வீசிய குளிர்ந்த ஒளியை யுடைய முத்துகள், விரும்பும் நடையைப் பெற்ற குதிரையின் காலை வடுவுண்டாக்கி அதன் நடையைக் கெடுக்கும் இவ் இயல் புடைய நல்ல தேரையுடைய பாண்டியனின் கொற்கை என்னும் கடல் துறையில் உள்ள வண்டால் வாய் திறக்கப் பெற்ற வளைந்த கழியிடத்துள்ள நெய்தல் மலர் தோல்வி கண்ட தலைவியின் அழகிய ஒளி பொருந்திய முகத்தில் உள்ள கண்களின் செருக்கிய பார்வையை முன்னே நின்று பார்த்தால் இவ்வாறு கழறிக் கூற மாட்டீர்! என்று தன் தோழனுக்குத் தலைவன் சாற்றினான்.

## 283. துன்பத்துக்குக் காரணம்

பெருங் கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்
இருங் கழிச் செறுவின் உழாஅது செய்த
வெண் கல் உப்பின் கொள்ளை சாற்றி,
என்றூழ் விடர குன்றம் போகும்
கதழ் கோல் உமணர் காதல் மடமகள்
சில் கோல் எல் வளை தெளிர்ப்ப வீசி,
'நெல்லின் நேரே வெண் கல் உப்பு' எனச்
சேரி விலைமாறு கூறலின், மனைய
விளி அறி ஞமலி குரைப்ப வெரீஇய
மதர் கயல் மலைப்பின் அன்ன கண் எமக்கு,
இதை முயல் புனவன் புகைநிழல் கடுக்கும்
மா மூதள்ளல் அழுந்திய சாகாட்டு
எவ்வம் தீர வாங்கும் தந்தை
கை பூண் பகட்டின் வருந்தி,
வெய்ய உயிர்க்கும் நோய்ஆ கின்றே.– *அம்மூவனார் அக 140*

பெரிய கடலில் மீன் பிடிக்கும் சிறு குடியில் வாழும் பரதவர் பெரிய உப்பங்கழியான வயலில் உழாமலேயே விளைவித்த வெண்மையான உப்பினது விலையைச் சொல்லிக்

செங்கதிரின் வெப்பத்தால் உண்டான பிளப்புகளை உடைய குன்றுகளைக் கடந்து போகும் கடாவை விரைவாகத் தூண்டும் கோலையுடைய உப்பு வாணிகரின் காதலைக் கொண்டவள் இளைய மகள். அவள் சில திரண்ட வளை யல்கள் ஒலிக்குமாறு வீசி 'நெல்லுக்கு ஒத்த அளவினதே வெண்மையான உப்பு' என்று சேரியில் பண்டமாற்றான விலை கூறினாள். அவ்வாறு கூறலால், ஒலி வேற்றுமை அறியும் மலையில் உள்ள நாய் அவள் குரலை வேற்றுக் குரல் என்று குரைத்து வந்தது. அதற்கு அஞ்சிய மதர்த்த கயல் மீன்கள் இரண்டு பொருவது போன்ற அவள் கண் களால் எனக்கு இந் நோய் உண்டாகியது புதிய தினைக் கொல்லையை ஆக்க முயலும் குறவன் மரங்களை வெட்டிச் சுட்டெரிக்கும் தீப்புகை நிழலைப் போன்ற கரிய பழஞ் சேறு; அச் சேற்றில் அழுந்திய வண்டியின் இடையூறு நீங்க, வருத்தப் பட்டு இழுக்கும் அவளுடைய தந்தை கையில் பற்றி எருது போல் யான் வருந்தி வெப்பமான பெருமூச்சு விடச் செய்தது இந் நோய் என்று தன் நண்பனிடம் தலைவன் கூறினான்.

## 284. தலைவிக்குத் தாயின் அரிய காவல்

பின்னுவிட நெறித்த கூந்தலும், பொன்னென
ஆகத்து அரும்பிய சுணங்கும், வம்பு விடக்
கண் உருத்து எழுதரு முலையும், நோக்கி;
'எல்லினை பெரிது' எனப் பல் மாண் கூறி,
பெருந் தோள் அடைய முயங்கி, நீடு நினைந்து,
அருங் கடிப்படுத்தனள் யாயே; கடுஞ்செலல்
வாட்சுறா வழங்கும் வளை மேய் பெருந் துறைக்,
கனைத்த நெய்தற் கண் போல் மா மலர்
நனைத்த செருந்திப் போது வாய் அவிழ,
மாலை மணி இதழ் கூம்பக், காலைக்
கள் நாறு காவியொடு தண்ணென மலரும்
கழியும், கானலும், காண்தொறும் பல புலந்து;
'வாரார்கொல்?' எனப் பருவரும் –
தார்ஆர் மார்ப! நீ தணந்த ஞான்றே!

– குறுவழுதியார் அக 150

மாலை சூடிய மார்பை உடையவனே, நீ பிரிந்து சென்ற போது, விரைவான செலவையும் வாள் போன்ற கொம்பையும் உடைய சுறாமீன் திரிகின்ற சங்குகள் மேய்கின்ற பெரிய துறைகளைக் கொண்ட நெய்தல் மலர்கள் மாலை நேரத்தில் இதழ்கள் குவியக், காலையில் தேன் மணம் கமழும் குவளை கண் விழிக்கின்ற கழியையும், செருந்தி மலர் மலர்கின்ற கடற்கரைச் சோலையையும் பார்க்கும் போதெல்லாம், தலைவி பலவற்றையும் வெறுத்து இனி நம் தலைவர் வர மாட்டாரோ என்று எண்ணித் துன்புற்றாள் அதன் மேலும் - தாய் பின்னும் படி வளர்ந்த ஐம்பால் கூந்தலையும், பொன் போல் மார்பில் தோன்றிய தேமலையும், கட்டிய கச்சானது அற்று வீழும்படி விளங்கும் முலையையும் பார்த்துப், 'பெரிதும் அழகுடையாய்!' என்று பல முறையும் கூறிப், பெரிய தோளைப் பெரிதும் தழுவி, 'இவளது அழகுக்குக் காரணம் இவளுக்கு ஒருதலைவனுடன் கூட்டமுண்டு' என்று நினைந்து பார்த்துத் தலைவியை அரிய காவலில் வைத்து விட்டாள். என்று தோழி தலைவனிடம் கூறி திருமணம் முடிக்க வேண்டினான்

## 285. தலைவர் மணம் பேச வந்தார்

ஒடுங்கு ஈர் ஓதி நினக்கும் அற்றோ?
நடுங்கின்று, அளித்து, என் நிறை இல் நெஞ்சம்,
அடும்பு கொடி சிதைய வாங்கி, கொடுங் கழிக்
குப்பை வெண்மணற் பக்கம் சேர்த்தி,
நிறைச் சூல் யாமை மறைத்து ஈன்று, புதைத்த
கோட்டுவட்டு உருவின் புலவு நாறு முட்டை
பார்ப்பு இடன்ஆகும் அளவை, பகுவாய்க்
கணவன் ஓம்பும் கானல்அம் சேர்ப்பன்;
முள்உறின் சிறத்தல் அஞ்சி, மெல்ல
வாவு உடைமையின் வள்பின் காட்டி,
ஏத் தொழில் நவின்ற எழில் நடைப் புரவி
செழு நீர்த் தண் கழி நீந்தலின், ஆழி
நுதிமுகம் குறைந்த பொதி முகிழ் நெய்தல்,
பாம்பு உயர் தலையின், சாம்புவன நிவப்ப,

இர வந்தன்றால் திண் தேர்; கரவாது
ஒல்லென ஒலிக்கும் இளையரொடு வல் வாய்
அரவச் சீறூர் காணப்,
பகல்வந் தன்றால், பாய்பரி சிறந்தே.

*- குமுழிஞாழலார் நப்பசலையார் அக 160*

*நிறைவான கருப்பம் அடைந்த ஆமையானது அடும்புக் கொடி சிதையுமாறு அதை இழுத்து வளைந்த கழியின் வெண்மையான மணல் மேட்டின் பக்கத்தே சேர்ந்து அதில் மறைய ஈன்று, புதைத்த யானைக் கொம்பினால் செய்த வட்டுப் போன்ற வடிவம் உடைய புலால் நாறும் முட்டையை மறைத்து வைக்கும். அதைப் பிளவுடை வாயையுடைய ஆண் ஆமை அம் முட்டையினின்று குஞ்சு வெளிப்படும் அளவு பாதுகாக்கும் இத்தகைய சோலையை யுடைய கடற்கரைத் தலைவன் அவனது, வன்மையான தேரானது அம்பின் விரைவு போல் அழகிய நடையைப் பெற்ற குதிரைகள் தாற்றுக் கோலால் குத்தினால் வேகம் அளவு கடந்து போய் விடும் என அஞ்சிக் கடிவாளத்தால் குறிப்பிக்க, மெல்லச் செல்லும் அது செழித்த நீர் வாய்ந்த கழியைக் கடக்கும் போது, அத் தேர் உருளையின் கூர்மையான முனையால் அறுக்கப்பட்ட அடும்புகளை நெய்தல் மலர் பாம்பின் மேலே தூக்கிய தலைபோல் வாடி மேல் எழும் இஃது இரவுக் காலங் களில் இதுவரை நிகழ்ந்து வந்தது இன்று அந்தத் தேர், பாய்கின்ற வேகத்தால் சிறப்புற்று மறையாமல் ஒல் என ஆரவாரம் செய்யும் ஏவல் இளையருடன், வலிய வாயால் பழி யெழுப்பும் சிறிய ஊர் மங்கையர் காணும்படியாய் இன்று பகலிலேயே வந்தது இச் செய்தியைக் கேட்டு இது நன்மையானதாகவும் இருக்கலாம் என எண்ணாமல் என் நெஞ்சம் நடுங்கியது கரிய கூந்தலைக் கொண்ட தோழியே! உனக்கும் அவ்வாறு நெஞ்சம் நடுங்கியதோ? என்று தோழி மணம் முடிக்கச் சொல்லினாள்*

## 286. நண்டே! தலைவர்க்கு துன்பத்தைக் கூறு!

கானலும் கழறாது; கழியும் கூறாது,
தேன் இமிர் நறு மலர்ப் புன்னையும் மொழியாது;

ஒரு நின் அல்லது பிறிது யாதும் இலனே;
இருங் கழி மலர்ந்த கண் போல் நெய்தல்
கமழ் இதழ் நாற்றம் அமிழ்து என நசைஇ,
தண் தாது ஊதிய வண்டினம் களி சிறந்து,
பறைஇ தளரும் துறைவனை, நீயே,
சொல்லல் வேண்டுமால் – அலவ! பல்கால்
கைதைஅம் படுசினை எவ்வமொடு அசாஅம்
கடற் சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டம் மடி பரப்பின்
வெள் இறாக் கனவும் நள்ளென் யாமத்து,
'நின்உறு விழுமம் களைந்தோள்
தன்உறு விழுமம் நீந்துமோ!' எனவே.

*– மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் அக 170*

நண்டே, கரிய இந்தக் கழியில் மலர்ந்திருக்கும் மங்கை யரின் கண்களைப் போன்ற நெய்தற் பூவின் இதழ் நறு மணத்தை அமிழ்தம் என்று விரும்பிச் சென்று குளிர்ந்த மகரந்தத்தை உண்ட வண்டின் கூட்டம் களிப்பு மிகுதியால் பறப்பதற்கு இயலாது தளரும் இவ் இயல்பு வாய்ந்த துறையை உடையவன் தலைவன். அத் தகையவனுக்கு கடற்கரைச் சோலையும் போய்க் கூறாது உப்பங்கழியும் கூறாது. வண்டுகள் ஒலிக்கும் நறுமணமுடைய மலரும் சொல்லாது எனவே உன்னையே அல்லாது வேறு துணையும் எனக்கு இல்லை. தாழை மரத்தின் தாழ்ந்த கிளையில் விரும்பும் பெண் பறவை யுடன் வருத்தமுடன் தளர்ந்திருக்கும் சிறிய கடற் காக்கை பரதவர் மீன் வேட்டையாடலைச் செய்யாது சோம்பி யிருக்கும் காரணத்தால் சுறாமீன் திரியும் கடற்பரப்பில் இறால் மீனைப் பிடித்துத் தின்பதாய்க் கனவு காணும் அத் தகைய நள்ளிரவில் வந்து பல நாளும் நினது துன்பத்தைப் போக்கியவள் தலைவி அத்தகையவள் உன் பிரிவால் அடைந்த மிக்க துன்பத்தைக் கடக்க வல்லவளோ? என்று, அத் தலை வனிடம் போய் நீதான் சொல்ல வேண்டும் என்று தலைவி மிக்க காதலுணர்வை மொழிந்தாள்.

## 287. நகைப்புக்கு இடமாகின்றது

நகை நனி உடைத்தால் – தோழி – தகை மிகு
கோதை ஆயமொடு குவவு மணல் ஏறி
வீ ததை கானல் வண்டல் அயர,
கதழ் பரித் திண் தேர் கடைஇ வந்து,
தண்கயத்து அமன்ற ஒண்பூங் குவளை
அரும்பு அலைத்து இயற்றிய சுரும்பு ஆர் கண்ணி
பின்னுப் புறம் தாழக் கொன்னே சூட்டி,
நல் வரல் இள முலை நோக்கி, நெடிது நினைந்து,
நில்லாது பெயர்ந்தனன், ஒருவன்; அதற்கே
புலவு நாறு இருங்கழி துழைஇ, பல உடன்
புள் இறை கொண்ட முள்ளுடை நெடுந் தோட்டுத்
தாழை மணந்து ஞாழலொடு கெழீஇ,
படப்பை நின்ற முடத் தாட் புன்னைப்
பொன்நேர் நுண்தாது நோக்கி,
என்னும் நோக்கும் இவ் அழுங்கல் ஊரே.

*– கருவூர்க் கண்ணம்பாளனார் அக 180*

“தோழியே, நான் கூறுவதைக் கேட்பாயாக நான் அழகுடைய மாலை சூடிய ஆயத்தாருடன் கூடி மணல் மேட்டில் ஏறி மலர் நெருங்கிய சோலையில் விளையாடினேன் அவ் அமயத்தே ஒரு தலைவன் விரைந்த தேரைச் செலுத்தியபடி வந்தான் அவன் குளிர்ந்த குளத்தே நிறைந்த ஒளியுற்ற பூக்களையுடைய குவளைக் கொடியின் அரும்பை விரித்துக் கட்டிய வண்டுகள் மொய்க்கும் மாலையை, என் பின்னல் முதுகில் தாழ்ந்திட, நான் வேண்டாத போதே சூட்டினான் நல்ல வளர்ச்சியைப் பெற்ற என் கொங்கையைப் பார்த்தான் பின் ஏதோ நினைந்து காலம் தாழ்க்காமல் போய்விட்டான் அதற்கே, இந்த ஆரவாரத்தையுடைய ஊர் புலால் நாற்றம் வீசும் பெரிய கழியைத் துழாவிப் பலவகைப் பறவைகளும் ஒன்றாய்த் தங்கியிருக்கும் இயல்புடைய, முள்ளுடைய நீண்ட தாழையைச் சார்ந்து புலிநகக் கொன்றையுடன் பொருந்தித் தோட்டத்தில் உள்ள புன்னையின் பொன் போன்ற தாதினைப் பார்த்து என்னையும நோக்குகின்றனர்

*இதற்குக் காரணம் யாதோ? இது மிகவும் நகைப்பிற்கு இடமாய் உள்ளது!" என்று தலைவன் ஒருபக்க இருப்பத் தலைவி தோழிக்குக் கூறினாள்*

## 288. பழி கூறுகின்றது இவ்வூர்

திரை உழந்து அசைஇய நிரைவளை ஆயமொடு
உப்பின் குப்பை ஏறி, எல் பட
வருதிமில் எண்ணும் துறைவனொடு, ஊரே
ஒரு தன் கொடுமையின் அலர் பாடும்மே
அலமரல் மழைக் கண் அமர்ந்து நோக்காள்;
அலையல் – வாழி! வேண்டு, அன்னை! உயர்சிமைப்
பொதும்பில், புன்னைச் சினை சேர்பு இருந்த
வம்ப நாரை இரிய, ஒரு நாள்,
பொங்குவரல் ஊதையொடு புணரி அலைப்பவும்,
உழைக்கடல் வழங்கலும் உரியன்; அதன்தலை
இருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி
வயச் சுறா எறிந்தென, வலவன் அழிப்ப,
எழில் பயம் குன்றிய சிறை அழி தொழில
நிரைமணிப் புரவி விரைநடை தவிர,
இழுமென் கானல் விழுமணல் அசைஇ,
ஆய்ந்த பரியன் வந்து இவண்
மான்ற மாலைச் சேர்ந்தன்றோ, இலனே!

*– உலோச்சனார் அக 190*

*தாயே! வாழ்க! நான் கூறுவதை விரும்பிக் கேட்பாயாக: உயர்ந்த உச்சியை உடைய சோலை அதில் புன்னை மரத்தின் கிளையில் இருந்த புதிய நாரை நீங்கிய, முன்னம் ஒருநாள் மிக்கு வரும் வாடைக் காற்றால் அலைகளைக் கரையில் மோதவும் ஒரு தலைவன் கடலோரத்தில் தேரில் வரலானான் அதன் மேலும் பெருங்கழியை யுடைய துறைமுகத்தில் வலிய சுறாமீன் தன் உடம்பில் பொருந்தத் தாக்கி எறிந்தது. அதனால் தேர்ப் பாகன் தேரை நிறுத்தினான் அதனால் எழுச்சியும் பயனும் குன்றியனவும் பூட்டு அழிந்த செய்கையை உடையனவுமான மணிமாலை பூண்ட குதிரைகள் தமக்கு இயல்பான நடையை ஒழிந்தன இவ்வாறு மெலிந்த அக்*

குதிரைகளைக் கொண்ட அத் தலைவன் இழும் என்ற ஓசையை உடைய அச் சோலையில் மணலில் சிறிது நேரம் தங்கியிருந்து, இங்கு வந்து மயக்கம் தரும் மாலைப் பொழுது வரை தங்கியதும் இல்லை. அவனைச் சுழல்கின்ற கண்களைப் பெற்ற உன் மகள் பார்க்கவுமில்லை. அங்ஙனமாகவும், அலையில் விளையாடி வருந்தியதால் தளர்ந்த வரிசையான வளையலையுற்ற மகளிர் கூட்டத்துடன் நின் மகள் உப்பு மேட்டின் மீது ஏறி நின்று, இருள்வர, கரைக்கு மீண்டு வரும் படகுகளை எண்ணும் துறையை உற்ற அத் தலைவன், அவன். அத் தலைவனுடன் நின் மகளைச் சார்த்தி இந்த ஊரானது ஒப்பில்லாத தன் கொடுமையால் அலர் தூற்றுகின்றது, என்று தோழி செவிலித் தாயிடம் செப்பினாள்.

## 289. யாது நும் கருத்து?

நிலாவின் இலங்க மணல் மலி மறுகில்,  
புலால்அம் சேரிப், புல் வேய் குரம்பை,  
ஊர்என உணராச் சிறுமையொடு, நீர்உடுத்து,  
இன்னா உறையுட்டு ஆயினும், இன்பம்  
ஒரு,நாள் உறைந்திசினோர்க்கும், வழி நாள்  
தம் பதி மறக்கும் பண்பின் எம் பதி  
வந்தனை சென்மோ – வளை மேய் பரப்ப!–  
பொம்மற் படு திரை கம்மென உடைதரும்  
மரன்ஓங்கு ஒரு சிறை பல பாராட்டி,  
எல்லை எம்மொடு கழிப்பி, எல் உற,  
நல்தேர் பூட்டலும் உரியீர்; அற்றன்று,  
சேந்தனிர் செல்குவிர் ஆயின், யாமும்  
எம் வரை அளவையின் பெட்குவம்;  
நும் ஒப்பதுவோ? உரைத்திசின் எமக்கே.

*– உலோச்சனார் அக 200*

சங்குகள் மேயும் இயல்பு கொண்ட கடற்பரப்பை உடையவனே! நிலவு ஒளியைப் போல் விளங்கும் மணல் தெருவில் உள்ள புல்லால் வேயப் பெற்ற குடிசைகள் புலால் நாற்றும் வீசும் சேரி எம் ஊர் இஃது ஓர் ஊர் என்று உணர இயலாத சிறுமையுடையது. நீர் சூழப் பெற்றுத் துன்பம் உடையதாய்

உள்ளது அங்ஙனமாயினும் இன்பம் அளிக்கும் தன்மை யினால் ஒருநாள் இங்குத் தங்கியிருந்தவர்க்கும் மறுநாள் தம் ஊரையே மறந்திடச் செய்யும் இத் தன்மை கொண்டமை யால் எம் ஊர்க்கு வந்து செல்வாயாக! பொலிவுடைய ஒலிக் கும் அலை விரைவாகச் சிதறிடும் மரங்கள் உயர்ந்துள்ள ஒரு சோலையிடத்தே உன் பண்புகள் பலவற்றையும் பாராட்டும் படி இன்று பகல் எம்முடன் இருந்து தங்குவீராக தங்கி இரவு வரும் போது நும் தேரைப் பூட்டி உம் ஊர்க்குச் செல்லவும் உரியவராவீர் அவ்வாறு இல்லாமல் இரவுப் பொழுதிலும் எங்கள் ஊரிலேயே தங்கிச் செல்வதற்கு உடன் படுவீராயின் நாங்களும் எங்களால் முடிந்த அளவு உம்மைப் பேணுவோம் இஃது உம் கருத்துக்கு ஏற்றதா? ஏற்றதாயின் எமக்கு அதனைக் கூறுவீராக என்று தலைமகள் குறிப்பு அறிந்து தோழி தலைவனிடம் சொன்னாள்

## 290. அரிதாயிற்று தலைவன் வருகை

குறியிறைக் குரம்பைக் கொலை வெம் பரதவர்
எறிஉளி பொருத ஏமுறு பெரு மீன்
புண் உமிழ் குருதி புலவுக் கடல் மறுப்பட,
விசும்பு அணி வில்லின் போகி, பசும் பிசிர்த்
திரை பயில் அழுவம் உழக்கி, உரன் அழிந்து,
நிரைதிமில் மருங்கில் படர்தரும் துறைவன்,
பானாள் இரவில், நம் பணைத் தோள் உள்ளி,
தான் இவண் வந்த காலை, நம் ஊர்க்
கானல்அம் பெருந் துறை, கவின் பாராட்டி,
ஆனாது புகழ்ந்திசினோனே; இனி, தன்
சாயல் மார்பின் பா்யல் மாற்றி,
'கைதை அம் படு சினைக் கடுந் தேர் விலங்கச்
செலவு அரிது என்னும்' என்பது
பல கேட்டனமால் – தோழி! – நாமே.

*– உலோச்சனார் அக 210*

தோழியே! சிறிய இறப்பையுடைய குடிசை அதில் வாழும் கொலைத் தொழிலையுடைய பரதவர் அவரால் எறியப்பட்ட உளி தாக்கிய பெருமீன் வானை அணி செய்யும்

*வில்லைப் போல் தாவிச் சென்று தன் புண்ணினின்று ஒழுகிய குருதியால் புலால் நாற்றம் வாய்ந்த, கடல் நீரின் நிறம் மாறுபட அலை நெருங்கிய கடல் பரப்பைக் கலக்கி வலிமை குன்றி, வரிசைப் படவுள்ள படகின் பக்கத்தில் வந்து சேரும் இத்தகைய துறையை யுடையவன் நம் தலைவன் அவன், நள்ளிரவில் நம் மூங்கிலை ஒத்த தோளை நினைத்து இங்கு வந்தபோது நம்மூர்ச் சோலையை யுடைய பெரிய துறையின் அழகைப் பாராட்டி இடையறாது புகழ்ந்தான் அத்தகைய வன் இப்போதோ தன் மென்மையுடைய மார்பில் யாம் கண் உறங்குவதைப் போக்கித் தாழையின் தாழ்ந்த கிளையினால் தன் தேர் தடைப்படுதலால் செல்வது அரிது என்று கூறுவன் என்பதை நாம் பலமுறை கேட்டோம் என்று ஒருபக்கம் மறைந்துள்ள தலைவன் கேட்கத் தலை விக்குக் கூறுவது போல் கூறினாள்*

## 291. தோள் அழகுகெடாதிருக்க வழி சொல்

ஊரும் சேரியும் உடன்இயைந்து அலர் எழ,
தேரொடு மறுகியும், பணிமொழி பயிற்றியும்,
கெடாஅத் தீயின் உரு கெழு செல்லூர்,
கடாஅ யானைக் குழூஉச் சமம் ததைய,
மன் மருங்க அறுத்த மழு வாள் நெடியோன்
முன் முயன்று அரிதினின் முடித்த வேள்விக்,
கயிறு அரை யாத்த காண் தகு வனப்பின்,
அருங் கடி நெடுந்தூண் போல, யாவரும்
காணலாகா மாண் எழில் ஆகம்
உள்ளுதொறும் பனிக்கும் நெஞ்சினை, நீயே
நெடும்புற நிலையினை, வருந்தினைஆயின்
முழங்கு கடல் ஓதம் காலைக் கொட்கும்,
பழம் பல் நெல்லின் ஊணூர் ஆங்கண்,
நோலா இரும் புள் போல, நெஞ்சு அமர்ந்து
காதல் மாறாக் காமர் புணர்ச்சியின்,
இருங் கழி முகந்த செங் கோல் அவ் வலை
முடங்குபுற இறவோடு இன மீன் செறிக்கும்
நெடுங் கதிர்க் கழனித் தண் சாய்க்கானத்து

யாணர்த் தண் பணை உறும் எனக் கானல்
ஆயம் ஆய்ந்த சாய்இறைப் பணைத் தோள்
நல் எழில் சிதையா ஏமம்
சொல்இனித் தெய்ய யாம் தெளிவு மாறே.

*– மதுரை மருதன் இளநாகனார் அக 220*

தலைவ, ஊரிலும் சேரியிலும் ஒன்றாய் அலர் எழத் தேரோடும் பலகால் வந்தாய்! பணிந்த சொற்களை உரைத் தாய் என்றும் நீங்காத வேள்வித் தீயையுடைய 'செல்லூரில்', மதம் பொருந்திய யானையின் கூட்டம் போர் முனையிலே அழிய மன்னர் பரம்பரையை அழித்தவன் பரசுராமன் அவன் முன் காலத்தில் அரிதாய் முயன்று செய்த வேள்வியில் கயிற்றால் சுற்றப்பட்ட அழகையுடைய காவலைக் கொண்ட நீண்ட தூணைப் போல் எல்லாரும் காண இயலாத சிறந்த அழகைப் பெற்ற எம் தலைவியின் மார்பு அதனை நினையுந் தோறும் நடுங்கும் நெஞ்சினைக் கொண்டவனாய் இவ்வாறு புறத்திலே நின்று வருந்துகின்றாய்

ஆதலால் ஒலிக்கும் கடலினது நீர்ப் பெருக்குக் காலைப் பொழுதில் பெருகிச் சுழலும் நெய்தல் நிலம் அங்குப் பல நெற்கூடுகள். இத்தகைய இயல்பினது 'ஊணூர்.' அங்கு ஒன்றை ஒன்று பிரிதலைப் பொறுத்துக் கொள்ளாத பரிய மகன்றில் பறவையைப் போல் ஒருவர் நெஞ்சில் ஒருவர் பொருந்திக் காதல் நீங்காத அழகிய புணர்ச்சியால், பெரிய கழியைத் துழவி முகந்த நேரிய கோல்களைக் கொண்ட அழகிய வலை வளைந்த புறத்தையுடைய இறால் மீனுடன் பிற மீன்களையும் குவிக்கும் நீண்ட கதிர்களை யுடைய 'சாய்க் கானம்' என்ற ஊரில் உள்ள அழகிய குளிர்ந்த மூங்கிலை ஒக்கும் என்று கடற்கரைச் சோலையில் தோழிமார் ஆராய்ந்து பாராட்டிய, வளைந்த முன் கையையுடைய பருத்த இவளு டைய தோள்கள் நல்ல அழகு கெடாமைக்குக் காரணமான பாதுகாவலை யாம் தெளிய உணருமாறு இப்போது நீ உரைப்பாயாக, என்று இரவு வந்து மீளும் தலைவனிடம் தோழி இவ்வாறு வினவினாள்

## 292. தலையை இறைஞ்சினாள்

'உறு கழி மருங்கின் ஓதமொடு மலர்ந்த
சிறு கரு நெய்தற் கண் போல் மாமலர்ப்
பெருந் தண் மாத் தழை இருந்த அல்குல்,
ஐய அரும்பிய சுணங்கின், வை எயிற்று,
மை ஈர் ஓதி, வாள் நுதல், குறுமகள்!
விளையாட்டு ஆயமொடு வெண் மணல் உதிர்த்த
புன்னை நுண் தாது பொன்னின் நொண்டு,
மனை புறந்தருதி ஆயின், எனையதூஉம்,
இம் மனைக் கிழமை எம்மொடு புணரின்,
தீதும் உண்டோ, மாதராய்?' என,
கடும் பரி நல் மான், கொடிஞ்சி நெடுந் தேர்
கை வல் பாகன் பையென இயக்க,
யாம் தற் குறுகினமாக, ஏந்து எழில்
அரி வேய் உண் கண் பனி வரல் ஒடுக்கி,
சிறிய இறைஞ்சினள், தலையே –
பெரிய எவ்வம் யாம் இவண் உறவே.

*– மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் அக 230*

*"பெரிய உப்பங்கழியின் பக்கத்தில் கடல் நீரால் மலர்ந்த கண்போன்ற சிறிய கரிய நெய்தல் மலரின் பெரிய மலருடன் கூடிய குளிர்ந்த தழையையுடைய அல்குலையும், கூர்மையான பல்லையும், கரிய கூந்தலையும் ஒளியுடைய நெற்றியையும் உடைய இளைய மகளே! பெண்ணே! நீ விளையாடும் உன் ஆயத்தாருடன் புன்னை மரம் வெண்மையான மணலில் உதிர்த்த நுட்பமான பொடியையும் பொன்னாய்க் கருதி இல்லறம் நடத்துவாயாயின், இந்த இல்லறக்கிழமை சிறிதேனும் என்னிடம் பொருந்துவதாயின் உண்டாகக் கூடிய தீமையுண்டோ?" எனச் சொல்லி, விரைந்த செலவையுற்ற நல்ல குதிரை பூண்ட கொடிஞ்சியை யுடைய தேரைத் திறம் மிக்க பாகன் மெல்லச் செலுத்த, நாம் அவளை அணுகினோம் அணுக, யாம் இங்கே பெரிய துன்பத்தை அடைய, அவள் சிவந்த வரி படர்ந்த மையுண்ட கண்களில் மகிழ்ச்சிக் கண்ணீர் வெளிப்படுவதை மறைத்துத் தன் தலையை அவள்*

*சிறிய அளவில் அசைத்தனள், என்று தலைமகளைக் கண்டு நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறினான்*

## 293. வருக பகற் பொழுதில்

செவ் வீ ஞாழல் கருங்கோட்டு இருஞ்சினைத்
தனிப்பார்ப்பு உள்ளிய தண் பறை நாரை
மணிப் பூ நெய்தல் மாக் கழி நிவப்ப,
இனிப் புலம்பின்றே கானலும்; நளிகடல்
திரைச் சுரம் உழந்த திண் திமில் விளக்கிடை
பல் மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய,
எந்தையும் செல்லுமார் இரவே; அந்தில்
அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி,
யாயும் ஆயமோடு அயரும், நீயும்,
தேம் பாய் ஓதி திரு நுதல் நீவி,
கோங்கு முகைத்தன்ன குவிமுலை ஆகத்து,
இன் துயில் அமர்ந்தனைஆயின், வண்டுபட
விரிந்த செருந்தி வெண்மணல் முடுக்கர்
பூ வேய் புன்னை அம் தண் பொழில்
வாவே தெய்ய, மணந்தனை செலற்கே.

*– எழூஉப்பன்றி நாகன் குமரனார் அக 240*

செந்நிறப் பூக்கள் மலர்ந்துள்ள புலிநகக் கொன்றை மரத்தின் கரிய கொம்பின் பெரிய கிளையில், தனியே இருக்கும் தன் குஞ்சை நினைத்த தாழப் பறக்கும் நாரை, நீல மணி போன்ற நெய்தல் மலர்களையுடைய கரிய கழியினின்றும் மேலே எழுந்து பறந்தது; அதனால் கடற்கரைச் சோலையும் இப்போது தனிமை அடைந்தது. கடலாகிய அலையுடைய சுரத்தில் திரிந்து வருந்திய திண்மையான படகின் விளக்கொளி யில் தான் பிடித்த பல மீன் கூட்டங்களை என் தமையர்க்குக் காட்டுவதற்காக இரவில் என் தந்தையும் வீட்டுக்கு வருவார் என் அன்னையும் ஆயத்தாருடன் தெய்வம் பொருந்திய துறையில் கையால் வணங்கித் துதித்து விழாக் கொண்டாடு வாள்

தேன் சிந்தும் கூந்தலைப் பெற்ற தலைவியினது அழகிய நெற்றியைத் தடவிக் கோங்க மர அரும்பைப் போன்ற குவிந்த

*முலையையுடைய மார்பில் இனிய துயிலை விரும்பினாய் என்றால், அங்ஙனம் அவளைக் கூடிச் செல்வதற்கு வண்டுகள் மொய்க்கும் மலர்ந்த பூக்களையுடைய செருந்தி மரம் உள்ள வெண்மையான மணல் பரந்த மூலையில் புன்னை மரங்களை யுடைய குளிர்ந்த சோலைக்குப் பகற்பொழுதில் வருவாயாக, என்று இரவுக்குறி வந்த தலைவனிடம் தோழி கூறினாள்*

## 294. யாது இதற்குக் காரணம்?

எவன் கொல்? வாழி, தோழி! – மயங்குபிசிர்
மல்கு திரை உழந்த ஒல்கு நிலைப் புன்னை
வண்டு இமிர் இணர நுண் தாது வரிப்ப,
மணம் கமழ் இள மணல் எக்கர்க் காண்வரக்,
கணம்கொள் ஆயமொடு புணர்ந்து விளையாடக்,
கொடுஞ்சி நெடுந் தேர் இளையரொடு நீக்கி,
தாரன், கண்ணியன், சேர வந்து ஒருவன்,
வரி மனை புகழ்ந்த கிளவியன், யாவதும்
மறுமொழி பெறாஅன் பெயர்ந்தனன்; அதற்கொண்டு
அரும் படர் எவ்வமொடு பெருந் தோள் சாஅய்,
அவ் வலைப் பரதவர் கானல் அம் சிறுகுடி
வெவ் வாய்ப் பெண்டிர் கவ்வையின் கலங்கி,
இறைவளை நெகிழ்ந்த நம்மொடு
துறையும் துஞ்சாது, கங்குலானே!

*செல்லூர்கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார் அக 250*

*“என் தோழியே, வாழ்க! நெருங்கிய துளிகள் மிகுந்த அலைகளால் வருந்திய அசையும் நிலையுடைய புன்னை மரத்தின் வண்டுகள் ஒலிக்கும் மலர்க் கொத்துகளின் பூந்து கள் உதிர்ந்து அழகு செய்யும் மணம் கமழும் மெத்தென்ற மணல் மேடு அதில் ஆயத்தாருடன் கலந்து விளையாடி னோம் அப்போது தாரையும் மாலையையும் அணிந்த ஒரு தலைவன் மொட்டையுடைய பெரிய தேரினை ஏவலரோடு விலக்கித் தொலைவிலே நிறுத்தி விட்டு, நெருங்கி வந்தான் யாம் செய்த மணல் வீட்டினைப் பாராட்டிய சொல்லை உடையவனாய் நம்மிடமிருந்து பதில் ஏதோன்றையும் எதிர் பார்த்துப் பெறாதவனாய் வாளா மீண்டு சென்றான்*

*அது முதற்கொண்டு அரிய நினைவால் ஆன துன்பத்தால், நம் பெருந்தோள் மெலிய, அழகிய வலையை உடைய பரதவரின் கடற்கரையில் உள்ள சிற்றூரில் வாழும் கொடிய வாயைப் பெற்ற மகளிர் தூற்றும் பழிச் சொல்லாலே உள்ளம் கலங்க, முன் கையில் வளை நெகிழப் பெற்றது இத் தன்மை கொண்ட நம்முடன் இரவுப் பொழுதில் கடல் துறையும் உறங்கவில்லை! இதற்குக் காரணம் யாதோ?" என்று தலைவன் கேட்கத் தோழி வினவினாள்*

## 295. இரவு வரின் என்ன ஆவாளோ?

**மண்டிலம் மழுக, மலைநிறம் கிளர,**
**வண்டினம் மலர்பாய்ந்து ஊத, மீமிசைக்**
**கண்டற் கானல் குருகினம் ஒலிப்பக்,**
**கரை ஆடு அலவன், அளைவயின் செறிய,**
**திரை பாடு அவியத் திமில் தொழில் மறப்பச்**
**செக்கர் தோன்றத், துணைபுணர் அன்றில்**
**எக்கர்ப் பெண்ணை அகமடல் சேரக்,**
**கழி மலர் கமழ் முகம் கரப்பப் பொழில் மனைப்**
**புன்னை நறு வீ பொன் நிறம் கொளாஅ,**
**எல்லை பைப்பயக் கழிப்பி, எல் உற**
**யாங்கு ஆகுவல்கொல் யானே? நீங்காது,**
**முது மரத்து உறையும் முரவு வாய் முது புள்**
**கதுமெனக் குழறும், கழுது வழங்கு, அரை நாள்**
**நெஞ்சு நெகிழ் பருவரல் செய்த**
**அன்பிலாளன் அறிவு நயந்தேனே.**

*— மோசிக் கரையனார் அக 260*

*மலைகள் நிறம் விளங்கித் தோன்றவும், வண்டுக் கூட்டம் மலர்களில் பாய்ந்து ஒலிக்கவும், தாழைச் சோலையில் மேலே இருந்தபடி நாரைகள் ஒலிக்கவும், கடற்கரையில் விளையாடி நண்டு வளையில் புகவும், அலைகள் இல்லை யாகவும், மீன்பிடி படகுகள் வேட்டையாடலை நீங்கவும், செவ்வானம் தோன்றத் தன் துணையைப் பிரியாமல் கூடியிருக்கும் அன்றிற் பறவை மணல் மேட்டில் உள்ள பனை மரத்தின் உள் மடலில் தங்கவும், உப்பங் கழியிடத்தில் மலர்கள் நறுமணம் கமழும்*

*இதழ்கள் குவியவும், சோலை சூழ்ந்த மனையில் உள்ள புன்னை மரத்தின் நறுமண மலர் பொன்னிறம் உடையதாய் விரியவும், பகற்போதை மெல்லப் போக்கி ஞாயிற்று மண்டிலம் வெம்மை குறைய இரவு வரின், இவள் நிலை என்னவாகுமோ என்று தோழி உரைத்தாள் "முதிய மரத்தில் எப்போதும் நீங்காமல் தங்கி முழங்கும் வாயையுடைய பேராந்தை விரைவாய்க் குழறி ஒலிப்பதும், பேய் திரிவதும் ஆகிய பாதி இரவில், நெஞ்சம் உருகும் துன்பத்தைச் செய்த அன்பற்றவனின் அறிவுடைய மொழியை உண்மை என நம்பினேன்" எனத் தலைவி தலைவன் கேட்பத் தோழியிடம் உரைத்தாள்*

## 296. விரைவில் மணக்க!

இருங் கழி மலர்ந்த வள் இதழ் நீலம்,
புலாஅல் மறுகின் சிறுகுடிப் பாக்கத்து
இன மீன் வேட்டுவர், ஞாழலொடு மிலையும்
மெல் அம் புலம்ப! நெகிழ்ந்தன, தோளே;
சேயிறாத் துழந்த நுரை பிதிர்ப் படு திரை
பராஅரைப் புன்னை வாங்கு சினைத் தோயும்
கானல்அம் பெருந் துறை நோக்கி, இவளே,
கொய்சுவற் புரவிக் கைவண் கோமான்
நல் தேர்க் குட்டுவன் கழுமலத்து அன்ன,
அம் மா மேனி தொல் நலம் தொலைய,
துஞ்சாக் கண்ணள் அலமரும்; நீயே,
கடவுள் மரத்த முள் மிடை குடம்பைச்
சேவலொடு புணராச் சிறு கரும் பேடை
இன்னாது உயங்கும் கங்குலும்,
நும் ஊர் உள்ளுவை நோகோ, யானே.

*– சாகலாசனார் அக 270*

*புலால் நாற்றம் வீசும் சிறிய குடில்களை உடைய பாக்கத்தில் கூட்டமான மீன் வேட்டையாடுபவர் உப்பங் கழியில் மலர்ந்த வளமுடைய நீலப் பூக்களைப் புலிநகக் கொன்றை மலர்களுடன் சூடுவர் இத்தகைய மென்மை நிலமான நெய்தல் நிலதலைவனே!*

*இவள் தோள்கள் மெலிந்தன சிவந்த இறால் மீன் கலங்கிய நுரையுடன் கூடிய திவலை பொருந்திய அலைகள் பெரிய அடியை யுடைய புன்னை மரத்தின் கிளைகளில் பொருந்தும் சோலை. அச் சோலையை அடுத்த பெரிய துறையை நோக்கிக் கொய்யப் பெற்ற பிடரி மயிரையுடைய குதிரைகளைக் கொண்ட வள்ளன்மையுடைய தலைவனான குட்டுவனின் 'கழுமலம்' என்ற ஊரைப் போன்ற அழகிய மாமை நிறமுடைய மேனி அழகு கெடக் கண் உறங்காமல் இவள் உள்ளம் கலங்குவாள்.*

*நீ தான் தெய்வத்தை யுடைய மரத்தில் உள்ள முள்ளால் ஆன கூட்டில், தன் சேவலுடன் புணராத கரிய அன்றிற் பேடை துன்பம் அடைந்து வருந்தும் இரவிலும் உம் ஊர்க்குச் செல்ல நினைக்கின்றீர் யான் வருந்துகின்றேன், என்று பகலில் வந்து செல்லும் தலைவனை விரைந்து மணம் கொள்ளக் கூறினாள் தோழி.*

## 297. பெறுதற்கரியவள்

**பொன்அடர்ந் தன்ன ஒள் இணர்ச் செருந்திப்**
**பல் மலர் வேய்ந்த நலம் பெறு கோதையள்,**
**திணி மணல் அடை கரை அலவன் ஆட்டி,**
**அசையினள் இருந்த ஆய் தொடிக் குறுமகள்,**
**நலம்சால் விழுப் பொருள் கலம் நிறை கொடுப்பினும்,**
**பெறல் அருங்குரையள்ஆயின், அறம் தெரிந்து,**
**நாம் உறை தேஎம் மரூஉப் பெயர்ந்து அவனொடு**
**இரு நீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்,**
**பெரு நீர்க் குட்டம் புணையொடு புக்கும்,**
**படுத்தனம், பணிந்தனம், அடுத்தனம், இருப்பின்,**
**தருகுவன்கொல்லோ தானே – விரிதிரைக்**
**கண் திரள் முத்தம் கொண்டு, ஞாங்கர்த்**
**தேன் இமிர் அகன் கரைப் பகுக்கும்**
**கானல் அம் பெருந் துறைப் பரதவன் எமக்கே?**

*– அம்மூவனார் அக 280*

*நெஞ்சமே! பொன்மலர்கள் நெருங்கி இருந்ததைப் போன்ற ஒளியுடைய பூங்கொத்துகள் கொண்ட செருந்தியின்*

*பல மலர்களைச் சூடிய அழகு பொருந்திய கூந்தலைக் கொண்டவளாய், மணல் பொருந்திய கடற்கரையில், நண்டை ஓட்டி விளையாடி இளைப்பாறியிருந்த தலைவி, நன்மை மிக்க சிறந்த பொருளும் அணிகலனும் தந்தாலும் பெறுவதற்கு அரியவள்; அப்படியானால் நாம் என்ன செய்வோம்?*

*பரந்த கடலில் திரண்ட வடிவுடைய முத்துகளை வாரிக் கொண்டு வந்து வண்டுகள் ஒலிக்கும் அகன்ற கரையில் அவற்றைப் பகுத்துக் கொள்ளும் சோலை பொருந்திய பெரிய துறையையுற்ற நெய்தல் தலைவன் அவளுடைய தந்தை*

*நாம் தங்கும் இந்த நாட்டில் இருப்பதைக் கைவிட்டுப் போய், அவனுடன் கூடிப் பெரிய கடற்கரையை அடுத்த உப்பு வயலில் உப்புப் பொதியுடன், திரிந்து வருந்தியும், பெரிய கடலின் ஆழத்தில் புணையில் சென்றும், அவனுடைய வயமாகிப் பணிந்தும் சார்ந்தும் இருப்பின் அறத்தை எண்ணிப் பார்த்து அவளை நமக்குத் தருவானோ? என்று தலைவியைக் கண்டு திரும்பிய தலைவன் தன் நெஞ்சிடம் சொன்னான்*

## 298. பசந்தன விழி

குடுமிக் கொக்கின் பைங் காற் பேடை,
இருஞ் சேற்று அள்ளல் நாட் புலம் போகிய
கொழு மீன் வல்சிப் புன் தலைச் சிறாஅர்,
நுண் ஞான் அவ் வலைச் சேவல் பட்டென,
அல்குறு பொழுதின் மெல்கு இரை மிசையாது,
பைதல் பிள்ளை தழீஇ, ஒய்யென,
அம் கண் பெண்ணை அன்புற நரலும்
சிறு பல் தொல் குடிப் பெரு நீர்ச் சேப்பன்,
கழி சேர் புன்னை அழி பூங் கானல்,
தணவா நெஞ்சமொடு தமியன் வந்து, நம்
மணவா முன்னும், எவனோ – தோழி!–
வெண் கோட்டு யானை விறற் போர்க் குட்டுவன்
தெண் திரைப் பரப்பின் தொண்டி முன்துறை,
கரும்பு உண மலர்ந்த பெருந் தண் நெய்தல்
மணி ஏர் மாண் நலம் ஒரீஇப்,
பொன் நேர் வண்ணம் கொண்ட என் கண்ணே?

*– நக்கீரர் அக 290*

*என் தோழியே, கரிய குழம்பான சேற்றினை யுடைய வயலில் காலை வேட்டைக்குப் போன கொழு மீனான உணவைப் பெற்ற சிறுவர் இட்ட நுட்பமான கயிற்றால் ஆன வலையிலே சேவல் அகப்பட்டுக் கொண்டது சூட்டை யுடைய அக் கொக்கின் பசுமையான காலைக் கொண்ட பெண் கொக்கு தனியாய் இருக்கும்போது இரையைத் தின்னாது தன் குஞ்சினைத் தழுவி அழகிய இடத்தையுடைய பனை மரத்தில் அன்பு தோன்ற ஒலிக்கும் இவ் இயல்புடைய சிறிய பலவான பழைய குடிகளைக் கொண்ட கடற்கரையை உடையவன் நம் தலைவன்.*

*உப்பங்கழியைச் சார்ந்த புன்னையின் பூக்கள் பொருந்திய சோலையில் அன்பு நீங்காத நெஞ்சை உடையவனாய் வந்து நம்மைக் கூடுவதற்கு முன்னும் என் கண்கள், வெண்மையான தந்தத்தைப் பெற்ற யானையையும் போர் வெற்றியையும் கொண்ட சேரன் செங்குட்டுவனின் தெளிவான அலைகளை யுடைய தொண்டி என்ற துறைமுகத்தில், வண்டு தேனை உண்ண மலர்ந்த பெரிய நெய்தற் பூவின் நீல மணியைப் போன்ற அழகிய நிறம் நீங்கிப் பொன் நிறத்தைக் கொண்டன இதன் காரணம் யாதோ? என்று இரவில் வந்த தலைவன் அறியத் தலைவி தோழியிடம் இயம்பினாள்*

## 299. வருக எம் மனைக்கு

நாள் வலை முகந்த கோள் வல் பரதவர்
நுணங்கு மணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்,
பறி கொள் கொள்ளையர், மறுக உக்க
மீன்ஆர் குருகின் கானல் அம் பெருந்துறை,
எல்லை தண் பொழில் சென்றெனை, செலீஇயர்,
தேர் பூட்டு அயர ஏஎய், வார் கோல்
செறி தொடி திருத்தி, பாறு மயிர் நீவிச்,
'செல்இனி, மடந்தை!நின் தோழியொடு, மனை' எனச்
சொல்லியஅளவை, தான் பெரிது கலுழ்ந்து
தீங்கு ஆயினள் இவள்ஆயின், தாங்காது,
நொதுமலர் போலப் பிரியின், கதுமெனப்
பிறிது ஒன்று ஆகலும் அஞ்சுவல்; அதனால்,

சேணின் வருநர் போலப் பேணா,
இருங் கலி யாணர் எம் சிறு குடித் தோன்றின்,
வல் எதிர் கொண்டு, மெல்லிதின் வினைஇத்,
'துறையும் மான்றன்று பொழுதே; கறவும்
ஓதம் மல்கலின் மாறு ஆயினவே;
எல்லின்று; தோன்றல்! செல்லாதீம்' என
எமர் குறை கூறத் தங்கி, ஏமுற,
இளையரும் புரவியும் இன்புற, நீயும்
இல் உறை நல் விருந்து அயர்தல்
ஒல்லுதும், பெரும! நீ நல்குதல் பெறினே.

*– உலோச்சனார் அக 300*

*பெருமானே! விடியற்காலத்தில் வலையினால் மீன்களைப் பிடித்துக் கொணரும் மீன் பிடித்தலில் வல்ல பரதவர். தாம் வலையால் பிடித்து வந்த மீன்களை நுண்மணல் பரப்பாகிய நெய்தல் நிலத்தில் உலர்த்துவதற்காக இடுவர். அவரது பறி யினின்றும் சிதறிய மீன்களைப் பறவைகள் தின்னும் இத் தன்மை கொண்ட கானலை உடையது பெரிய துறை*

*குளிர்ந்த சோலையில் பகற் பொழுது சென்றதாக, உன் ஊர்க்குச் செல்லத் தேரைப் பூட்டும்படி ஏவி இவளது திரண்ட நெருங்கிய வளையலைத் திருத்தி, சிதறிய கூந்தலைத் தடவி, "மங்கையே!" என்று நீ கூறிய அளவில், இவள் மிகவும் அழுது வருந்துகின்றாளாதலால் அதனை நினைத்துப் பாராது அயலார் போல் பிரிந்து சென்றால், 'இவள் விரைவாய்த் தீங்கு அடையினும் அடைவாள்' என்று நான் அஞ்சுகின்றேன் அதனால்,*

*யான் கூறுவதை நீ கேட்டருள்வாயானால் நீயும் நின் இளையரும் தொலைவினின்றும் வருவார் போல் கருதாமல், மிக்க ஆரவாரமுடைய அழகிய எம் சிற்றூரில் வந்தால், எங்கள் வீட்டினர் விரைவாய் அன்புடன் எதிர்கொண்டு அழைத்து, மெல்லென வினாவி, 'பொழுது மயங்கியது நீர்த் துறையும் அலை பெருகி ஏறுகின்றதால் சுறாமீன்களும் பகை யாய் ஆயின இருண்டுவிட்டது தலைவ, நின் ஊர்க்குச் செல்ல வேண்டா" எனக் குறையிரந்து வேண்டுவர் அங்கு இன்பம் அடையத் தங்கி, நின் ஏவலாளரும் குதிரையும்*

நீயும் இன்பம் அடைய எம் வீட்டில் நல்ல விருந்தாய் ஏற்றுப் பேணுதலைப் பொருந்துவோம், என்று பகலில் வந்து நீங்கும் தலைவனுக்குத் தோழி சொன்னாள்.

### 300. ஊர்க்கு வருக!

கடுந் தேர் இளையரொடு நீக்கி, நின்ற
நெடுந் தகை நீர்மையை அன்றி, நீயும்,
தொழுதகு மெய்மை, அழிவு முத்துறுத்து,
பல் நாள் வந்து, பணி மொழி பயிற்றலின்,
குவளை உண்கண் கலுழ, நின்மாட்டு
இவளும் பெரும் பேதுற்றனள்; ஒரும்
தாயுடை நெடு நகர்த் தமர் பாராட்ட,
காதலின் வளர்ந்த மாதர் ஆகலின்,
பெரு மடம் உடையரோ, சிறிதே; அதனால்,
குன்றின் தோன்றும் குவவு மணற் சேர்ப்ப!
இன்று இவண் விரும்பாதீமோ! சென்று, அப்
பூ விரி புன்னைமீது தோன்று பெண்ணைக்
கூஉம் கண்ணஃதே தெய்ய – ஆங்க
உப்பு ஒய் உமணர் ஒழுகையொடு வந்த
இளைப் படு பேடை இரிய, குரைத்து எழுந்து
உரும் இசைப் புணரி உடைதரும்
பெருநீர் வேலி எம் சிறு நல் ஊரே. – *நக்கீரனார் அக 310*

*குன்றைப் போன்று விளங்கும் குவிந்த மணலையுடைய கடற்கரைத் தலைவனே! விரைவாகச் செல்லும் தேரை ஏவலாளருடன் தொலைவில் நிறுத்தி இங்கு வந்து நிற்கும் பெருந்தன்மைக் குணத்தை உடையவனாக விளங்குகின்றாய் அதுவே அன்றி மற்றவர் வணங்கத் தக்க தோற்றம் உடையவனாகவும் உள்ளாய் இத்தகைய நீயும் பல நாள்களும் வந்து பணிவான சொற்களைப் பலவாறாகக் கூறுகின்றாய்*

*ஆதலால், இவளும் கருங்குவளைப் பூப் போன்ற மை தீட்டப்பட்ட கண் கலங்க உன்னிடம் பெரிய மயக்கம் கொண்டுள்ளாள்*

*தாய்மார் உள்ள பெரிய இல்லத்தில் உறவினர் பாராட்டக் காதலுடன் வளர்ந்த பெண்டிர் ஆதலால் இவளைப் போன்றோர் சில காலத்துக்கு நாணத்தை உடையவர் ஆவர்*

*அதனால், இன்று இங்கு இருப்பதை விரும்ப வேண்டா! உப்பு மூட்டையை ஏற்றி வரும் உப்பு வாணிகர் வண்டி வரிசையுடன் அங்கு வந்த, அடைகாக்கும் கோழிப் பேடை அஞ்சியோட, இடி போன்ற குரலை உடைய அலை ஒலித்து எழுந்து சிதறி விடும் கடலை எல்லையாய்க் கொண்ட எமது சிறிய ஊர், சிறிது சென்ற வழி அந்த மலர்கள் விரிந்த புன்னையின் மேலே உயர்ந்து தோன்றும் பனை மரத்தி னின்றும் கூப்பிடு தொலைவில் உள்ளதாகும் அங்கு நீவிர் நாளை வருக என்று தலைவனிடம் தோழி இயம்பினாள்*

## 301. நீ கூறிய சூளும் பொய்யோ?

ஓங்கு திரைப் பரப்பின் வாங்கு விசைக் கொளீஇ,
திமிலோன் தந்த கடுங் கண் வய மீன்,
தழை அணி அல்குல் செல்வத் தங்கையர்,
விழவு அயர் மறுகின் விலை எனப் பகரும்
கானல் அம் சிறுகுடி, பெரு நீர்ச் சேர்ப்ப!
மலர் ஏர் உண்கண் எம் தோழி எவ்வம்
அலர் வாய் நீங்க, நீ அருளாய் பொய்ப்பினும்,
நெடுங் கழி துழைஇய குறுங் கால் அன்னம்
அடும்பு அமர் எக்கர் அம் சிறை உளரும்,
தடவு நிலைப் புன்னைத் தாது அணி, பெருந் துறை
நடுங்கு அயிர் போழ்ந்த கொடுஞ்சி நெடுந் தேர்
வண்டற் பாவை சிதைய வந்து, நீ
தோள் புதிது உண்ட ஞான்றை,
சூளும் பொய்யோ, கடல் அறி கரியே?

*– மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் அக 320*

*உயர்ந்த அலைகளையுடைய கடலில் வலிந்து இழுக்கின்ற விசையைக் கொண்ட ஓடத்தைச் செலுத்திய பரதவன் அஞ்சாமை கொண்ட வலிய மீன்களைக் கொணரத் தழையை அணிந்த அல்குலையுடைய அவன் தங்கையர் விழா நிகழும் தெருக்களில் இன்ன விலை என்று கூறி விற்பர் இத்தகைய கடற்கரைச் சோலை சூழ்ந்த சிற்றூர்களையுடைய கடற் கரையை உடைய தலைவனே!*

*மலர் போன்ற மையுண்ட விழிகளைப் பெற்ற எம் தோழியின் துன்பமும், ஊரார் கூறும் அலர் மொழியும் நீங்குமாறு நீ அருள் செய்யாமல் பொய்த்துப் போனாலும், பெரிய உப்பங்கழியைத் துழாவி மீனைப் பிடித்து உண்ணும் குறுகிய காலையுடைய அன்னப் பறவை அடுப்பங்கொடி பொருந்திய மணல் மேட்டிலிருந்து தன் அழகிய சிறகை உலர்த்தும். வளைவான கிளையையுடைய புன்னை மரத்தின் பூங்கொடி அழகு செய்யும் பெரிய துறை. அதில் நெகிழ்ச்சியுடைய மணலைப் பிளந்து கொண்டு வந்த கொடிஞ்சியையுடைய நீண்ட தேரை யாங்கள் கட்டிய வண்டல் பாவை அழியும்படி ஓட்டி வந்து நீ இவள் தோள் நலத்தை துய்த்தாய். அந்த நாளில் இக் கடல் சான்றாக நீ கூறிய சூளும் பொய்யோ? என்று தோழி வினவி மணமுடிக்கக் கோரினாள்.*

## 302. மறைந்தது தலைவரின் தேர்

கழிப் பூக் குற்றும், கானல் அல்கியும்,
வண்டற் பாவை வரி மணல் அயர்ந்தும்,
இன்புறப் புணர்ந்தும், இளி வரப் பணிந்தும்,
தன் துயர் வெளிப்படத் தவறி, நம் துயர்
அறியாமையின், அயர்ந்த நெஞ்சமொடு
செல்லும், அன்னோ; மெல் அம் புலம்பன்!
செல்வோன் பெயர் புறத்து இரங்கி, முன் நின்று,
தகைஇய சென்ற என் நிறை இல் நெஞ்சம்
எய்தின்றுகொல்லோ தானே? எய்தியும்,
காமம் செப்ப, நாண் இன்று கொல்லோ?
உதுவ காண், அவர் ஊர்ந்த தேரே;
குப்பை வெண் மணற் குவவுமிசையானும்,
எக்கர்த் தாழை மடல்வயினானும்,
ஆய் கொடிப் பாசடும்பு பரிய ஊர்பு இழிபு,
சிறுகுடிப் பரதவர் பெருங் கடல் மடுத்த
கடுஞ் செலல் கொடுந் திமில் போல,
நிவந்து படு தோற்றமொடு இகந்து மாயும்மே!

*– உலோச்சனார் அக 330*

மென்மை நிலமான நெய்தல் நிலத்தையுடைய நம் தலைவன். கழியில் உள்ள மலர்களைப் பறித்தும், கடற்கரைச் சோலையில் தங்கியும், மணலில் வண்டற்பாவை செய்து விளையாடியும், இன்பம் அடையப் பலகால் வந்து கூடியும், சிறுமை விளங்கப் பணிந்தும், குற்றம் இல்லாத நம் துயரை அறியாமல் தளர்ந்த மனத்துடன் தன் துயரம் வெளிப்படச் செல்வான் அந்தோ! அவ்வாறு செல்பவன் சென்ற திக்கில் இரங்கி முன்னே நின்று செல்லாதே என்று தடை செய்யச் சென்றதான என் உறுதியில்லாத நெஞ்சமானது அத் தலைவனைப் போய் அடைய வில்லையோ? ஒருவேளை அடைந்தும் நம் காமத்தை அவனுக்குச் சொல்ல நாணம் கொண்டதோ?

அவர் ஏறிச் சென்ற தேர் உங்கே தோன்றுவதைக் காண் பாயாக. வெண்மையான மணல் குவிந்த குவியல் மீதும் மணல் மேட்டில் உள்ள தாழைச் செடிகள் மீதும், அடும்பின் பசுமையான கொடிகள் அறுபட அவற்றின் மீது ஏறியும் இறங்கியும், சிறு குடியினரான பரதவர் கடலில் செலுத்திய விரைந்து செல்லும் வளைந்த மீன் படகு போல உயர்ந்து தோன்றும் தோற்றத்துடன் அப்பால் போய் மறைந்தது, என்று தோழி தலைவியின் துயர் தவிர்க்கத் தலைவனிடம் விளம்பினாள்.

## 303. இரவில் தங்குக எம் இல்லத்தில்

பல் நாள் எவ்வம் தீர, பகல் வந்து,
புன்னை அம் பொதும்பின் இன் நிழல் கழிப்பி,
மாலை மால் கொள நோக்கி, பண் ஆய்ந்து,
வலவன் வண் தேர் இயக்க, நீயும்
செலவு விருப்புறுதல் ஒழிகதில் அம்ம –
'செல்லா நல் இசை, பொலம் பூண், திரையன்
பல் பூங் கானற் பவத்திரி அன்ன இவள்
நல் எழில் இள நலம் தொலைய, ஒல்லென,
கழியே ஓதம் மல்கின்று; வழியே
வள் எயிற்று அரவொடு வய மீன் கொட்கும்
சென்றோர் மன்ற; மான்றன்று பொழுது' என

நின் திறத்து அவலம் வீட, இன்று இவண்
சேப்பின் எவனோ – பூக் கேழ் புலம்ப!–
பசு மீன் நொடுத்த வெண் நெல் மாஅத்
தயிர் மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே;
வடவர் தந்த வான் கேழ் வட்டம்
குட புல உறுப்பின் கூட்டுபு நிகழ்த்திய
வண்டு இமிர் நறுஞ் சாந்து அணிகுவம் – திண் திமில்
எல்லுத் தொழில் மடுத்த வல் வினைப் பரதவர்
கூர் உளிக் கடு விசை மாட்டலின், பாய்பு உடன்,
கோட் கறாக் கிழித்த கொடு முடி, நெடு வலை
தண் கடல் அசைவளி எறிதொறும், வினை விட்டு,
முன்றில் தாழைத் தூங்கும்
தெண் கடற் பரப்பின், எம் உறைவு இன், ஊர்க்கே?

*– நக்கீரர் அக 340*

*மலர்கள் பொருந்திய கடற்கரையை உடைய தலைவ! கெடாத நல்ல புகழையுடைய பொன்னால் ஆன அணிகலன் அணிந்தவன் திரையன். அவனது பல பூஞ் சோலைகளை யுடைய 'பவத்திரி' என்னும் ஊர் போன்றவள் இவள். இவளது அழகிய இளமைச் செவ்வி தொலையும்படி, வழி யானது 'ஒல்' என்ற ஓசையுடன் நீர் பெருகப் பெற்றுள்ளது மேலும் கூர்மையான பற்களையுடைய பாம்புடனே சுறா மீனும் திரியும் பொழுதும் பெரிதும் இருண்டுவிட்டது. இத் தகைய நிலையிலும் தலைவர் சென்று விட்டாரே என்று நாங்கள் உன்னைப் பற்றி அடையும் துன்பம் நீங்கும்படி -*

*திண்ணிய படகுகளில் போய்த் தம் பகற் பொழுதிற் குரிய தொழிலை மேற்கொண்ட கொடுந் தொழிலையுடைய நெய்தல் நில மக்கள், கடிய காற்றின் மிக்க விசையுடன் செல்லுதலால், கொலைத் தொழிலையுடைய சுறா மீன்கள் ஒன்றாய்க் கூடிக் கிழித்தலால் கிழிபட்ட வளைந்த முடி களையுடைய வலைகள் தொழில் ஒழிந்து கடலினின்று குளிர்ந்த காற்று வீசுந்தோறும் வீட்டின் முற்றங்களில் வளர்ந்துள்ள தாழை மரத்தின் மீது அசையும் இத் தன்மை கொண்ட தெளிந்த கடற்பரப்பையுடைய எம் வாழ்தற்கு*

இனிய ஊரில். நீ இன்று எங்களுடன் தங்கிச் சென்றால் அதனால் உண்டாகும் குற்றம் யாது?

இன்று நீ இங்குத் தங்கினால், பசிய மீனை விற்றுப் பெற்ற வெண்ணெல்லின் மாவைத் தயிரிட்டுப் பிசைந்த கூழை நின் குதிரைகள் உண்ணும். உனக்கு, வடநாட்டில் உள்ளவர் கொணர்ந்த வெண்மையான நிறத்தையுடைய வட்டக்கல்லில் குடமலையான பொதியில் மலைச் சந்தனக் கட்டையால் பிற நறுமணப் பொருள்களையும் கூட்டி உண்டாக்கிய வண்டுகள் ஒலிக்கும் நறுமணச் சாந்தை அணிவிப்போம்.

பல நாளும் இருவருடைய துன்பமும் நீங்கும்படி நீ பகற்பொழுதில் வந்து, புன்னைமரச் சோலையில் இனிய நிழலில் அப் பகற் பொழுதைக் கழித்து, மாலைப்போது வந்தவுடன் அதனை மயக்கம் நீங்கப் பார்த்து, உன் பாகன் தேரினைப் பூட்டுதலை ஆராய்ந்து அழகிய அத் தேரைச் செலுத்த நீயும் ஊர்க்குப் போதற்கு விரும்புவதைக் கை விடுவாயாக! என்று பகற்குறிக்கண் தோழி தலைவனிடம் சொன்னாள்.

## 304. எம் மனையில் இருந்து செல்க

கழியே,
சிறு குரல் நெய்தலொடு காவி கூம்ப,
எறி திரை ஓதம் தரல் ஆனாதே,
துறையே,
மருங்கின் போகிய மாக் கவை மருப்பின்
இருஞ் சேற்று ஈர் அளை அலவன் நீப்ப
வழங்குநர் இன்மையின் பாடு அன்றன்றே;
கொடு நுகம்ம நுழைந்த கணைக் கால் அத்திரி
வடி மணி நெடுந் தேர் பூண ஏவாது
ஏந்து எழில் மழைக் கண் இவள் குறையாகச்
சேந்தனை சென்மோ – பெரு நீர்ச் சேர்ப்ப!–
இலங்கு இரும் பரப்பின் எறி சுறா நீக்கி,
வலம்புரி மூழ்கிய வான் திமிற் பரதவர்
ஒலி தலைப் பணிலம் ஆர்ப்ப, கல்லென,

கலி கெழு கொற்கை எதிர்கொள, இழிதரும்
குவவு மணல் நெடுங் கோட்டு ஆங்கண்,
உவக்காண் தோன்றும், எம் சிறு நல் ஊரே!

*– சேந்தன் கண்ணனார் அக 350*

*பெரிய கடற்கரையை உடைய தலைவனே! உப்பங்கழியில் சிறிய மலர்க்கொத்துகளை உடைய நெய்தற்பூவும் கருங் குவளைப்பூவும் குவியக் கடல் தான் வீசும் அலையைத் தருதல் குறையாது. அத் துறைப் பக்கத்தே நீண்ட பெரிய கவையான கொம்பையுடைய கரிய ஈரமான சேற்றில் இருக்கும் நண்டு மேலே வெளிப்படச் செல்பவர் இல்லாததால் ஒலி அடங்கியது.*

*விளங்கும் பெரிய கடற்பரப்பில் எறியும் சுறா மீனைப் பிடிப்பதைக் கைவிட்டு ஒதுக்கி, வலம்புரி முத்தினை மூழ்கி எடுக்கப் பெரிய படகையுடைய மறவர், ஒலியுடைய சங்குகள் கல்லென ஆரவாரிக்கும்படி ஆரவாரம் மிக்க கொற்கையார் எதிர் கொள்ளும்படி படகினின்றும் இறங்கும் மணல் பொருந்திய கரையான அங்கு எம் சின்னஞ் சிறிய நல்ல ஊர் உங்கே தோன்றுகின்றது. காண்பாய்!*

*வளைந்த நுகத்தில் பூட்டப்பட்ட திரண்ட காலையுடைய கோவேறு கழுதையை மணியுடைய நீண்ட தேரில் பூட்டும்படி நின் பாகனுக்கு ஆணை இட வேண்டா. மிக்க அழகுடைய இவள் வேண்டுகோளின்படி இன்றைய இரவு இந்த ஊரில் தங்கிச் செல்வாயாக, என்று பகலில் வந்த தலைவனிடம் தோழி மொழிந்தாள்.*

## 305. புன்னைமரச் சோலையில் இரவு வருக

பல் பூந் தண் பொழில், பகல் உடன் கழிப்பி,
ஒரு கால் ஊர்திப் பருதி அம் செல்வன்
குடவயின் மா மலை மறைய, கொடுங் கழித்
தண் சேற்று அடைஇய கணைக் கால் நெய்தல்
நுண் தாது உண்டு வண்டினம் துறப்ப,
வெருவரு கடுந் திறல் இரு பெருந் தெய்வத்து
உரு உடன் இயைந்த தோற்றம் போல,
அந்தி வானமொடு கடல் அணி கொளாஅ,

வந்த மாலை பெயரின், மற்று இவள்
பெரும் புலம்பினளே தெய்ய; அதனால்
பாணி பிழையா மாண் வினைக் கலி மா
துஞ்சு ஊர் யாமத்துத் தெவிட்டல் ஓம்பி,
நெடுந் தேர் அகல நீக்கி, பையெனக்
குன்று இழி களிற்றின் குவவு மணல் நீந்தி,
இரவின் வம்மோ – உரவு நீர்ச் சேர்ப்ப!–
இன மீன் அருந்து நாரையோடு பனைமிசை
அன்றில் சேக்கும் முன்றில், பொன் என
நன் மலர் நறு வீ தாஅம்
புன்னை நறும் பொழில் செய்த நம் குறியே.

*– மதுரைக் கண்ணத்தனார் அக 360*

*பல பூக்களையுடைய குளிர்ந்த சோலையில் பகல் முழுவதும் கழித்து, ஒற்றைச் சகடத்தை யுடைய கதிரவன் மேற்கில் உள்ள மலையில் மறைய, வளைந்த குழியில் உள்ள சேற்றில் பொருந்திய திரண்ட காலையுற்ற, நெய்தல் மலரின் நுட்பமான தாதினை உண்டு வண்டின் கூட்டம் அம் மலரை விட்டுப் போகும் அஞ்சத்தக்க மிக்க வன்மையுடைய இரண்டு பெருந் தெய்வங்களான மாயோனும் சேயோனும் ஆகியவரின் செந்நிறமும் கரிய நிறமும் பொருந்திய தோற்றம் போல அந்தி வானத்தின் அழகுடன் கடலின் அழகையும் கொண்டு வந்த இம் மாலைக் காலத்தில் நீ நீங்கின் இவள் மிக்க தனிமை அடைந்து வருந்துவாள்*

*அதனால், தாளத்துக்கு ஏற்ப அடியிட்டுச் செல்லும் மாட்சிமையுடைய தொழில் அமைந்த செருக்கு உடைய குதிரை, ஊர் உறங்கும் இரவில் ஒலித்தலைக் காத்து, உன் நீண்ட தேரைத் தொலைவில் நிறுத்தி, மெல்லெனக் குன்றினின்று இழிந்து செல்லும் ஆண் யானையைப் போல் திரண்ட மணல் மேட்டைக் கடந்து மீன் இனத்தை உண்ணும் நாரைகளுடன் பனை மரத்தின் மீது அன்றில் பறவை தங்கியிருக்கும் நம் முற்றத்தின் அருகில் உள்ள பொன் போன்ற நறுமண மலர்கள் உதிர்ந்து பரவும் புன்னை மரங்கள் உள்ள சோலையில் செய்த நம் குறியிடத்துக்கு இரவிலே வருவாயாக, என்று தோழி தலைவனிடம் இரஞ்சினாள்*

## 306. எழுந்தால் எழட்டும் அலர்

'வளை வாய்க் கோதையர் வண்டல் தைஇ,
இளையோர், செல்ப; எல்லும் எல்லின்று;
அகல் இலைப் புன்னைப் புகர் இல் நீழல்,
பகலே எம்மொடு ஆடி, இரவே,
காயல் வேய்ந்த தேயா நல் இல்
நோயொடு வைகுதிஆயின், நுந்தை
அருங் கடிப் படுவலும்' என்றி; மற்று, 'நீ
செல்லல்' என்றலும் ஆற்றாய்; 'செலினே,
வாழலென்' என்றி, ஆயின்; ஞாழல்
வண்டு படத் ததைந்த கண்ணி, நெய்தல்
தண் அரும் பைந்தார் துயல்வர, அந்தி
கடல் கெழு செல்வி கரை நின்றாங்கு,
நீயே கானல் ஒழிய, யானே
வெறி கொள் பாவையின் பொலிந்த என் அணி துறந்து,
ஆடு மகள் போலப் பெயர்தல்
ஆற்றேன்தெய்ய; அலர்க, இவ் ஊரே!

*– அம்மூவனார் அக 370*

*வளைவான மாலையை உடைய இளைய மகளிர் வண்டல் விளையாட்டை விளையாடி மீண்டு செல்வர். பகலும் ஒளி குறைந்தது. பகற்பொழுதில் அகன்ற இலைகளை யுடைய புன்னை மரத்தின் புள்ளியில்லா நிழலில் எங்களுடன் விளை யாடி, இரவுப்பொழுதில், காய்ந்த புல்லால் வேயப்பெற்ற வளம் குன்றாத நம் இல்லத்தில் வருத்தத்துடன் பொருந்தி யிருப்பாயாயின் உன் தந்தையின் அரிய காவலிற்படுவேன் என்று கூறுகின்றாய்.*

*அங்ஙனமின்றி நீ இல்லத்துக்குச் செல்லுக என்று நான் கூறுவதையும் பொறுத்துக் கொள்ளாது, சென்றால் உயிர் வாழமாட்டேன் என்கின்றாய். அப்படியாயின், புலிநகக் கொன்றையின் வண்டு மொய்க்க மலர்ந்த மலர் மாலையுடன் நெய்தலின் குளிர்ந்த அரிய பசிய பூமாலை அசைய, அந்திக் காலத்துக் கடல் தெய்வம் கரையில் நின்றதைப் போன்று, நீ இந்தக் கடற்கரைச் சோலையில் தனித்து நிற்க, வெறி*

*யாட்டம் மேவிய மகள் போல் பொலிவுடைய என் அழகினைத் துறந்து அவள் பின்பு வறிதே மீள்வது போல் நீங்க இயலாதவள் ஆனேன். இவ் ஊரானது அலர் சொன்னாலும் சொல்லுக என்று தோழி தலைவிக்குக் கூறுவதுபோல தலைவன் கேட்பக் கூறினாள்.*

## 307. ஏற்க வேண்டும் தலைவனை

**தேர் சேண் நீக்கி, தமியன் வந்து, 'நும்**
**ஊர் யாது?' என்ன, நணி நணி ஒதுங்கி,**
**முன் நாள் போகிய துறைவன், நெருநை,**
**அகல் இலை நாவல் உண்துறை உதிர்த்த**
**கனி கவின் சிதைய வாங்கிக்கொண்டு, தன்,**
**தாழை வேர் அளை, வீழ் துணைக்கு இடூஉம்**
**அலவற் காட்டி, 'நற்பாற்று இது' என**
**நினைந்த நெஞ்சமொடு, நெடிது பெயர்ந்தோனே;**
**உதுக் காண் தோன்றும், தேரே இன்றும்;**
**நாம் எதிர் கொள்ளாம்ஆயின், தான் அது**
**துணிகுவள் போலாம்; நாணு மிக உடையன்**
**வெண் மணல் நெடுங் கோட்டு மறைகோ?–**
**அம்ம, தோழி!– கூறுமதி நீயே.**

***– மதுரை மருதனின் நாகனார் அக 380***

*தோழி! நான் கூறுவதைக் கேட்பாயாக, தலைவன் தனியாய் வந்தான்; 'உம் ஊர் யாது?' என வினவினான் வினவிக் குறுகக் குறுக நடந்து முன்னாளில் சென்றான் தலைவன்*

*நேற்று, அகன்ற இலையையுடைய நாவல் மரம், நீர் உண்ணும் துறையில் இட்ட பழத்தை அதன் அழகு அழிய இழுத்துக்கொண்டு போய்த் தாழையின் வேர்ப் பாகத்தில் வளையில் உள்ள தன் அன்பு பொருந்திய பெண் நண்டுக்குத் தரும் ஓர் ஆண் நண்டைக் காட்டி, இது நல்ல தன்மை யுடையது எனச் சொல்லி நீளச் சிந்தித்த மனத்துடன் மீண்டு போனான்*

*இன்றும், உதோ பார், அவனது தேர் தோன்றுகின்றது. நாம் அவனை எதிர்கொண்டு ஏற்காமையால், மிக்க நாணம்*

*உடையவன், ஆதலால் அவன் அதை மெய் என்றே எண்ணு வான் போலும் நான் வெண்மையான மணற்கரையில் மறைந்து கொள்வேனோ? உன் கருத்தை நீ கூறுக, என்று பின்னின்ற தலைவனுக்குக் குறை நேர்ந்த தோழி தலைவனுக்குக் குறை நயப்பக் கூறினாள்*

## 308. வலியிழந்துவிட்டது என் மனம்

**உவர் விளை உப்பின் கொள்ளை சாற்றி,**
**அதர் படு பூழிய சேண் புலம் படரும்**
**ததர் கோல் உமணர் பதி போகு நெடு நெறிக்**
**கண நிரை வாழ்க்கைதான் நன்றுகொல்லோ?**
**வணர் சுரி முச்சி முழுதும் மன் புரள,**
**ஐது அகல் அல்குல் கவின் பெறப் புனைந்த**
**பல் குழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி,**
**"நெல்லும் உப்பும் நேரே; ஊரீர்!**
**கொள்ளீரோ" எனச் சேரிதொறும் நுவலும்**
**அவ் வாங்கு உந்தி, அமைத் தோளாய்! நின்**
**மெய் வாழ் உப்பின் விலை எய்யாம்' என**
**சிறிய விலங்கினமாக, பெரிய தன்**
**அரி வேய் உண்கண் அமர்த்தனள் நோக்கி,**
**'யாரீரோ, எம் விலங்கியீஇர்?' என**
**மூரல் முறுவலள் போர்வனள் நின்ற**
**சில் நிரை வால் வளைப் பொலிந்த**
**பல் மாண் பேதைக்கு ஒழிந்தது, என் நெஞ்சே!**

*– அம்மூவனார் அக 390*

*பாங்கனே, களர் நிலத்தில் விளைந்த உப்பினது விலையைச் சொல்லி வழிகளில் உள்ள புழுதியைப் பெற்ற தொலைவில் செல்லும் செறிந்த கோல்களையுடையவராய்ச் செல்லும் உப்பு வாணிகர் போவதான நீண்ட வழியில் அக் கூட்டத்துடன் சேர்ந்து வாழும் வாழ்க்கை சிறந்தது போலும்!*

*வளைந்து சுருண்ட கூந்தலின் முடி முழுவதும் அலையக் கொண்டு மென்மையான அகன்ற அல்குல் அழகுபெற அணிந்த பல தளிர்களுடன் கூடிய தழையாடை அசையு மிடத்து அசைந்து நடந்து, 'ஊராரே! நெல்லும் உப்பும்*

விலை ஒப்பாகும். வாங்கிக் கொள்வீராக!' என்று சேரி தோறும் விற்கும் அழகிய கொப்பூழையும் மூங்கில் போன்ற தோளையும் உடையாய்! உன் உடலில் உள்ள இன்பத்துக் குரிய விலையை அறியோமே என யாம் சொல்லிச் சிறிது தடைப்படுத்தினோம்

தன் பெரிய கண்ணால் மாறுபட்டவள் போலப் பார்த்து எம்மைத் தடுக்கும் நீவிர் யாரோ எனச் சொல்லி இள நகை யுடையவளாய்ப் பெயர்ந்து நின்ற சில வெள்ளிய வளை களால் பொலிந்த பல மாண்புடைய பேதையின் பொருட்டு என் நெஞ்சம் வன்மை இழந்துவிட்டது, என்று தலைவன் தன் தோழனிடம் சொன்னான்

## 309. இவ்வூர் நகைப்புக்கு ஆனது!

நகை நன்று அம்ம தானே – 'அவனொடு
மனை இறந்து அல்கினும் அலர்' என நயந்து,
கானல் அல்கிய நம் களவு அகல,
பல் புரிந்து இயறல் உற்ற நல் வினை,
நூல் அமை பிறப்பின், நீல உத்தி,
கொய்ம் மயிர் எருத்தம் பிணர் படப் பெருகி,
நெய்ம்மிதி முனைஇய கொழுஞ் சோற்று ஆர்கை
நிரல் இயைந்து ஒன்றிய செலவின், செந் தினைக்
குரல் வார்ந்தன்ன குவவுத் தலை, நல் நான்கு
வீங்கு சுவல் மொசியத் தாங்கு நுகம் தழீஇ,
பூம் பொறிப் பல் படை ஒலிப்பப் பூட்டி,
மதியுடைய வலவன் ஏவலின், இகு துறைப்
புனல் பாய்ந்தன்ன வாம் மான் திண் தேர்க்
கணை கழிந்தன்ன நோன் கால் வண் பரி,
பால் கண்டன்ன ஊதை வெண் மணல்,
கால் கண்டன்ன வழி படப் போகி,
அயிர்ச் சேற்று அள்ளல் அழுவத்து, ஆங்கண்,
இருள் நீர் இட்டுச் சுரம் நீந்தி, துறை கெழு
மெல்லம் புலம்பன் வந்த ஞான்றை,
பூ மலி இருங் கழித் துயல்வரும் அடையொடு,
நேமி தந்த நெடுநீர் நெய்தல்

விளையா இளங் கள் நாற, பலவுடன்
பொதி அவிழ் தண் மலர் கண்டும், நன்றும்
புதுவது ஆகின்று அம்ம – பழ விறல்
பாடு எழுந்து இரங்கு முந்நீர்,
நீடு இரும் பெண்ணை, நம் அழுங்கல் ஊரே!

*– உலோச்சனார் அக 400*

தோழி, தன் இல்லத்தைக் கடந்து தங்கினும் அலரா கும் என்று சொல்லப்படும் நம் தலைவனுடன் விரும்பிச் சோலையில் போய்த் தங்கிய நம் களவொழுக்கம் நீங்குமாறு முன் பிறப்பில் பல நன்மைகளும் செய்து பொருந்திய நல் வினையாம்

குதிரை நூல் கூறும் இல்க்கணம் கொண்ட பிறப்பை யும் நீலமணியான நெற்றிச் சுட்டியையும், சொரசொரப்பு உண்டாக அடர்ந்து கொய்யப் பெற்ற மயிர் பொருந்திய பிடரையும், நெய் வார்த்து மிதித்து இயற்றிய உணவை வெறுத்த கொழுவிய சோற்றை உண்ணுகின்ற வரிசையாய்ப் பொருந்திச் செல்லும் செலவையும், தினையின் கதிர் நீண்டு வளைந்தாற் போன்ற வளைந்த தலையையும் உடையன நான்கு குதிரைகள். அவை தாங்கும் நுகத்தினைப் பொருத்திப் பருத்த கழுத்தில் நெடுக அணிந்த பல வடங்களையும் ஒலிக்குமாறு பூட்டி அறிவுடைய பாகன் செலுத்துவதால் தாழ்ந்த துறையில் நீர் பாய்ந்தது போன்ற தாவிச்செல்லும் குதிரை பூட்டிய திண்ணிய தேரின் அம்பு பாய்ந்தது போன்ற வலிய காலின் செலவு பாலைக் கண்டாற் போன்ற காற்றால் திரட்டப்பட்ட வெண்மையான மணலில் வாய்க்கால் போல் சுவடு உண்டாகச் செல்ல, அங்குக் குழம்பாகிய சேற்றின் பரப்பைக் கொண்ட இருண்ட நீரையுடைய குறுகிய வழியைக் கடந்து கடற் கரையையுடைய நம் தலைவன் வந்த அந் நாள் -

மலர்கள் நிறைந்த கரிய உப்பங்கழியில் இலைகளுடன் அசையும் ஆழமான நீர் பொருந்திய நெய்தல் நிலத்தில் முதிராத இளையகள் நாறும்படி மலர்ந்த மலர்களை மற்றப் பூக்கள் பலவற்றுடன் சூடிக் கொண்டு வருதலைப் பார்த்து, பழைய பெருமை கொண்ட 'ஆரவாரம் மிக்கு முழங்கும்

கடற்கரையில் உள்ள பெரிய பனைமரத்தையுடைய அலர் ஆரவாரம் கொண்டிருந்த நம் ஊர் அந்த அலரை விட்டுப் புதிய தன்மையுடையதாய் ஆகியது

அது மிகவும் நகைப்பை உண்டாக்குவதாகும் என்று மணந்து சென்ற பிறகு தோழி தலைவிக்குச் சொன்னாள்

# நெய்தல்

## கலித்தொகை

### 310. நம்மை விட்டு போகின்றது நெஞ்சம்!

வெல் புகழ் மன்னவன், விளங்கிய ஒழுக்கத்தால்,
நல் ஆற்றின் உயிர் காத்து, நடுக்கு அற, தான் செய்த
தொல் வினைப்பயன் துய்ப்ப,
துறக்கம் வேட்டு எழுந்தாற்போல்—
பல் கதிர் ஞாயிறு பகல் ஆற்றி மலை சேர,
ஆனாது கலுழ் கொண்ட உலகத்து, மற்று அவன்
ஏனையான் அளிப்பான் போல், இகல் இருள் மதி சீப்ப,
குடை நிழல் ஆண்டாற்கும், ஆளிய வருவாற்கும்
இடை நின்ற காலம் போல், இறுத்தந்த மருள் மாலை!

மாலை நீ—தூ அறத் துறந்தாலை நினைத்தலின், கயம் பூத்த
போது போல் குவிந்த என் எழில் நலம் எள்ளுவாய்;
ஆய்சிறை வண்டு ஆர்ப்ப, சினைப் பூப்போல் தளை விட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்.

மாலை நீ—தையெனக் கோவலர் தனிக் குழல் இசை கேட்டு
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம் பாராட்டுவாய்;
செவ்வழி யாழ் நரம்பு அன்ன கிளவியார் பாராட்டும்
பொய் தீர்ந்த புணர்ச்சியுள் புது நலம் கடிகல்லாய்.

மாலை நீ—தகை மிக்க தாழ் சினைப் பதி சேர்ந்து புள் ஆர்ப்ப
பகை மிக்க நெஞ்சத்தேம் புன்மை பாராட்டுவாய்
தகை மிக்க புணர்ச்சியார், தாழ் கொடி நறு முல்லை
முகை முகம் திறந்தன்ன, முறுவலும் கடிகல்லாய்.

என ஆங்கு –
மாலையும் அலரும் நோனாது, எம்வயின்
'நெஞ்சமும் எஞ்சும்மன் தில்ல—எஞ்சி,
உள்ளாது அமைந்தோர், உள்ளும்,
உள் இல் உள்ளம், உள்உள் உவந்தே.

*– நல்லந்துவனார் கலி 118*

பகைவரோடு போர்த் தொழில் செய்ய வல்ல ஒழுக்கத்தால் வெல்லும் புகழை உடைய மன்னன் நல்ல அறநூல் நெறியால் பல உயிர்களையும் காத்துத் தீவினையால் உண்டாகும் நடுக்கம் உள்ளத்தில் இல்லையாகும்படி தான் செய்த பழ வினையின் பயனை நுகரத் துறக்கத்தை விரும்பிப் போவான். அது போல் கதிர்களை உடைய ஞாயிறு இருளை அழித்து உலகத்துக்குப் பகற்பொழுதை உண்டாக்கிப் பின் மறையும் மலையில் சேரும் பின் கலக்கம் உடைய உலகத்தில் அம் மன்னனுக்குப் பகை மன்னன் வந்து அவ் உலகைக் காப்பான் போன்று, தனக்கு மாறான இருளை மதிபோக்க, அந்தக் குடையால் நிழல் செய்து ஆண்ட மன்னனுக்கும் ஆளவரும் மன்னனுக்கும் நடுநின்ற வருத்தத்தைத் தரும் இடைக் காலம் போன்று வந்துவிட்ட மாலையே! நீ மருண்ட மாலையாய் இருந்தாய்

அதற்குக் காரணம் என்னவென்றால், நமக்கு வலிமை இல்லாது நீங்குமாறு நம்மைத் துறந்தவரை எண்ணுகையில், நீர் நிலைகளில் மலர்ந்த மலர்போல் உன்னைக் கண்டு மனம் குவிந்த என் அழகை உடைய நலத்தை இகழும் நீ, அழகிய இறகையுடைய வண்டுகள் ஆரவாரம் செய்யும்படி, கட்டு அவிழ்ந்த கோட்டுப் பூப் போல் மனம் நெகிழ்ந்த காதலருடன் கூடியிருக்கும் மகளிரின் அழகைப் போக்க மாட்டாய் என்று அதனது மருட்சியைக் கூறினாள்

ஆயரின் தனித்த குழலோசை 'தை' என்ற ஓசை தோன்ற ஒலிக்க, அதைக் கேட்டு வருந்திய நெஞ்சம் உடைய எம் பக்கத்தில் நின்று எயிரைக் கொள்ளாமல் வியப்பாகப் பாராட்டுகிறாய் இத்தகைய நீ, தம் கணவர் பிரிந்த சமயத்துச் செவ்வழி என்ற பண்ணினைக் கொண்ட யாழின் நரம் போசை போன்று வருந்திக் கூறும் சொல்லைப் பெற்ற மகளிர்,

அக் கணவர், வருந்தின எம் பொல் களவிலே புணர்ச்சி இல்லாமல், பாராட்டப்படும் நனவிற் புணர்ச்சியில் பெற்ற புதிய நலத்தைப் போக்கமாட்டாய்

அழக் பொருந்திய தாழ்வான கிளைகளில் தம் இருப்பிடத்தே பெட்டையும் சேவலுமாகக் கூடிப் பறவைகள் ஆரவாரம் செய்ய அவையே அல்லாமல் மற்றப் பகைகளாலும் வருத்தம் உற்ற நெஞ்சத்தை உடையோம் யாம் எம் புன்மையைப் பாராட்டும் நீ நாங்கள் இறந்து விடாதபடி செய்து புதுமையாகப் பாராட்டும் நீ அழகுடைய கணவருடன் கூட்டத்தையுடைய மகளிரின், கொடியை உடைய நறுமண முல்லையினுடைய முகத்தை வண்டுகள் திறந்தாற் போல் ஆடவரால் திறக்கப்படும் முறுவலையும் போக்க மாட்டாய்.

நம்மைப் பிரிந்து உள்ளீடு இல்லாத உள்ளத்தால் நம்மை எண்ணாமல் போன உள்ளே உள்ளே மகிழ்ந்து நினைக்கும் நம் நெஞ்சமும் அம் மாலையயும் ஊரார் கூறும் அலரையும் பொறுக்காது நம்மை விட்டுப் போகின்றது இனி என் செய்வோம்! என வருந்தித் தலைவி தோழியிடம் கூறினாள்

## 311. காலை ஆவது அறியார்

அகன் ஞாலம் விளக்கும் தன் பல் கதிர் வாயாகப்
பகல் நுங்கியது போலப் படு சுடர் கல் சேர,
இகல் மிகு நேமியான் நிறம் போல இருள் இவர,
நிலவுக் காண்பது போல அணி மதி ஏர் தர,
கண் பாயல் பெற்ற போல் கணைக் கால மலர் கூம்ப,
தம் புகழ் கேட்டார் போல் தலை சாய்த்து மரம் துஞ்ச,
முறுவல் கொள்பவை குழல் போலச் சுரும்பு இமிர்ந்து இம்மென,
பறவை தம் பார்ப்பு உள்ள; கறவை தம் பதிவயின்
கன்று அமர் விருப்பொடு மன்று நிறை புகுதர,
மா வதி சேர, மாலை வாள் கொள,
அந்தி அந்தணர் எதிர்கொள, அயர்ந்து
செந் தீச் செவ்அழல் தொடங்க – வந்ததை
வால் இழை மகளிர் உயிர் பொதி அவிழ்க்கும்
காலை ஆவது அறியார்,
மாலை என்மனார், மயங்கியோரே. – *கலி 119*

இந்த அகன்ற உலகத்திற்கு ஒளியூட்டி மகிழ்ந்த கதிரவன், தன் கதிர்களை அவனே குறைத்தவனாய் மேற்றிசை மலையிலே சென்று மறைந்தான் ஆழிப் படையைக் கொண்ட திருமாலின் நிறம்போல எங்கும் இருள் பரவுகின்றது இந்த இருளை ஓட்டிட நிலவு எழுந்து வரவும், கணவரை இனிது கூடிப் பின்னர் துயில் பெற்றவர்களைப் போலத் தாமரை முதலிய பூக்களும் குவியத் தொடங்கின

தம் புகழைப் பிறர் கூறக் கேட்ட சான்றோர், தம் தலை தாழ்த்தியிருப்பதுபோல மரங்களும் துயிலத் தொடங்கின முல்லை மலர்களும் விரிந்து மணம் பரப்பி நின்றன புல்லாங் குழலின் இனிய நாதம் போல வண்டுகள் இசைத்துப் பறந்தன பறவைகள் தங்கள் குஞ்சுகளை எண்ணியஸ்வயாய் மரங்களிலுள்ள தம் கூடுகளை நோக்கிப் பறந்தன. பசுக்கள் தம் கன்றுகளை நினைந்தவையாய் தொழுவங்களை நோக்கி வந்து கொண்டிருந்தன. பிற விலங்குகளும் தத்தம் இடத்தை நோக்கி விரைந்தன அந்தணர்கள் தாம் செய்ய வேண்டிய காரியங்களை முறையாகச் செய்து, அந்திக் காலத்தை வர வேற்றனர் பெண்களும் செந் தீயாலான விளக்குகளை ஏற்றத் தொடங்கினார்கள் இவ்வாறு வந்த மாலைக் காலமானது மகளிரின் உயிரை அவர்களின் உடலில் இருந்தும் பிரிந்து செல்வதுபோல வந்ததே! இதன் கொடுமையை அறியாதாராய் இதை மாலைக் காலம் என்று பெருமையுடன் பேசி மகிழ்கிறார்களே! என்று பிரிவாற்றாத தலைவி தோழியிடம் கூறினாள்

## 312. பகைகெட்டது போல் மாலை ஒளித்தது!

'அருள் தீர்ந்த காட்சியான், அறன் நோக்கான்,
நயம் செய்யான்,
வெருவுள உய்த்தவன் நெஞ்சம் போல், பைபய
இருள் தூர்பு; புலம்பு ஊர, நனை சுடர் கல் சேர—
உரவுத் தகை மபங்கித் தன் இடும்பையால் ஒருவனை
இரப்பவன் நெஞ்சம் போல், புல்லென்று, புறம்மாறிக்

சுரப்பவன் நெஞ்சம் போல், மரம் எல்லாம், இலை கூம்ப—
தோற்றம் சால் செக்கருள் பிறை நுதி எயிறாக,
நால் திசையும் நடுக்குறூஉம் மடங்கல் காலை

கூற்று நக்கது போலும், உட்குவரு கடு மாலை!
மாலை நீ
உள்ளம் கொண்டு அகன்றவர் துணை தாராப் பொழுதின்கண்
வெள்ள மான் நிறம் நோக்கிக் கணை தொடுக்கும்
கொடியான் போல்
அல்லற்பட்டு இருந்தாரை அயர்ப்பிய வந்தாயோ?

மாலை நீ
ஈரம் இல் காதலர் இகந்து, அருளா இடன் நோக்கி
போர்தொலைந்து இருந்தாரைப் பாடு எள்ளி நகுவார் போல்
ஆர் அஞர் உற்றாரை அணங்கிய வந்தாயோ?

மாலை நீ –
கந்து ஆதல் சான்றவர் ஊளை தாராப் பொழுதின்கண்
வெந்தது ஓர் புண்ணின்கண் வேல் கொண்டு நுழைப்பான் போல்
காய்ந்த நோய் உழப்பாரைக் கலக்கிய வந்தாயோ'?

என ஆங்கு

இடன் இன்று அலைத்தரும் இன்னா செய் மாலை
துனி கொள் துயர் தீரக் காதலர் துனைதர–
மெல்லியான் பருவத்து மேல் நின்ற கடும் பகை
ஒல்லென நீக்கி, ஒருவரது காத்து ஆற்றும்
நல் இறை தோன்ற, கெட்டாங்கு
இல்லாகின்றால், இருளகத்து ஒளித்தே. – *கலி 120*

*அருள் இல்லாத அறிவால் அறம் செய்வதை எண்ணாதவனாய்ப், பண்பாட்டை மேற் கொள்ளாதவனாய், எல்லாரும் அஞ்சும்படி தனக்குள்ள வாழ்நாளைப் பயன் அற்றதாகச் செலுத்திய நெஞ்சம் உடையவன் மயக்கம் போன்று, மெல்ல மெல்ல இருளால் உலகம் நிறைகிறது. நிறைய, கணவரைப் பிரிந்தவர்க்குத் தனிமை மிகும்படி கதிரவன் மேற்கு மலையை அடைகிறான் வறுமையால் பிறரிடம் போய் ஒரு பொருளை வேண்டுபவனின் நெஞ்சம் போல், மரம் எல்லாம் பொலி வழிகின்றன பின் அம் மரமெல்லாம், இரப்பாரைக் கண்டு*

இருந்த இடத்தினின்றும் எழுந்திருந்து போய் மறைபவனின் நெஞ்சு குவிவது போன்று இலைகள் யாவும் குவிகின்றன இங்ஙனம் நிகழ வரு கின்ற மாலையே, நீ நான்கு திசைகளிலும் நடுக்கம் உண்டாக ஊழியின் முடிவுக் காலத்தில் கூற்றுவன், செக்கர் வானில் தோன்றிய முனையையுடைய பிறையைத் தனக்குப் பல்லாகக் கொண்டு, பல உயிர்களையும் ஒருசேரக் கொள்வதற்கு நகைத்தாற் போல் அஞ்சத் தக்க கடுமையான மாலையாய் விளங்குகிறாய்

இத்தகைய கொடிய நீ, என் நெஞ்சத்தைத் தம்மிடத்தே கொண்டு நீங்கிய தலைவர் எனக்குத் துணையாகாத காலத்தில், வெள்ளத்தில் சிக்கிக் கரையேற மாட்டாத மானின் மார்பைப் பார்த்து அம்பை எய்யும் கொடியவனைப் போல் துன்பத்தில் ஆழ்ந்திருந்த எனக்கு மேலும் துன்பத்தை உண்டாக்க வந்தாயோ?

இத்தகைய கொடிய நீ, அருளற்ற காதலர் என்னை விட்டு நீங்கி அருளாமல் இருக்கும் காலத்தை நோக்கிப் போரில் தோற்றிருந்தவர்களை அவர்கள் அடைந்த தோல்வியை இகழ்ந்து சிரிப்பாரைப் போல், பொறுத்துக் கொள்ள இயலாது வருத்தம் அடைந்த என்னை வருத்துதற்கு வந்தாயோ?

இத்தகைய கொடிய நீ, எனக்குப் பற்றுக் கோடான தலைவர் என் வருத்தத்தைப் போக்காத பொழுதில், முன்னமே வெந்துள்ள புண்ணில் மேலும் ஒரு வேலைக் கொண்டு சொருகுவாரைப் போன்று உடல் வாடுதற்குக் காரணமான காம நோயால் அழுந்தும் என்னை நினைத்து, இருக்கும் அறிவையும் கலங்கச் செய்ய நினைத்தாயோ?

என அவள் கூறும்படியாய்

ஆற்றுவதற்கு இடம் இல்லையாக வருத்தும் பொல்லாங்கே செய்யும் மாலைக் காலத்தில் வெறுப்புக் கொண்ட வருத்தம் நீங்கும்படி காதலர் விரைந்து வந்தனர், ஆதலால் அம் மாலை இரவுக் காலத்தில் சென்று ஒளித்தது நான்கு படையால் இளைத்த மன்னன், அவன் இளைத்த சமயத்தில் அவன் மீது வந்த பகையானது, அந்தப் பகையை விரைவாகப் போக்கி நீங்காது நின்று காத்து நடத்த வல்ல மன்னன் வந்து தோன்றக் கெடும் அது போல் அம்மாலை இல்லாது போயிற்று

## 89. விரைய வந்து மணந்துகொள்!

ஒண் சுடர் சேர உலகு ஊரும் தகையது,
தெண் கடல் அழுவத்துத் திரை நீக்கா எழுதரூஉம்,
தண் கதிர் மதியத்து அணி நிலா நிறைத்தர,
புள்ளினம் இரை மாந்திப் புகல் சேர ஒலி ஆன்று,
வள் இதழ் கூம்பிய மணி மருள் இருங் கழி
பள்ளி புக்கது போலும் பரப்பு நீர்த் தண் சேர்ப்ப!

தாங்கருங் காமத்தைத் தணந்து நீ புறம் மாற,
தூங்கு நீர் இமிழ் திரை துணையாகி ஒலிக்குமே –
உறையொடு வைகிய போது போல், ஒய்யென
நிறை ஆனாது இழிதரூஉம், நீர் நீந்து கண்ணாட்கு.

வாராய் நீ புறம் மாற, வருந்திய மேனியாட்கு –
ஆர் இருள் துணையாகி அசைவளி அலைக்குமே–
கமழ் கண் தாது உதிர்ந்து உக, ஊழ் உற்ற கோடல் வீ
இதழ் சோரும் குலை போல, இறை நீவு வளையாட்கு.

இன் துணை நீ நீப்ப, இரவினுள் துணையாகி

தன் துணைப் பிதிந்து அயாஅம் தனிக் குருகு உசாவுமே –
ஒண் சுடர் ஞாயிற்று விளக்கத்தான், ஒளி சாம்பும்
நண்பகல் மதியம் போல் நலம் சாய்ந்த அணியாட்கு.
என ஆங்கு

எறி திரை தந்திட இழிந்த மீன் இன் துறை
மறி திரை வருந்தாமல் கொண்டாங்கு, நெறி தாழ்ந்து,
சாயினள் வருந்தியாள் இடும்பை
பாய் பரிக் கடுந் திண் தேர் களையினோ இடனே.

*– கலி 121*

*ஒளியுடைய ஞாயிறு அத்தகிரியைச் சேர்வதாலும், உலகம் முழுவதும் பரவும் தன்மையுடையதாகித் தெளிந்த கடற் பரப்பில் அலையை நீக்கித் தோன்றும் குளிர்ந்த கதிரையுடைய மதியத்தின் நிலவு ஒளி மிகுதலாலும், பறவைகள் இரையைத் தின்று தாம் தங்கும் கூடுகளைச் சேர்தலால் ஆரவாரம் அடங்கப் பெற்று வளமான இதழ்களும் குவிந்த*

நீலமணி போன்று விளங்கும் உப்பங்கழி உறங்கும் தன் மையைப் போன்ற கடலை உடைய குளிர்ந்த சேர்ப்பனே!

நீ ஒருவழித் தணந்து பிரிந்து உன் ஊரில் தங்கி முன்பு உன் நெஞ்சில் தாங்குவதற்கு அரிதாய, காமத்தை உன்னிடத் தினின்று கைவிட்டனை அதனால் நீர்த்துளியுடன் பொருந்திய பூப் போல நிறுத்திய அளவில் அமையாது, விரைய வாழும் நீரில் கிடந்து நீந்தும் கண்ணையுடைய அவளுக்கு அசையும் கடலினின்று எழுந்து ஒலிக்கும் அலைதான் துணையாய் நின்று ஆரவாரம் செய்யும்

நீ இங்கு வாராமல் நின்றனை அதனால் உன் வீட்டகத் தில் இருந்து வருந்திய மேனியை உடையவளுக்கு நீ கொண்டிருந்த வேட்கை உன்னிடமிருந்து நீங்குதலால், மணம் வீசும் தாது உதிர்ந்து சிந்தும்படி விளங்கும் இதழ்கள் விழும் குலையை யுற்ற காந்தள் மலரைப் போல் முன் கையினின்று கழலும் வளையை உடையவளுக்கு இரவுக் காலத்தில் அசைந்து வரும் காற்றுத் தான் துணையாகி நின்று வருந்தும்.

இனிய துணையான நீ இவளைக் கை விட்டு உன் வீட்டில் இருப்பதால் சுடரையுடைய ஞாயிற்றின் மிக்க ஒளி யால் தன் ஒளி கெடும் உச்சிக் காலத்துத் திங்களைப் போல் நன்மை கெட்ட முகத்தை உடையவளுக்கு இரவுக் கால்த்தில் தன் சேவலைப் பிரிந்து வருந்தும் தனியான குருகு தான் துணையாய் உரையாடும்

இனிய நீர்த்துறையில் வீசும் அலை ஏறக் கொண்டு வந்து போடுவதால் மணல் மேட்டிலே கிடந்த மீனை, மீளும் அந்த அலை வருந்தாதபடி கைக் கொண்டு போன தன்மை போல், நீ முன்னம் நடத்தின நெறி தாழ்வதால் மெலிந்து வருந்திய வளின் வருத்தத்தைப் பாய்ந்து செல்லும் குதிரை பூட்டப் பட்ட திண்ணிய தேர் வெளியாக வரைவோட வந்து களையு மானால் நல்ல காலம் எனத் தோழி தலைவனை மணந்து கொள்ளும்படி வேண்டினாள்

## 313. வருத்தத்தை நினையாது போனான்!

'கோதை ஆயமும் அன்னையும் அறிவுற ,
போது எழில் உண்கண் புகழ் நலன் இழப்ப,

காதல் செய்து அருளாது துறந்தார்மாட்டு, ஏது இன்றி,
சிறிய துனித்தனை; துன்னா செய்து அமர்ந்தனை;
பலவும் நூறு அடுக்கினை; இனைபு ஏங்கி அழுதனை;
அலவலை உடையை' என்றி தோழீ!

கேள், இனி:
மாண் எழில் மாதர் மகளிரோடு அமைந்து, அவன்
காணும் பண்பு இலன் ஆதல் அறிவேன்மன், அறியினும்,
பேணி அவன் சிறிது அளித்தக்கால், என்
நாண் இல் நெஞ்சம் நெகிழ்தலும் காண்பல்.

இருள்உறழ் இருங்கூந்தல் மகளிரோடு அமைந்து, அவன்
தெருளும் பண்பு இலன் ஆதல் அறிவேன்மன்; அறியினும்,
அருளி அவன் சிறிது அளித்தக்கால், என்
மருளி நெஞ்சம் மகிழ்தலும் காண்பல்.

ஒள் இழை மாதர் மகளிரோடு அமைந்து, அவன்
உள்ளும் பண்பு இலன் ஆதல் அறிவேன்மன், அறியினும்
புல்லி அவன் சிறிது அளித்தக்கால், என்
அல்லல் நெஞ்சம் மடங்கலும் காண்பல்.
அதனால்

யாம நடு நாள் துயில் கொண்டு ஒளித்த
காம நோயின் கழீ இய நெஞ்சம்
தான் அவர் பால் பட்டதாயின்
நாம் உயிர் வாழ்தலோ நகை நனி உடைத்தே. – *கலி 122*

*மாலை போல் ஒழுங்காக நின்று விளையாடும் தோழியரும் தாயரும் அறியுமாறு பூவின் அழகை உடைய கண்கள் நலத்தை இழக்கும்படி முன் நம்மிடத்தில் காதலைக் கொண்டிருந்து, பின்பு நமக்கு அருள் இல்லாது ஒரு காரணம் இன்றி நம்மைத் துறந்தார் என அவரிடம் முன்பு சிறிதாய் வெறுப்புக் கொண்டாய். பின்பு அவர் நமக்குப் பொருத்தமற்ற குறைகளைச் செய்ததால் அவற்றைப் பல நூறாய் அடுக்கிக் கூறினை. அதுவுமே அன்றி வருந்தி ஏங்கி அழவும் செய்தாய்! ஆதலால் நீ மனம் சுழலுதலைப் பெற்றுள்ளாய் என்று சொல்கின்றாய் தோழியே! என் அலமரலைக் கேட்பாயாக!*

*சிறந்த அழகையும் காதலையும் உடைய தொன்முறை மனைவியருடனே அவன் பொருந்தி நம் வருத்தத்தை நோக்கும் குணம் இல்லாதவனாக ஆயினான். இதனை நன்றாய் நான் அறிவேன். அறிந்திருப்பினும் அவன் வந்து என்னைப் பேணிச் சிறிது அன்பு காட்ட அவ்வளவில் நாணம் இல்லாத மனம் என் வயமின்றி அவனிடத்தில் நெகிழ்ந்து செல்வதையும் காண்கிறேன்.*

*இருளுடன் மாறுபடும் கரிய கூந்தலையுடைய தொன் முறை மனைவியருடன் அவன் பொருந்தி நமது வருத்தத்தை அறிந்து தெளியும் பண்பு இல்லாதவன் ஆயினான். இதை நான் அறிவேன். அறிந்திருப்பினும் ஒருகால் அவன் அன்புடன் சிறிது அருள்வானாயின் என் மயக்கமுடைய நெஞ்சம் அதற்கு மகிழும். அதையும் காண்கிறேன்.*

*ஒளியுடைய அணியையும் காதலையும் உடைய நெஞ்சம் வருத்தம் நீங்குதலும் காண்கிறேன்.*

*அதனால், காம நோயால் மிக்க வருந்தும் நெஞ்சம் நள்ளிரவில் நான் கொள்ளும் உறக்கத்தை வாங்கிக் கொண்டு அவரிடம் சென்று விட்டதாயின், இனி நாம் இருந்து உயிர் வாழ்வதோ மற்றவர் சிரித்தற்கு உரியது என்று தலைவி தோழி தலைவனிடம் வரைவு கடாவுதற்குச் சொன்னாள்.*

## 314. இருங்கழி ஓதம் போல் தடுமாறினேன்!

**கருங் கோட்டு நறும் புன்னை மலர் சினை மிசைதொறும்**
**சுரும்பு ஆர்க்கும் குரலினோடு, இருந் தும்பி இயைபு ஊத,**
**ஒருங்குடன் இம்மென இமிர்தலின், பாடலோடு**
**அரும்பொருள் மரபின் மால்யாழ் கேளாக் கிடந்தான்போல்**
**பெருங்கடல் துயில் கொள்ளும் வண்டுஇமிர் நறுங் கானல்**
**காணாமை இருள் பரப்பி, கையற்ற கங்குலான்,**
**மாணாநோய் செய்தான்கண் சென்றாய்; மற்று அவனை நீ**
**காணவும் பெற்றாயோ? காணாயோ? மட நெஞ்சே!**

**கொல் ஏற்றுச் சுறவினம் கடி கொண்ட மருள் மாலை**
**அல்லல்நோய் செய்தான்கண் சென்றாய்; மற்று அவனை நீ**
**புல்லவும் பெற்றாயோ? புல்லாயோ? மட நெஞ்சே!**

வெறி கொண்ட புள்ளினம் வதி சேரும் பொழுதினான்
செறிவளை நெகிழ்த்தான்கண் சென்றாய்;மற்று அவனை நீ
அறியவும் பெற்றாயோ? அறியாயோ? மட நெஞ்சே!
என ஆங்கு –
எல்லையும் இரவும் துயில் துறந்து, பல் ஊழ்
அரும் படர் அவல நோய் செய்தான்கண் பெறல் நசைஇ,
இருங் கழி ஓதம் போல் தடுமாறி,
வருந்தினை–அளிய என் மடம் கெழு நெஞ்சே!

– *கலி 123*

*கரிய கொம்புடைய புன்னைமரத்தின் சிறிய கிளையில், மலர்தோறும் மலர்கின்ற நேரத்தைப் பார்த்து, நுகர்வதற்குச் சுரும்புக் கூட்டம் ஆரவாரிக்கும் ஓசையுடன், கரிய தும்பி களும் ஒன்று கூடி ஊத, உண்டான குரலும் சேர, 'இம்ம்' என்ற ஓசைபட ஒலித்ததால் அவற்றைக் கேட்டு யாவரா லும் பெறுவதற்கு அரிய திருமால், பாட்டுடனே யாழையும் கேட்டுப் பள்ளி கொண்டவனைப் போல், பெரிய கடலும் ஒலியடங்கி உறக்கம் கொள்ளும் வண்டு ஒலிக்கின்ற கானலில்-*

*அறியாமை உடைய நெஞ்சே! கானலில் பொருள்களைக் கண்கள் காணாதவண்ணம் அருளைத் தான் பரப்பி உயிர்கள் எல்லாம் செயல் அறுவதற்குக் காரணமான இரவில் ஒரு மருந்தினாலும் போக்கப்படாத காம நோயை உண்டாக்கிய வனிடத்தில் சென்றாய்! சென்ற நீ, பின், அவனைக் கண்ணால் காணல் என்ற அளவு தான் பெற்றாயோ, அவனைக் காணா திருந்தாயோ? சொல் என்றாள்*

*பேதை நெஞ்சமே! கடற்கரைச் சோலையில் கொல்லும் ஏறான சுறா மீன் கூட்டம், செல்பவரைச் செல்லாது தடுக்கும் மயக்கத்தை உடைய மாலைக் காலத்தே வருத்தத்தைச் செய்யும் காம நோயை உண்டாக்கியவனிடம் போனாய் அங்ஙனம் போன நீ அவனைத் தழுவ என்னும் அளவுதான் பெற்றாயோ, தழுவாமல் இருந்தாயோ? சொல் என்றாள்*

*"அறியாத நெஞ்சே! அக் கடற்கரைச் சோலையில் ஒழுங்கு கொண்ட பறவைக் கூட்டம் தாம் தங்கும் இடத்தில் போய்ச் சேர்கின்ற மாலைக் காலம் இக் காலத்தில் முன்பு*

செறிந்திருந்த வளையல் கழலும்படி பண்ணியவனிடத்தில் சென்றாய். அங்ஙனம் சென்ற நீ அவன் மனத்தினை அறிய என்னும் அளவு பெற்றாயோ? அதுதானும் அறியாதிருந் தாயோ? கூறுக" என்றாள்.

அந்த நெஞ்சம் கூறவில்லை ஆதலால் பின்னும் "அறி யாமை கொண்ட இரங்கத்தக்க என் மனமே! பொறுப்பதற்கு அரிய வருத்தும் காம நோயைச் செய்தவனிடத்தில் பகலும் இரவும் உறங்குதலை விட்டுக் கரிய கழியில் ஓதம் போவது வருவதாய்த் தடுமாறும் தன்மையைப் போன்று, நீயும் பல முறையாகப் போயும் வந்தும் தடுமாறி, அவனைப் பெறுதலை விரும்பி முடிவில் வருந்தினாய். இது வன்றோ, நீ பெற்றது" என நெஞ்சை நோக்கி வருந்திச் சொன்னாள் தலைவி.

## 315. விரைந்து வருக!

ஞாலம் மூன்று அடித் தாய முதல்வற்கு முது முறைப்
பால் அன்ன மேனியான் அணி பெறத் தைஇய
நீல நீர் உடை போல, தகை பெற்ற வெண் திரை
வால் எக்கர்வாய் சூழும் வயங்கு நீர்த் தண் சேர்ப்ப!

ஊர் அலர் எடுத்து அரற்ற, உள்ளாய், நீ துறத்தலின்
கூரும் தன் எவ்வ நோய் என்னையும், மறைத்தாள்மன்—
காரிகை பெற்ற தன் கவின் வாடக் கலுழ்பு, ஆங்கே
பீர் அலர் அணிகொண்ட பிறை நுதல் அல்லாக்கால்.

இணைபு இவ் ஊர் அலர் தூற்ற, எய்யாய், நீ துறத்தலின்
புணை இல்லா எவ்வ நோய் என்னையும் மறைத்தாள்மன்—
துணையாருள் தகை பெற்ற தொல் நலம் இழந்து, இனி
அணிவனப்பு இழந்ததன் அணைமென் தோள்அல்லாக்கால்

இன்று இவ் ஊர் அலர் தூற்ற, எய்யா, நீ துறத்தரின்
நின்ற தன் எவ்வ நோய் என்னையும் மறைத்தாள்மன்—
வென்ற வேல் நுதி ஏய்க்கும் விறன் நலன் இழந்து, இனி
நின்றுநீர் உகக்கலுழும் நெடும் பெருங் கண் அல்லாக்கால்
அதனால்,
பிரிவு இல்லாய் போல, நீ தெய்வத்தின் தெளித்தக்கால்
அரிது என்னாள், துணிந்தவள் ஆய் நலம் பெயர்தர

**புரி உளைக் கலிமான் தேர் கடவுபு –**
**விரி தண் தார் வியல் மார்ப! – விரைக நின் செலவே.**

*– கலி 124*

*மூன்று உலகங்களையும் தன் திருவடியால் அளந்தவன் திருமால். அவன் எப் பொருளுக்கும் மூலமுதலாய் உள்ளவன் அவனுக்கு மூத்தவனான பலராமன் அழகுபெற உடுத்தது நீலநிற ஆடை. அதை ஒத்த அழகையுடைய வெண்மை யான அலையையுடைய கடலானது வெண்மையுடைய இடு மணலிடத்து வந்து சூழ்ந்து விளங்கும் நீரையுடைய குளிர்ந்த சேர்ப்பனே!*

*இம் மங்கை, பெற்ற தன் அழகு கெடுமாறு மனம் கலங்குத லால் அப்போதே பீர்க்கம் பூவின் அழகைத் தன்னிடத்தே கொண்ட வளர்பிறை நெற்றியல்லாத பிற இடத்து, இவ் வூரில் உள்ளவர் அலரை உயர்த்திக் கூறும்படி நீ இவளைக் கை விட்டனை அதனால் பெருகும் தன் வருத்தத்தை யுடைய காம நோயை எனக்கும் தெரியாது மறைத்து விட்டாள் ஆனால் பெற்றது என்ன? இவளது நெற்றிதான் புலப் படுத்திவிட்டதே!*

*தோழியர் தோள்களில் அழகு பெற்ற இயற்கை நலத்தை யும் இப்போது இழந்து, நீ இவளுக்கு அணிதலால் பெற்ற செயற்கை அழகையும் இழந்த தன் அணை போன்ற தோள் அல்லாத இடத்து, ஊரவர் அலர் தூற்றும்படி இவள் வருந்தும் வருத்தத்தை நீ அறியாய் நீ கைவிடுதலால் உண்டான தனக்கு நிகர் இல்லாத வருத்தத்தை உடைய காம நோயை எனக்கும் தெரியாமல் மறைத்து விட்டாள் ஆயினும் என்? இவள் தோள் தான் புலப்படுத்திவிட்டதே!*

*வென்ற வேலின் முனையைப் போன்ற வெற்றியுடைய நலத்தை இப்பொழுது இழந்து நீர் சொரியும்படி அழுத நெடிய பெரிய கண் அல்லாத இடத்து, இன்று இவ்வூரில் உள்ளார் பழி கூறும்படி இவள் வருத்தத்தை அறியாமல் துறந்தாய் அதனால் தன்னிடம் உண்டான துன்ப நோயை எனக்கும் தெரியாமல் மறைத்தாள் ஆயினும் என்! இவள் கண் தான் புலப்படுத்தி விட்டதே!*

மலர்ந்த குளிர் மாலையைக் கொண்ட அகன்ற மார்பனே! அந்த வருத்தத்தால் பிரிவில்லாதவரைப் போல் நீ இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்பு தெய்வத்தை முன்னிட்டுப் பிரியேன் என்று தெளிவித்த அந்தப் பிரிவின்மை அரியது என எண்ணாதவளாக அதனை உண்மை என்று துணிந்தாள் இவள். இத் தகையவளது அழிந்த அழகு முன் போல் நன்றாகும்படி என் நெஞ்சில் விரும்பிக் குதிரை பூட்டப் பட்ட தேரைச் செலுத்தி எம் மனையிடத்துச் செல்லும் செலவை விரைவாய் மேற் கொள்வாயாக என்று தலைவியை மணந்து கொள்ளும்படி தோழி தலைவனை வேண்டினாள்.

## 316. பசலை நீங்கிட மணப்பாயாக

'கண்டவர் இல் என', உலகத்துள் உணராதார்,
தங்காது தகைவு இன்றித் தாம் செய்யும் வினைகளுள்,
நெஞ்சு அறிந்த கொடியவை மறைப்பினும், 'அறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரி இல்லைஆகலின்'
வண் பரி நவின்ற வய மான் செல்வ!
நன்கு அதை அறியினும், நயன் இல்லா நாட்டத்தால்
அன்பு இலை என வந்து கழறுவல்; ஐய! கேள்:

மகிழ் செய் தேமொழித் தொய்யில் சூழ் இள முலை
முகிழ் செய முள்கிய தொடர்பு, அவள் உண்கண்
அவிழ் பனி உறைப்பவும், நல்காது விடுவாய்!
இமிழ் திரைக் கொண்க! கொடியைகாண் நீ.

இலங்கு ஏர் எல் வளை ஏர் தழை தைஇ
நலம் செல நல்கிய தொடர்பு, அவள் சாஅய்ப்
புலந்து அழ, புல்லாது விடுவாய்!
இலங்கு நீர்ச் சேர்ப்ப! கொடியைகாண் நீ.

இன் மணிச் சிலம்பின் சில் மொழி ஐம்பால்
பின்னொடு கெழீஇய தட அரவு அல்குல்
நுண் வரி வாட, வாராது விடுவாய்!
தண்ணந் துறைவ! தகாஅய்காண் நீ.
என ஆங்கு
அனையள் என்று, அளிமதி, பெரும! நின் இன்று

**இறை வரை நில்லா வளையள் இவட்கு, இனிப்**
**பிறை ஏர் சுடர் நுதற் பசலை**
**மறையச் செல்லும், நீ மணந்தனை விடினே.** – *கலி 125*

*அறியாதவர்கள் தம் மனம் இது செய்யக் கூடாது என்று கைவிடாது, வேறு விலக்குபவரும் இல்லாமல் உலகத்தில் பார்ப்பவர் இல்லை என எண்ணிச் தீவினைகள் செய்வர். அவற்றை அவர் பிறர் அறியாமல் மறைப்பர், அவ்வாறு செய்யினும் தாம் செய்ததை அறிந்துள்ளவர் அவர்தம் மனமே அல்லாது வேறு நெருங்கிய சான்றில்லை. ஆகையால், வள முடைய ஒட்டத்தில் பயிற்சியுடைய வலிய குதிரையை உடையவனே! உன்னை நான் இடித்துக் கூற வேண்டிய தில்லை. என்றாலும் உன்னுடன் யான் கொண்ட நன்மை யற்ற ஆராய்ச்சியால் நீ அன்புடையவனாய் இல்லை என்று என்னிடம் வந்து சொல்வேன்; ஐயனே கேட்பாய்.*

*மகிழ்வை உண்டாக்குகின்ற இனிமையுடைய மொழியை உடையவளின் தொய்யிற் கோலம் எழுதின இளைய முலை தோன்றிடாத இளமைப் பருவத்தில் நீ கொண்ட தொடர்பை, அவளிடம் கொண்டாய். நின் பிரிவைப் பொறுக்க இயலாது அவள் கண்ணீர் சிந்தவும் அதைக் கண்டும் அருளாமல் கைவிடுபவனே! ஒலிக்கும் அலையையுடைய நெய்தல் நிலத் தலைவனே! நீமிகவும் கொடியவன்.*

*ஒலி இசைக்கும் வளையலை உடையவளின் அழகிய தழையை எடுத்து விளங்கும் இளமைப் பருவத்தில் எழுச்சி யுடைய நலம் மேலும் மேலும் வளருமாறு நீ கொண்ட தொடர்ச்சியை, அவளது மேனி வாட, நின்னை வெறுத்து அழவும் அதைக் கண்டும் பொருந்தாமல் கைவிடுபவனே! விளங்கும் நீரையுடைய துறைவனே! நீ மிகவும் கொடியவன்.*

*இனிய மணியை உடைய சிலம்பணிந்தவள், இன் மொழி உடையவள். அவளது மயிரைப் பின்னி முடிக்கும் இளமைப் பருவத்தில் வந்த பொருந்தியது நின் உறவு. அது தொடர் கிறது அங்ஙனமாகவும், அவளது அல்குலில் உண்டான நுட்பமான வரி வாடும்படி அவளிடம் வாராமல் அவளைக் கைவிடுபனே! குளிர்ந்த நீர்த் துறையை உடையவனே! இனி நீ தகுதியுடையவன் ஆகாய்!*

*பெருமை உடையவனே! நட்புடன் கூறிய அத் தன்மையை உடையவள் என எண்ணிப் பார்த்து அருள்வாய். அருளி மணந்து அவள் தோளை மணந்தாய் என்றால் உன்னை அல்லாமல், முன் கையில் நில்லாது கழன்ற வளையையுடைய இவளுக்கு இனிப் பிறைத் திங்களைப் போன்ற நெற்றியில் தோன்றிய பசலை ஒருகாலமும் தோன்றாமல் மறையுமாறு போய் விடும் என்று தோழி தலைவனிடம் தலைவியை மணந்து கொள்ளுமாறு தூண்டினாள்.*

## 317. குதிரை பூண்க நின் தேர்

பொன் மலை சுடர் சேர, புலம்பிய இடன் நோக்கி,
தன் மலைந்து உலகு ஏத்த, தகை மதி ஏர்தர
செக்கர் கொள் பொழுதினான் ஒலி நீவி, இன நாரை
முக்கோல் கொள் அந்தணர் முது மொழி நினைவார்போல்,
எக்கர் மேல் இறை கொள்ளும், இலங்குநீர்த் தண் சேர்ப்ப!
அணிச்சிறை இனக் குருகு ஒலிக்குங்கால், நின் திண் தேர்
மணிக் குரல் என இவள் மதிக்கும்மன்; மதித்தாங்கே,
உள் ஆன்ற ஒலியவாய் இருப்பக் கண்டு, அவை கானற்
புள் என உணர்ந்து, பின் புலம்பு கொண்டு, இனையுமே.

நீர் நீவிக் கஞன்ற பூக் கமழுங்கால், நின் மார்பில்
தார் நாற்றம் என இவள் மதிக்கும்மன்; மதித்தாங்கே,
அலர் பதத்து அசைவளி வந்து ஒல்க, கழிப் பூத்த
மலர் என உணர்ந்து, பின் மம்மர் கொண்டு, இனையுமே.

நீள் நகர் நிறை ஆற்றாள், நினையுநள் வதிந்தக்கால்,
தோள் மேலாய் என நின்னை மதிக்கும்மன்; மதித்தாங்கே,
நனவு எனப் புல்லுங்கால் காணாளாய், கண்டது
கனவு என உணர்ந்து, பின் கையற்று, கலங்குமே.
என ஆங்கு
பல நினைந்து, இனையும் பைதல் நெஞ்சின்,
அலமரல் நோயுள் உழக்கும் என் தோழி
மதி மருள் வாள் முகம் விளங்க,
புது நலம் ஏர்தர, பூண்க, நின் தேரே! — *கலி 126*

பொன் பொருந்திய படுகதிர் மலையில் ஞாயிறு சென்று அடைந்து மறைய, கதிரவன் இல்லாததால் வருந்தும் உலகை நோக்கி அவ் உலகம் கொண்டாடுமாறு வெண்மதி தோன்ற, சிவந்த வானத்தைப் பெற்ற மாலைக் காலத்தில், முக்கோலைக் கையில் கொண்ட அந்தணர் முது மொழியை நினைப்ப வரைப் போல் கூட்டமாக நாரைகள் ஆரவாரத்தைக் கைவிட்டு மணல் மேட்டில் தங்குமாறு விளங்கும் நீர்த் துறையை உடைய தலைவனே!

அழகு பொருந்திய சிறகை உடைய குருகுப் பறவைகள் இரவில் ஒருகால் ஒலிக்குமிடத்து அதனை நின் திண்மை யான தேரினது மணியோசை என இவள் எண்ணுவாள். எண்ணித் துணிந்த அப்போதே அப் பறவைகள் உள்ளே அடங்கிய ஒலியை உடையனவாய் ஆரவாரம் செய்யும். அதனை மனத்தால் தேரின் மணிஒலி அன்று என்று உணர்ந்து பின்பு அந்த ஒலியைச் சோலையில் உள்ள பறவைகளின் ஒலி என்று தெளிந்து தனிமை கொண்டு வருந்துவாள்.

நீரினின்று உயர்ந்து எழுந்த நெருங்கிய மலர் மணம் கமழுமிடத்து அதை நின் மார்பில் உள்ள மாலையினது மணம் என்று இவள் துணிவாள். அங்ஙனம் முடிவு செய்த அப்போதே அம் மலர்கள் மலரும் நிலையில் அவற்றைக் காற்று அசைத்துத் தன் மீது அது வந்து படும். பட, அது கழியில் பூத்த மலரினது நறுமணம் என்று உணர்ந்து பின்னர் மயக்கம் கொண்டு இவள் வருந்துவாள்.

உயர்ந்த இல்லத்தில் மனத்தை நிறுத்த மாட்டாதவளாய் உன்னை நினைத்துத் தளர்ச்சியால் சிறிது உறங்கியவிடத்துத் தன் தோள் மீது நீ கிடப்பதாய் எண்ணுவாள். எண்ணிய அப்போதே நின் உடல் என்று எண்ணித் தழுவுமிடத்து, நின் வடிவைக் காணாமல் 'தான் கண்டது கனவு' என்று அறிந்து செயலற்றுக் கலங்குவாள்.

பலவற்றையும் நினைத்து வருந்தும் நோயையுடைய மனத் தால் சுழலும் காம நோயில் ஆழ்வாள். இத்தகைய என் தோழி யுடைய திங்கள் போன்ற ஒளியுடைய முகம் விளங்குமாறு புதிய நலம் உண்டாதலைச் செய்ய நின் தேர் குதிரையைப் பூணுவ தாகுக, என்று தோழி தலைவனிடம் வரைவு கடாயினாள்.

## 318. காதலியை மணப்பாய்

தெரி இணர் ஞாழலும், தேம் கமழ் புன்னையும்,
புரி அவிழ் பூவின கைதையும், செருந்தியும்
வரி ஞிமிறு இமிர்ந்து ஆர்ப்ப, இருந் தும்பி இயைபு ஊத—
செரு மிகு நேமியான் தார் போல, பெருங் கடல்
வரி மணல்வாய் சூழும் வயங்கு நீர்த் தண் சேர்ப்ப!

கொடுங் கழி வளைஇய குன்று போல், வால் எக்கர்,
நடுங்கு நோய் தீர, நின் குறி வாய்த்தாள் என்பதோ—
கடும் பனி அறல் இகு கயல் ஏர் கண் பனி மல்க,
இடும்பையோடு இனைபு ஏங்க, இவளை நீ துறந்ததை?

குறிஇன்றிப் பல்நாள்,நின் கடும்திண் தேர் வரு பதம் கண்டு
எறி திரை இமிழ் கானல், எதிர்கொண்டாள் என்பதோ—
அறிவு அஞர் உழந்து ஏங்கி, ஆய் நலம் வறிதாக
செறி வளை தோள் ஊர, இவளை நீ துறந்ததை?

காண் வர இயன்ற இக் கவின் பெறு பனித் துறை
யாமத்து வந்து, நின் குறி வாய்த்தாள் என்பதோ—
வேய்நலம் இழந்ததோள் விளங்குஇழை பொறை ஆற்றாள்
வாள் நுதல் பசப்பு ஊர, இவளை நீ துறந்ததை?
அதனால்
இறை வளை நெகிழ்ந்த எவ்வ நோய் இவள் தீர,
'உரவுக் கதிர் தெறும்' என ஓங்கு திரை விரைபு, தன்
கரை அமல் அடும்பு அளித்தா அங்கு
உரவு நீர்ச் சேர்ப்ப! – அருளினை அளிமே.

— *கலி 127*

*போரில் சிறந்து விளங்கும் ஆழிப்படையை உடைய திருமாலின் தோளில் சேர்ந்த மாலைபோல் பெரிய கடற் கரையில், அறலையுடைய மணலில், விளங்கும் கொத்தை யுடைய ஞாழற்பூவும், புன்னைப் பூவும், கட்டவிழ்ந்த தாழம் பூவும், மொட்டவிழ்ந்த மலர்களை உடைய செருந்திப் பூவும், வரிகளையுடைய மிஞிறு சிறிதே ஒலித்து மிகவும் ஆரவாரம் செய்யக், கருநிறத் தும்பிகள் தமக்குள் ஒன்று கூடித் தேனை அருந்தச் சூழ்ந்து கிடக்கும் நீர்த்துறையை உடையவனே!.*

முன் மிக்குவந்த நீர் பின்பு வற்றுதலால் குறைவாய் விழுகின்ற கயல் போன்ற கண் நீர் அற்றுக் கசிவாய்க் குறைந்து நிற்க, வருத்தத்துடன் அழுமாறு நீ இவளைத் துறந்து, நின் நெஞ்சம் நடுங்குதற்குக் காரணமான காம நோய் தீரும்படி சுறா மீன் முதலியவற்றை உடைமையால் கொடிய கழிகள் சூழ்ந்த மலைபோல் உயர்ந்த வெண்மையான மணல் மேட்டிடத்து நீ செய்த குறியிடத்துத் தவறாமல் வந்தாள் என்பதாலோ!

தனது அறிவு வருத்தத்தில் ஆழ்ந்து அழுது ஆராய்ந்த நலம் சிறிது ஆதலால், முன்பு வளை தோளிலிருந்து கழன்று விழ இவளைத் துறந்து, சீர் அலை ஒலிக்கின்ற கடற்கரையில் உன் தேர் இன்ன காலத்தில் வரும் என்ற குறிப்பு இன்றிப் பல நாளும் வரும் காலத்தை மனத்தால் கருதி எதிர் கொண்டாள் என்பதோ!

பசிய மூங்கில் தன் நலம் கெடுவதற்குக் காரணமான தோள்களில் கிடந்து விளங்கும் அணிகளை உடைய தோள், அதைப் பொறுக்க மாட்டாமல் மெலிவடைந்து நெற்றி பசலை கொள்ளும்படி துறந்தது பார்த்தவர்க்குக் காட்சி வரும்படியாய்ச் செய்த அழகைத் தான் பெறும் இந்தப் பனித் துறையில் நள்ளிரவில் நீ வந்து செய்த நின் வருகை உணர்த்திய குறியில் தப்பாமல் வந்தாள் என்பதாலோ!

வன்மை பொருந்திய நீரையுடைய சேர்ப்பனே, உனக்குச் செய்ந்நன்றிக் கேடு உண்டு ஆதலால் அது நீங்க ஞாயிறு சுடும் என்று எண்ணி ஓங்கும் அலை தன் கரையில் நெருங்கி யுள்ள அடும்புக் கொடியை விரைந்து தந்தாற் போல் இவளுடைய முன் கையில் வளை கழலுகின்ற வருத்த நோய் தீருமாறு அருள் உடையவனாய் மணந்து கொள்வாய் என்று தோழி தலைவியை மணந்து கொள்ள வேண்டும் என்று தலைவனை வேண்டினாள்

## 319. காதலி கண்ட கனவு

'தோள் துறந்து, அருளாதவர் போல் நின்று,
வாடை தூக்க, வணங்கிய தாழை
ஆடு கோட்டு இருந்த அசை நடை நாரை,

நளி இருங் கங்குல், நம் துயர் அறியாது,
அளி இன்று, பிணி இன்று, விளியாது, நரலும்
கானல் அம் சேர்ப்பனைக் கண்டாய் போல,
புதுவது கவினினை' என்றியாயின்,
நனவின் வாரா நயனிலாளனைக்
கனவில் கண்டு, யான் செய்தது கேள், இனி.

'அலந்தாங்கு அமையலென்' என்றானைப் பற்றி, என்
நலம் தாராயோ என, தொடுப்பேன் போலவும்,
கலந்து ஆங்கே என் கவின் பெற முயங்கி,
'புலம்பல் ஓம்பு'என, அளிப்பான் போலவும்—

'முலையிடைத் துயிலும் மறந்தீத்தோய்' என
நிலை அழி நெஞ்சத்தேன் அழுவேன் போலவும்,
'வலை உறு மயிலின் வருந்தினை, பெரிது' என
தலையுற முன் அடிப் பணிவான் போலவும்—

கோதை கோலா, இறைஞ்சி நின்ற
ஊதைஅம் சேர்ப்பனை, அலைப்பேன் போலவும்,
'யாது என் பிழைப்பு?' என நடுங்கி, ஆங்கே,
'பேதையை பெதிது' எனத் தெளிப்பான் போலவும்
ஆங்கு—
களவினால் கண்டேன் தோழி! 'காண் தகக்
கனவின் வந்த கானல் அம் சேர்ப்பன்
நனவின் வருதலும் உண்டு' என
அனை வரை நின்றது, என் அரும் பெறல் உயிரே.– *கலி 128*

*வாடைக் காற்று அசைத்தலால் வளைந்த தாழைச் செடியின் அசையும் கொம்பில் இருந்த மெல்லிய நடையை உடைய நாரை, நம் தோளைத் துறந்து நமக்கு அருள் செய்யா தவரைப் போன்று நின்று கங்குலில் நம் துன்பத்தை அறியாமல் நம் மீது அருள் இல்லாது தனக்குக் காம நோயால் வருத்தம் அடையாது இடைவிடாமல் கூப்பிடும் இத்தகைய கானலை யுடைய சேர்ப்பனைப் பார்த்துக் கூடியவள் போன்று புதிய தாய், ஓர் அழகை உடையை ஆனாய் எனச் சொல்கின்றாய் ஆயின், வெளிப்பட வாராத உற வல்லாதவனைக் களவில் கண்டு நான் செய்ததைக் கேட்பாயாக:*

*உன்னைப் பிரிந்தால் உயிர் வாழேன் என்று சொன்னான் அவன். அத் தகையவனைப் பிடித்துக் கொண்டு நீ கொண்ட என் நலத்தை எனக்குத் தருவாயாக என்று வளைத்துக் கொள்வதைப் போன்றும், அங்கு என் கழிந்து போன அழகை யான் அடையும்படி தழுவிச் சேர்ந்து இனி வருந்தாதே எனச் சொல்லி என்னை அருள் செய்பவன் போன்றும்,-*

*என்னை மறப்பதே அல்லாமல் அவசத்தால் முளைகளில் உறங்கும் உறக்கத்தையும் மறந்துவிட்டாய் என்று தலைவனை வளைத்துக் கொள்வேன் போன்றும், அதைக் கண்டு வலை யில் அகப்பட்ட மயிலைப் போல் காவலில் அகப் பட்டுப் பெரிதும் வருந்தினாய் என்று சொல்லி என் அடி முன்பு தன் தலை பொருந்துமாறு வணங்குபவன் போன்றும்,*

*தோழியே! நான் கனவில் கண்டேன் அதனால் என் பெறுவதற்கு அரிய உயிர் எனக்குக் காட்சி அளிக்கும்படி கனவிலே வந்த கானலை உடைய துறையை உடையவன், வெளியில் வந்து கூடுவதும் உண்டு என்று எண்ணி அவன் அருளும் அளவிலே அது நகையாய் உண்டானது என்று கனவில் நிகழ்ந்ததைக் கூறினாள் தலைவி.*

## 320. மருந்தினும் கொடியது

**தொல் ஊழி தடுமாறி, தொகல் வேண்டும் பருவத்தால்
பல்வயின் உயிர்எல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான் போல்,
எல் உறு தெறு கதிர் மடங்கி, தன் கதிர் மாய:
நல் அற நெறி நிறீஇ உலகு ஆண்ட அரசன் பின்,
அல்லது மலைந்திருந்து அற நெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம் போல், மயங்கு இருள் தலை வர;
எல்லைக்கு வரம்பு ஆய, இடும்பை கூர், மருள் மாலை—**

**பாய் திரைப் பாடு ஓவாப் பரப்பு நீர்ப் பனிக் கடல்!—
'தூ அறத் துறந்தனன் துறைவன்' என்று, அவன் திறம்
நோய் தெற உழப்பார்கண் இமிழ்தியோ? எம் போலக்
காதல் செய்து அகன்றாரை உடையையோ—நீ.**

**மன்று இரும் பெண்ணை மடல் சேர் அன்றில்!
'நன்று அறை கொன்றனர், அவர், எனக் கலங்கி**

என் துயர் அறிந்தனை நரறியோ? எம் போல
இன் துணைப் பிரிந்தாரை உடையையோ? நீ

பனி இருள் சூழ் தர—பைதல் அம் சிறு குழல்!—
'இனி வரின், உயரும்மன் பழி' எனக் கலங்கிய
தனியவர் இடும்பை கண்டு இனைதியோ? எம் போல
இனிய செய்து அகன்றாரை உடையையோ? – நீ
என ஆங்கு
அழிந்து அயல் அறிந்த எவ்வம் மேற்பட,
பெரும் தேறுதல் களைமதி, பெரும!
வருந்திய செல்லல் தீர்த்த திறன் அறி ஒருவன்
மருந்து அறை கோடலின் கொடிதே, யாழ நின்
அருந்தியோர் நெஞ்சம் அழிந்து உக விடனே. – *கலி 129*

*பல உலகங்களில் உயிர்கள் எல்லாம் பழைய ஊழிக் காலத்தில் பிறந்து இறந்து தடுமாறித் திரியுமாறு நான் முகனாய் நின்று படைத்தவன் இறைவனான முதல்வன் அவன் பின் அரசனாய் அந்த உயிர்கள் எல்லாம் தன்னிடம் வந்து சேர்ந்து குவியும்படி விரும்பும் ஊழி முடிந்த காலத்தில் தன்னிடத்தில் மீட்டு ஒடுக்கிக் கொள்வான் அந்த முதல் வனைப் போன்று ஞாயிறு பகற்பொழுது வந்து சேர்வதற்குக் காரணமான தன் கதிர்களைத் தன்னிடம் மீட்டு ஒடுக்கிக் கொள்வான். தன் கதிர்களைத் தன்னிடம் மீட்டுக் கொணர்ந்து மறைத்தலால், நல்ல நீதிநூல் வழியில் உலகை நெறியில் நிறுத்தி அந்த உலகை ஆண்ட மன்னன் போன பின்பு நீதி யற்றதை மேற்கொண்டு அறநெறியை உலகில் நிறுத்த மாட்டாத குறுநில மன்னனின் காலம் போல், இருள் உலகத்தில் வரும் பொருட்டுப் பகற்போதுக்கு ஓர் எல்லை யான வருத்தம் மிக்க மயங்கிய மாலைக் காலத்தில், பரவும் திரை ஒலித்தல் மாறாத பரவிய நீரை உடைய கடலே! துறைவன் எமக்கு வன்மை இல்லாதபடி துறந்தான் என்று அவன் கூற்றால் உண்டான காம நோய் சுடுதலால் அதில் மூழ்குபவரிடத்தில் நின்று வருத்த வேண்டும் என்பதால் ஒலிக்கின்றாயோ? முன்பு காதல் செய்து பின்னர் நீங்கியவரை எம்மைப் போல் நீயும் பெற்றிருப்பதால் வருந்துகின்றாயோ?*

*மன்றிலே உள்ள கரிய பனையின் மடலை அடைந்திருக்கும் அன்றில் பறவையே! நம் தலைவர் தம் செய்த நன்றிகளை யான் இருந்து சொல்லுதலைக் கெடுத்து விட்டார் என்று கலங்கிய என் வருத்தத்தை அறிந்து மிகவும் வருத்த வேண்டி ஆரவாரம் செய்கின்றாயோ? முன்பு இனிய துணையாகிப் பின் பிரிந்தவரை என் போல் நீயும் பெற்றுள்ளமையால் வருந்துகின்றாயோ? எனக் கூறி,*

*பெரும! நெஞ்சம் கலங்கி அயலில் உள்ளவர் அறிந்த வருத்தம் மிக்கு வருகையால், பெரியதாய்ப் பித்தம் ஏறுகின்றது அதனை வரைந்து கொண்டு போக்குவாயாக! அவ்வாறு போக்கும் பொது நுகர்ந்தவரின் நெஞ்சம் அழிந்து கெடும்படி அவரைக் கைவிடுவாயாயின், அது வருந்திய வருத்தத்தைப் போக்கும் மருந்தின் திறத்தை அறிந்த ஒருவன் அந்த மருந்தை அறியேன் என்று வஞ்சித்து அம் மருந்தின் செயற்பாட்டைக் கெடுப்பதனை விடக் கொடியதாகும் எனத் தலைவியின் ஆற்றாமையைத் தோழி தலைவனுக்குக் கூறி வரைவு கடாயினாள்*

## 321. தொடுவழி தொடுவழி பசப்பு நீங்கியது

'நயனும், வாய்மையும், நன்னர் நடுவும்,
இவனின் தோன்றிய, இவை' என இரங்க,
புரை தவ நாடி, பொய் தபுத்து இனிது ஆண்ட
அரைசனோடு உடன் மாய்ந்த நல் ஊழிக் செல்வம் போல்
நிரை கதிர்க் கனலி பாடொடு பகல் செல,

கல்லாது முதிர்ந்தவன் கண் இல்லா நெஞ்சம் போல்
புல்இருள் பரத்தரூஉம் புலம்பு கொள் மருள் மாலை.

இம் மாலை
ஐயர் அவிர் அழல் எடுப்ப, அரோ என்
கையறு நெஞ்சம் கனன்று தீ மடுக்கும்!

இம்மாலை
இருங் கழி மா மலர் கூம்ப, அரோ, என்
அரும் படர் நெஞ்சம் அழிவொடு கூம்பும்!

இம்மாலை
கோவலர் மீ குழல் இனைய, அரோ என்
பூ எழில் உண் கண் புலம்பு கொண்டு இனையும்!
என ஆங்கு,
படு சுடர் மாலையொடு பைதல் நோய் உழப்பாளை,
குடி புறங்காத்து ஓம்பும் செங்கோலான் வியன் தானை
விடுவழி விடுவழிச் சென்றாங்கு, அவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றால் பசப்பே. *– கலி 130*

*இவனால் விளக்கம் அடைந்த உறவும் வாய்மை கூறுதலும் நடுவுநிலைமையும் ஆகிய இவை இனி விளக்கம் இல்லாது போய்விட்டன எனத் தனக்குப் பின்பு உலகத்தார் இரங்கும் வண்ணம் அவற்றுக்கு உயர்வு மிகுமாறு செய்தனன்; பொய்யை அழித்து நன்கு ஆண்டான். இத்தகைய மன்னனுடன் ஒருசேரக் கெட்ட நல்ல ஊழால் உண்டான செல்வம் போல் கதிரையுடைய ஞாயிறு மறைவதுடன் பகற்காலமும் போய்விடப் பின், வருத்தம் கொள்வதற்குக் காரணமாகிய மாலைக் காலம், எதையும் கல்லாது மூத்தவனின் அறிவுக்கண் அற்ற மனம்போல் புற்கென்ற இருள் உலகத்தில் பரவுதலைத் தரும்.*

*இத்தகைய மாலைப் போதில் துறவியர் அழலை அவி சொரிந்து எழுப்புவர்; என் செயலற்ற நெஞ்சம் கொதித்து எனக்குக் காமத் தீயை உண்டாக்கும்.*

*இம் மாலைப் போதில் கருமையான கழிகளில் பெருமையுடைய மலர்கள் குவியும் என் மனம் அவனை நினைத்தலால் வருந்துவதுடன் தன் நினைவின்றிக் குவியும்.*

*இந்த மாலையில், ஆயரின் இனிய குழலால் நெஞ்சம் வருந்த என் பூவினது அழகு கொண்ட மையுண்ட கண் தனிமை அடைந்து வருந்தும். என மொழிந்து*

*மறைகின்ற சுடரையுடைய மாலையால் வருத்தத்தையுடைய காம நோயில் அழுந்துபவளைக் குடிமக்களைப் பாதுகாத்துப் பின்பு தன்னைக் காக்கும் பாண்டியனின் அகன்ற படையைவிட விடப் பகைவர் நீங்கியது போல், பிரிந்து போனவர் வந்து தீண்டத் தீண்டப் பசப்பு நீங்கியது. இஃது இருந்தவண்ணம் என்னே என்று வாயில்கள் தமக்குள் கூறினர்*

## 322. காதலன் ஊசலை ஆட்டினான்

பெருங் கடற் தெய்வம் நீர் நோக்கித் தெளித்து, என்
திருந்திழை மென் தோள் மணந்தவன் செய்த
அருந் துயர் நீக்குவேன் போல்மன் – பொருந்துபு
பூக் கவின் கொண்ட புகழ் சால் எழில் உண் கண்,
நோக்குங்கால் நோக்கின் அணங்கு
ஆக்கும், சாயலாய்! தாக்கி

இன மீன் இகல் மாற வென்ற சின மீன்
எறி சுறா வான் மருப்புக் கோத்து, நெறி செய்த
நெய்தல் நெடு நார்ப் பிணித்து யாத்து, கை உளர்வின்
யாழ் இசை கொண்ட இன வண்டு இமிர்ந்து ஆர்ப்ப,
தாழாது உறைக்கும் கட மலர்த் தண் தாழை
வீழ் ஊசல் தூங்கப் பெறின்.

மாழை மட மான் பிணை இயல் வென்றாய் நின் ஊசல்
கடைஇ யான் இகுப்ப, நீடு ஊங்காய், தட மென் தோள்
நீத்தான் திறங்கள் பகர்ந்து.

நாணினகொல், தோழி? நாணினகொல், தோழி?
இரவு எலாம் நல் தோழி நாணின – என்பவை
வாள் நிலா ஏய்க்கும் வயங்கு ஒளி எக்கர் மேல்
ஆனாப் பரிய அலவன் அளை புகூஉம்–
கானல், கமழ் ஞாழல் வீ ஏய்ப்ப, தோழி! என்
மேனி சிதைத்தான் துறை.
மாரிவீழ் இருங்கூந்தல், மதைஇய நோக்கு எழில் உண்கண்
தாழ் நீர முத்தின் தகை ஏய்க்கும் முறுவலாய்!
தேயா நோய் செய்தான் திறம் கிளந்து நாம் பாடும்
சேய் உயர் ஊசல் சீர் நீ ஒன்று பாடித்தை.

பார்த்து உற்றன, தோழி! பார்த்து உற்றன தோழி!
இரவு எலாம், நல் தோழி! பார்த்து உற்றன – என்பவை
'தன் துணை இல்லாள் வருந்தினாள்கொல்?' என,
இன் துணை அன்றில் இரவின் அகவாவே
அன்று, தான் ஈர்த்த கரும்பு அணி வாட, என்
மென் தோள் ஞெகிழ்த்தான் துறை.

கரை கவர் கொடுங் கழி, கண் கவர் புள்ளினம்
திரை உறப் பொன்றிய புலவு மீன் அல்லதை
இரைஉயிர் செகுத்து உண்ணாத் துறைவனை யாம் பாடும்
அசை வரல் ஊசல் சீர் அழித்து, ஒன்று பாடித்தை.
அருளினகொல் தோழி? அருளின்கொல், தோழி?
இரவு எலாம், தோழி! அருளின – என்பவை
கணம் கொள் இடு மணல் காவி வருந்த,
பிணங்கு இரு மோட்ட திரை வந்து அளிக்கும்–
மணம் கமழ் ஐம்பாலார் ஊடலை ஆங்கே
வணங்கி உணர்ப்பான் துறை.
என், நாம்
பாட, மறை நின்று கேட்டனன், நீடிய
வால் நீர்க் கிடக்கை வயங்கு நீர்ச் சேர்ப்பனை
யான் என உணர்ந்து, நீ நனி மருள,
தேன் இமிர் புன்னை பொருந்தி,
தான் ஊக்கினன், அவ் ஊசலை வந்தே. *– கலி 131*

*பார்க்குங் காலத்து அந்தப் பார்வையால் மற்றவர்க்கு வருத்தத்தை உண்டாக்கும் இணையான பூவின் அழகுடைய கண்ணையுடையவளே! நற்சாயலை உடையவளே, இனமான மீன்களின் மாறுபாடு கெடத் தாக்கி வென்ற சினமுடைய மீனான சுறா, கொம்பால் செய்த பல கையைக் கோத்துப், புற இதழ் ஒடித்த நெய்தற் பூவை நீண்ட நாரில் கோத்து அழகுடையதாய்க் கட்டி, கையால் இயக்கப்படும் யாழின் ஓசையைத் தன்னிடம் கொண்ட வண்டுகள் ஒலித்துப் பாட, தேன் துளிக்கும் வளைவையுடைய தாழையின் விழுதால் திரித்து அமைக்கப்பட்ட ஊசலை நீ அமர்ந்து ஆடுவாய் அங்ஙனம் ஆடப் பெற்றால், கடல் செய்வத்தை முன்னிருத்தி 'உன்னைப் பிரியேன்' என்று உன்னைத் தெளிவித்து நின் தோள்களைக் கூடிய தலைவன், தான் அரியவனாய்ச் சிறிது காலம் மறந்திருந்ததால், உனக்கு உண்டாகிய அரிய வருத் தத்தை நான் அவன் எதிர் நின்று தீர்க்க வேண்டியுள்ளது போல் விளங்குகின்றது என்று தோழி சொன்னாள்*

*(ஊசல்: சுறா/மீனின் மருப்பினால் ஆன பலகை வரிசை யாய்க் கோக்கப்பட்டது; நெய்தல் மலர் மாலை சூட்டப்*

பட்டது; தாழை விழுதால் ஆன கயிற்றில் தொங்குமாறு அமைக்கப்பட்டது)

அதைக் கேட்டு ஊசலிடம் சென்ற தலைவியை நோக்கி, "இளைய மான் பிணையின் பார்வையை வென்றவளே, உன் தடமென் தோளைக் கைவிட்டவனின் கொடுமைத் தன்மை களைக் கூறிப் பாடி நீ ஏறிய ஊசலை யான் உயரச் செலுத்தித் தாழ்த்து ஆட்ட நீண்ட நேரம் ஆடுவாயாக," என்றாள் தோழி.

தலைவி தோழி சொன்னபடி பாடவில்லை. ஆதலால் தோழி," தலைவியே, கானலில் மணம் கமழும் ஞாழற்பூவின் நிறம் போன்ற உன் மேனி பசலை கொள்ளும்படி செய்த வனது துறையில் ஒளியையுடைய நிலவைப் போன்ற ஒளி யுடைய மணலின் மேலே ஓடுகின்ற ஒழியாத செலவை யுடைய நண்டுகள் இப்போது நம்மைக் கண்டு தம் வளைகளில் புகுகின்றன. அவ்வாறு புகுவதால் அத் துறைவன் நம்மிடம் செய்த கொடுமையை எண்ணி நம் முன் நிற்பதற்கு வெட்கம் கொண்டனவோ? தோழி, எங்ஙனம் நாணங் கொண்டன எனின் இரவுக் காலம் எல்லாம் நாணிக் கிடந்தன வாய் இருக்கும் எனத் தலைவனின் இயல்பைப் பழித்தாள்.

அதைக் கேட்டபோதும் தவைவி பாடாதிருந்தாள். ஆதலால், தோழி மேலும், 'முகிலும் விரும்பும் கூந்தலையும் மதர்த்த நோக்கினது அழகையுடைய கண்ணையும் கடலில் பிறந்த முத்தின் அழகை ஒத்த முறுவலையும் கொண்டவளே! மடியாத நோயைச் செய்தவனின் கொடுமையின் கூற்றைச் சொல்லி நாம் பாடும் மிகவும் உயர்ந்த ஊசற் பாட்டு ஒன்றை நீ பாடுவாய்' என்றாள்.

அதைக் கேட்டாள் தலைவி. அதன் பின்பும் அவள் பாடவில்லை. அதனால், தோழி நம் மீது அன்பு கொண்டு புணர்ந்த அன்று தான் எழுதிய கரும்புக் கோலத்தின் அழகு கெடுமாறு மென்மையான தோளை மெலிவித்தவனின் துறையில், துணையுடன் கூடிய அன்றில் பறவைகள், தன் துணையானவனை நீங்கியவள் வருந்தினாளோ' என எண்ணி இரவுக் காலத்திலும் அழைக்கவில்லை. ஆதலால் தோழி அப் பறவைகள் நம் வருத்தத்தைப் பார்த்துத் தாமும் வருத்தம்

அடைந்தன போல் இருந்தன. ஆகவே, தோழி, இரவெல்லாம் நம் வருத்த்த்தைப் பார்த்துத் தாம் வருத்தம் அடைந்தன எனக் கூறினாள்

அதைக் கேட்டாள் தலைவி, "கரையை இடித்துத் தனக்கு ஆக்கிக் கொள்ளும் கழியிடத்தில் பார்த்தவர் கண்ணை வாங்கிக் கொள்ளும் அழகையுடைய பறவைக் கூட்டம் அலை எறிதலால் இறந்து போன புலால் நாற்றத்தையுடைய மீனை இரையாய் உண்பதே அல்லாது, தாம் ஒன்றின் உயிரைப் போக்கி உண்ணாத அருள் துறைவனை, நாம் பாடும் ஊசற் பாட்டை, நீ இயற்பழித்ததை அழித்து, இயற்பட ஒன்றைப் பாடுவாயாக," என்று சொன்னாள் தலைவி

அதைக் கேட்ட தோழி தலைவி சொன்னவண்ணம் பாடவில்லை அதனால் தலைவி மணம் கமழும் கூந்தல் உடையவரிடம் உண்டாகிய ஊடலை, அது உண்டான போதே விரைந்து தீர்ப்பவன் , துறையில், திரண்ட இடு மணலில் குவளை எனக் கூறப்படுபவை வருந்த, அவற்றைத் தம்மில் பிணங்கி வரும் கடுமை கொண்ட பெரிய அலைகள் வந்து அம் மணலைக் கரைத்து அருள் செய்யும் தோழி, இர் வெல்லாம் அருள் செய்தனவாய் இருக்கும் என இயற் பட மொழிந்தாள்

என்று அங்ஙனம் தலைவனின் இயல்பைப் பழித்தும் இயற்பட மொழிந்தும் நானும் நீயும் பாடினோம் பாடச், சேர்ப்பன், மறைவாய் நின்று பாட்டைக் கேட்டான் நீண்ட வெண்மையைப் பெற்ற நீர்க்கிடக்கை விளங்கும் தன்மை யுடைய சேர்ப்பனை நான் ஊசலை ஆட்டு என்றேன் என்றும் உணர்ந்து, பின் நான் ஊசலை ஆட்டினேன் என நீ மிகவும் மருளும்படி, அவன், தேன் இனம் ஒலிக்கும் புன்னை மரத்தைப் பொருந்தி நின்று, பின்பு வந்து அந்த ஊசலை ஆட்டினான் ஆதலால் நம் வருத்தத்தை அறிந்து வரைந்து கொள்வான் எனத் தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள்

## 323. அலர் ஏற்படத் தலைவியைப் பிரிவதா?

உரவு நீர்த் திரை பொர ஓங்கிய எக்கர் மேல்,
விரவுப் பல் உருவின வீழ் பெடை துணையாக,

இரைதேர்ந்து உண்டு, அசாவிடூஉம் புள்ளினம் இறை கொள
முரைசு மூன்று ஆள்பவர் முரணியோர் முரண் தப,
நிரை களிறு இடை பட, நெறி யாத்த இருக்கை போல்
சிதைவு இன்றிச் சென்றுழிச் சிறப்புஎய்தி, வினை வாய்த்து,
துறைய கலம் வாய் சூழும் துணி கடல் தண் சேர்ப்ப!

புன்னைய நறும் பொழில் புணர்ந்தனை இருந்தக்கால்
'நன்னுதால்! அஞ்சல் ஓம்பு!' என்றதன் பயன் அன்றோ—
பாயின பசலையால், பகல் கொண்ட சுடர் போன்றாள்
மாவின தளிர் போலும் மாண் நலம் இழந்ததை?

பல் மலர் நறும் பொழில் பழி இன்றிப் புணர்ந்தக்கால்
'சின்மொழி! தெளி' எனத் தேற்றிய சிறப்பு அன்றோ—
வாடுபு வனப்பு ஓடி வயக்கு உறா மணி போன்றாள்
நீடு இறை நெடு மென் தோள் நிரைவளை நெகிழ்ந்ததை?

அடும்பு இவர் அணி எக்கர் ஆடி நீ, 'மணந்தக்கால்
கொடுங்குழாய்! தெளி'எனக் கொண்டதன் கொளை அன்றோ
பொறை ஆற்றா நுசுப்பினால், பூ வீந்த கொடி போன்றாள்
மறை பிறர் அறியாமை மாணா நோய் உழந்ததை?

என ஆங்கு –

வழிபட்ட தெய்வம்தான் வலி எனச் சார்ந்தார்கண்
கழியும் நோய் கைம்மிக அணங்கு ஆகியது போல்
பழி பரந்து அலர் தூற்ற, என் தோழி
அழி படர் அலைப்ப, அகறலோ கொடிதே. — *கலி 132*

*மூன்று முரசைக் கொண்டு ஆட்சி செய்யும் பாண்டியன் தம்முடன் மாறுபட்டவரின் மாறுபாடு கெடுமாறு வரிசைப் பட நிறுத்திய களிறுகள், மற்றப் படைக்கு நடுவே நிற்கும் படி கம்பத்தில் கட்டப்பட்ட இருக்கை போன்று, பல வகை யான வடிவுடைய இரையைத் தேடித் தின்று இளைப்பாறும் பறவைகள், தாம் விரும்பிய பெண் பறவைகள் தமக்குத் துணையாக, வன்மையுடைய கடலின் அலை மோதும்படி உயர்ந்த மணல் மேட்டின் தங்க, தாம் போன இடத்துத் தமக்குக் கேடு ஏதும் இல்லாது மேற்கொண்ட செயல் இனிது முடியப் பெற்று வந்த தலைமை பெற்றுத் துறையில் மரக்*

கலங்கள் சூழ்ந்து நிற்கும் இத்தகைய தெளிந்த கடலை யுடைய சேர்ப்பனே

(பறவைகள் பகைவர் படைக்கு உவமை மரக்கலங்கள் யானைக்கு உவமை)

மாந்தளிர் போன்ற சிறந்த நலத்தை இழந்து புன்னையை உடைய சோலையில் இவளைப் புணர்ந்திருக்க, 'நல்ல நெற்றியை உடையவளே, யான் பிரிவேன் என்று நீ அஞ்ச வேண்டா' என்று தெரிவித்ததனால் உள்ள பயன் அன்றோ!

அழகு குன்றிக் கெட்டு நெடுங்காலம் விளக்கம் செய்யாத மணியை ஒத்தவளின் திரண்ட நெடிய மென்மையான தோளின் வளைகள் கழன்றன 'பல மலர்களையுடைய நறு மணச் சோலையில் குற்றமற்று அவனைப் புணர்ந்திருக்கச் சில மொழிகளை உடையவளே, நின்னை நான் பிரியேன், தெளிவாய்' என்று தெளியச் செய்ததால் உள்ள சிறப்பே அன்றோ! (சிறப்பு என்றது இகழ்ச்சி)

அணிகலன்களைப் பொறுக்க மாட்டாத தனது மென்மை யான இடையினால் அணிகலன்கள் அணியாமல் பூ பூத்தல் மாறப் பெற்ற கொடியைப் போன்றவள், பிறர் இக் கள வொழுக்கத்தை அறியாமல் மறைத்து மருந்தினால் போக்கப் படாத காம நோயில் அழுந்தியது, அடும்புக் கொடி பரந்த இடு மணலில் கூட விளையாடி நீ புணர, 'கொடுங் குழை அணியை அணிந்தவளே, உன்னை நான் பிரியேன்; அறிவாயாக' என்று கூற, அதை மெய் என்று எண்ணியதால் அன்றோ!

தனக்கு வலிமையை அளிக்கும் என்று எண்ணி வழி பட்ட தெய்வத்தை அடைக்கலமானவர்க்கு நெஞ்சு வருந்தும் நோய் மிகுமாறு வருத்தமாகிய தன்மை போல், நின்னைத் தனக்கு வலி என வழி பட்ட என் தோழியை நீ செய்த பழி என்று எங்கும் பரவி, அலர் தூற்றுகையால் ஏற்பட்ட நினைவு வருத்த, நீங்குவது கொடியதாகும் என்று சொல்லித் தோழி தலைவியை மணந்து கொள்ளும்படி தலைவனைத் தூண்டினாள்

## 324. தோழியின் அறிவுரை!

மா மலர் முண்டகம் தில்லையோடு ஒருங்கு உடன்
கானல் அணிந்த உயர் மணல் எக்கர்மேல்,

**சீர் மிகு சிறப்பினோன் மரமுதல் கை சேர்ந்த**
**நீர் மலி கரகம் போல் பழம் தூங்கு முடத் தாழைப்**
**பூ மலர்ந்தவை போல், புள் அல்கும் துறைவ, கேள்:**

**'ஆற்றுதல்' என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்,**
**'போற்றுதல்' என்பது புணர்ந்தாரைப் பிரியாமை,**
**'பண்பு' எனப்படுவது பாடு அறிந்து ஒழுகுதல்,**
**'அன்பு' எனப்படுவது தன் கிளை செறாமை,**
**'அறிவு' எனப்படுவது பேதையர் சொல் நோன்றல்,**
**'செறிவு' எனப்படுவது கூறியது மறாஅமை,**
**'நிறை' எனப்படுவது மறை பிறர் அறியாமை,**
**'முறை' எனப்படுவது கண்ணோடாது உயிர் வெளவல்,**
**'பொறை' எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்,**
**ஆங்கு அதை அறிந்தனிர் ஆயின், என் தோழி**
**நல் நுதல் நலன் உண்டு துறத்தல் கொண்க!**

**தீம் பால் உண்பவர் கொள் கலம் வரைதல்;**
**நின்தலை வருந்தியாள் துயரம்**
**சென்றனை களைமோ பூண்க, நின் தேரே.** — *கலி 133*

*கரிய மலர்கள் நிறைந்த கழி முள்ளியும் தில்லை மரமும் செறிந்து வளர்ந்திருக்கும் கடற்கரைச் சோலையில், அலையால் சேர்க்கப்பட்ட மணல் மேல் காற்றால் உயர்ந்த மணலில் உடனின்று புகழ் மிகும் தலைமையுடைய தென்முகக் கடவுளான இறைவர் தாம் இருக்கும் இடத்துக்கு முன்பு தூக்கி வைத்த நீர் நிறைந்த குண்டிகை போல், பழம் தொங்கும் முடமான தாழைப்பூ மலர்ந்தது போல் குருகினம் அத் தாழை மேல் தங்கும் துறைவனே! நான் சொல்வதைக் கேள்!*

*இல்வாழ்வு நடத்துதல் என்பது வறியவர்க்கு ஏதேனும் ஒன்றை உதவுதலாகும்.*

*ஒன்றைப் பாதுகாத்தல் எனச் சொல்லப்படுவது நட்புடையவரைப் பிரியாதிருத்தலாகும்*

*மக்கள் பண்பு எனக் கூறப்படுவது உலக ஒழுக்கம் அறிந்து ஒழுகுதலேயாகும்*

*அன்பு என்று சொல்லப்படுவது தன் சுற்றம் கெடாது இருக்கச் செய்தலேயாகும்.*

*அறிவு என்று சொல்லப்படுவது அறியாதவர் தம்மைப் பார்த்துச் சொல்லும் சொல்லைப் பொறுத்தலேயாகும்.*

*ஒருவரோடு ஒருவர்க்கு உறவு என்று சொல்லப்படுவது கூறிய ஒன்றைத் தாம் மறவாதிருத்தலேயாம்.*

*நிறை என்று சொல்லப்படுவது மறைத்த ஒரு செய்கை பிறர் அறியாமல் ஒழுகுதலேயாம்*

*முறை என்று சொல்லப்படுவது நம்முடையவர் என்று கண்ணோட்டம் செய்யாது அவர் செய்த குற்றத்துக்கு ஏற்ப அவரது உயிரைப் பறித்தலேயாகும்*

*பொறை என்று சொல்லப்படுவது பகைவரைத் தக்க காலம் வரும் வரை பொறுத்திருத்தலேயாகும்*

*அவற்றை நீ அறிந்து ஒழுகுவீராயின், அந்த ஒழுக்கத் துக்கு ஏற்ற ஒன்றைச் சொல்வேன் நெய்தல் நிலத்தலைவ!, என் தோழியின் நல்ல நெற்றியின் நலத்தை நுகர்ந்து அவளைத் துறத்தல், இனிய பாலை உண்பவர், பாலை உண்டு அதனைக் கொண்டிருக்கும் கலத்தைக் கவிழ்த்து விடுதல் போன்றதன்று ஆதலால் நின்னால் வருத்தப்பட்டவள் துன் பத்தை அவளை மணந்து கொண்டு போக்குவாயாக. அங்ஙனம் போக்குவதற்கு நின் தேர், குதிரையைப் பூண்பதாகுக எனத் தெளிவித்து வரைவு கடாயினாள்*

## 325. விரைய நீங்கியது நிரை தொடி துயரம்!

மல்லரை மறம் சாய்த்த மலர்த் தண் தார் அகலத்தோன்,
ஒல்லாதார் உடன்று ஓட, உருத்து உடன் எறிதலின்,
கொல் யானை அணி நுதல் அழுத்திய ஆழி போல்,
கல் சேர்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்,
இருங் கடல் ஒலித்து ஆங்கே இரவுக் காண்பது போல,
பெருங் கடல் ஓத நீர் வீங்குபு கரை சேர,
யோஓய வண்டினால் புல்லென்ற துறையவாய்,
பாயல் கொள்பவை போல, கய மலர் வாய் கூம்ப,
ஒருநிலையே நடுக்குற்று இவ் உலகெலாம் அச்சுற,
இரு நிலம் பெயர்ப்பு, அன்ன, எவ்வம் கூர் மருள் மாலை—

தவல் இல் நோய் செய்தவர்க் காணாமை நினைத்தலின்,
இகல் இடும் பனி தின, எவ்வத்துள் ஆழ்ந்து, ஆங்கே,

கவலை கொள் நெஞ்சினேன் கலுழ் தர, கடல் நோக்கி,
அவலம்மெய்க் கொண்டது போலும்அஃது எவன்கொலோ?
நடுங்கு நோய் செய்தவர் நல்காமை நினைத்தலின்
கடும் பனி கைம்மிக, கையாற்றுள் ஆழ்ந்து, ஆங்கே,
நடுங்கு நோய் உழந்த என் நலன் அழிய, மணல் நோக்கி
இடும்பை நோய்க்கு இகுவனபோலும் அஃது எவன்கொலோ?
வையினர் நலன் உண்டார் வாராமை நினைத்தலின்,
கையறு நெஞ்சினேன் கலக்கத்துள் ஆழ்ந்து, ஆங்கே,
மையல் கொள் நெஞ்சோடு மயக்கத்தால், மரன் நோக்கி,
எவ்வத்தால் இயன்றபோல், இலைகூம்பல் எவன்கொலோ?
என ஆங்கு
கரை காணாப் பௌவத்து, கலம் சிதைந்து ஆழ்பவன்
திரை தரப் புணை பெற்று, தீது இன்றி உய்ந்தாங்கு,
விரைவனர் காதலர் புகுதர
நிரை தொடி துயரம் நீங்கின்றால், விரைந்தே. *– கலி 134*

*பகையாக வந்த மல்லரை அழித்த மலர்ந்த மாலையை அணிந்த திருமார்பை உடைய திருமால் தன் பகைவர் எல்லாரும் சேர வந்து சினந்து தன்னை எதிர்த்தலால், அவரைச் சினந்து ஓடும்படியாய் அவர் ஏறி வந்த யானை யின் நெற்றியில் அழுத்திய சகடம் போன்று, ஞாயிறு தான் பரப்பிய கதிர்களைத் தன்னிடம் சுருக்கிக் கொண்டு பெரு மலையைச் சேர்ந்து மறையும் அதனால் பெரிய கடலில் ஓதம் ஏறும் நீர் மிக்குக் கரையைச் சேர்தலால், கழியில் உள்ள பூக்களினின்றும் போன வண்டுகளால் பொலிவு அற்ற துறை யில் உள்ள உறங்குவன போல், அந் நீர் நிலையின் மலர்கள் யாவும் வாய் குவியும் அக் காலத்தில் கடல் ஒலிக்க இவ் வுலகம் எல்லாம் ஒருசேர நடுக்கம் அடைந்து அச்சம் கொள்ளும்படி தான் படைத்த இவ் உலகினை மீண்டும் தன்னிடம் ஒடுக்கித் கொள்ளும் தன்மையைப் போன்று தோன்றும் இத்தகைய பிரிந்தார்க்கு வருத்தம் மிகுவதற்குக் காரணமான மாலைப் போது அக் காலத்தில் -*

*எனக்குக் கெடாத காம நோயைச் செய்தவரைக் கண்ணால் காணாமல் என் மனம் நினைக்கையினால், அது தனக்கு இடமாகக் கொண்டு மாறுபாடுகளைத் தரும் பனிக் காலம்*

அறிவைத் தின்கின்றது அதனால் அப்போதே வருத்தத்தில் அழுந்திப் பல எண்ணங்களையுடைய நெஞ்சை யுடைய நான், கலக்கத்தைத் தரக் கடல் அதைப் பார்த்து எனது இந்த அவலத்தைத் தன் உடலில் கொண்டது போன்று கூப்பிடு கின்றது இதற்குக் காரணம் என்னவோ?

எனக்கு நடுங்கும் காம நோயைத் தந்தவர் அருளவில்லை அதனால் என் மனம் அவரை நினைக்கையினாலே, அதைக் கண்டு கடிய பனிக்காலம் மிகுந்து வர, அதனால் யான் செயலறவில் அழுந்த, மணல் குன்று அதை நோக்கி நடுங்கும் துன்பத்தில் உழந்து, என் நலத்தை இழந்தேன். இத்தகைய எனது இடும்பையைத் தரும் நோய்க்குத் தான் கரைந்து தாழ்பவை போல் இருப்பதற்குக் காரணம் யாதோ?

இரந்து வருத்தம் தீராமல் என்னை வைத்து, என் நலத்தை உண்டார் அவர் இங்கு வரவில்லை. அதனால் என் மனம் அவரை நினைத்தது அதைக் கண்டு பனிக்காலம் வருத்த, அது கண்டு அப்போதே மயக்கத்தால் செயலற்ற நெஞ்சினள் ஆனேன் இத் தன்மையுடைய நான் கலக்கத்தில் அழுந்த, மரம் அதை நோக்கி வருத்தத்தால் செய்யப் பட்டவை போல் மயக்கம் கொண்ட நெஞ்சுடன் இலைகள் குவிவதற்குக் காரணம் என்னவோ?

என்று இவர் கூற

கரை காண இயலாத நடுக்கடலில் மரக்கலம் சிதைந்து அழுந்துபவன், திரை கொண்டுவந்து தர, ஒரு தெப்பத்தைப் பெற்றுப் பின்னர்த் தீதின்றிப் பிழைத்தது போல், இவளது காதலர் விரைவாய் வந்து சேர, துன்பம் யாவும் விரைவாய் நீங்கின அதைக் காணீர் என வாயில்களாய் வந்தோர் தங்களுக்குள் கூறிக் கொண்டனர்

## 326. விரைவாய்ச் செலுத்துக தேரை

துணை புணர்ந்து எழுதரும் தூ நிற வலம்புரி
இணை திரள் மருப்பாக எறி வளி பாகனா—
அயில்திணி நெடுங்கதவு அமைத்த, அடைத்து, அணி கொண்ட
எறில் இடு களிறே போல இடு மணல் நெடுங் கோட்டைப்
பயில்திரை, நடுநன்னாள், பாய்ந்து உறூஉம் துறைவ! கேள்:

கடி மலர்ப் புன்னைக் கீழ்க் காரிகை தோற்றாளைத்
தொடி நெகிழ்ந்த தோளாளத் துறப்பாயால்; மற்று நின்
குடிமைக்கண் பெரியது ஓர் குற்றமாய்க் கிடவாதோ?
ஆய் மலர்ப் புன்னைக் கீழ் அணி நலம் தோற்றாளை
நோய் மலி நிலையளாத் துறப்பாயால்; மற்று நின்
வாய்மைக்கண் பெரியது ஓர் வஞ்சமாய்க் கிடவாதோ?
திகழ் மலர்ப் புன்னைக் கீழ்த் திரு நலம் தோற்றாளை
இகழ் மலர்க் கண்ணாளாத் துறப்பாயால்; மற்று நின்
புகழ்மைக்கண் பெரியது ஓர் புகராகிக் கிடவாதோ?
என ஆங்கு
சொல்லக் கேட்டனை ஆயின், வல்லே,
அணி கிளர் நெடு வரை அலைக்கும் நின் அகலத்து,
மணி கிளர் ஆரம் தாரொடு துயல்வர
உயங்கினள் உயிர்க்கும் என் தோழிக்கு
இயங்கு ஒலி நெடுந் திண் தேர் கடவுமதி, விரைந்தே.

*– கலி 135*

*வேல் வைத்துச் செறிக்கப்பட்ட பெரிய கதவாய்ச் சமைத்து அதனால் அடைத்துள்ள மதிலைக் குத்தும் ஆண் யானை போல், மணற்குன்றின் பெரிய உச்சியைப் பொருந்திய அலை, காற்றே பாகனாக, துணையைக் கூடி எழும் தூய நிற முடைய வலம்புரிச் சங்குகள் இரு கொம்புகளாய், நள்ளிரவில் குத்தி, யானை போல் முழங்கும் துறைவனே, கேட்பாயாக:*

*மணம் பொருந்திய புன்னை மரத்தின் கீழ் உன்னைப் புணர்ந்ததால் இவள் தன் அழகு தோற்றாள் இவளை நீ தொடி கழன்று விழும் படியான தோளையுடையவளாய் ஆகும்படி நீ கை விடுவாயானாய்*

*அவ்வாறு கை விடுதல் நினது குடிமையிடத்துப் பெரிய குற்றமாய்த தங்கி விடாதோ?*

*அழகிய மலர்களையுடைய புன்னை மரத்தின் கீழ் உன்னை இவர் புணர்ந்தாள், அதனால் தன் அழகு கெடப் பெற்றாள் காம நோய் மிகுபவள் ஆனாள் இத் தகையவளாய் ஆக நீ இவளைக் கை விடுவாயாய் உள்ளனை அவ்வாறு கை விடுவது நின் மெய் கூறுதலில் (சூள் உரைத்தலில்) பெரியதோர் பொய்யாய் ஆகி விடாதோ?*

*என்று நான் சொல்ல*

*வல்லே சொல்லக் கேட்பாயானால், அழகுடைய பெரிய மலையை வருத்தும் உன் மார்பில் மாணிக்கம் விளங்கும் முத்து வடம் பூமாலையுடனே அசைய அணிந்து கொண்டு, வருந்திய வாய்ப் பெருமூச்சு விடும் என் தோழி பொருட்டு ஓடும் ஒலியையுடைய பெரிய தேரை விரைந்து செலுத்துவாயாக என்று தோழி வரைவு வேண்டினாள்*

## 327. எழுந்து தேரில் ஏறுக

இவர், திமில், எறிதிரை ஈண்டி வந்து அலைத்தக்கால்,
உவறு நீர் உயர் எக்கர், அலவன் ஆடு அளை வரி
தவல் இல் தண் கழகத்துத் தவிராது வட்டிப்ப
கவறு உற்ற வடு ஏய்க்கும், காமரு பூங் கடற் சேர்ப்ப!

முத்து உறழ் மணல் எக்கர் அளித்தக்கால், முன் ஆயம்
பத்து உருவம் பெற்றவன் மனம் போல, நந்தியாள்–
அத் திறத்து நீ நீங்க, அணி வாடி, அவ் ஆயம்
வித்தத்தால் தோற்றான் போல், வெய் துயர் உழப்பவோ?

முடத் தாழை முடுக்கருள் அளித்தக்கால், வித்தாயம்,
இடைத் தங்கக் கண்டவன் மனம் போல, நந்தியாள்–
கொடைத் தக்காய்! நீ ஆயின், நெறி அல்லாக் கதி ஓடி
உடைப் பொதி இழந்தான் போல், உறு துயர் உழப்பவோ?

நறு வீ தாழ் புன்னைக் கீழ் நயந்து நீ அளித்தக்கால்,
மறுவித்தம் இட்டவன் மனம் போல, நந்தியாள்–
அறிவித்து நீ நீங்கக் கருதியாய்க்கு, அப் பொருள்
சிறுவித்தம் இட்டான் போல், செறிதுயர் உழப்பவோ?

ஆங்கு
கொண்டு பலர் தூற்றும் கௌவை அஞ்சாய்,
தீண்டற்கு அருளி, திறன் அறிந்து, எழீஇப்
பாண்டியம் செய்வான் பொருளினும்
ஈண்டுக, இவள் நலம்! ஏறுக, தேரே! *– கலி 136*

*மணற் குன்று, பரவிய, மீன்பிடிக்கும் திமில் பொருந்திய, வீசும் அலைகள் திரண்டு வந்து அலைக்க, ஊறும் நீரை*

யுடையது அதில் வளையினின்று வெளி வந்து விளையாடும் புள்ளிகளையுடைய நண்டு மன வேட்கை கெடாத சூதாடும் இடத்தில் வடுவுடைய சூதாடு காயை வேட்கை தவிராது உருட்ட, அக் கவற்றைப் போன்று விளங்கும் விருப்பம் பொருந்திய பொலிவையுடைய சேர்ப்பனே-

முத்து போன்று விளங்கும் ஏக்கரான மணலில் நீ கூடுவதற்கு முன்னால் இடும் தாயம், முன்பு மனை கட்டக் கவற்றால் ஈரைந்தைப் பெற்றவனின் மனம் போன்று ஆக்கம் பெருகினவள் அவ்வாறு அருள் செய்வதனின்று நீ நீங்குதலால் அந்தப் பெரிய தாயம் இன்றி ஈரிரண்டு இரு மூன்று என்ற சிறு தாயம் இடுவதால் தோற்றவனைப் போன்று அழகு அழிந்து வெய்யது ஆகிய வருத்தத்தில் அழுந்திடவோ?

முடமான தாழை முடுக்குக் குள்ளே நீ கூடப் போரிடையிலே சிறிய தாயம் இட வேண்டிய அளவில் சிறுதாயம் உண்டாகக் கண்டவனின் மனம் போல் ஆக்கம் பெருகியவள், உறவினர்க்குப் பொருளைத் தந்து மணந்து கொள்ளத் தக்கவனே, நீ முன்பே பொருளைத் தேடாமல் இப்போது பொருள் வயின் பிரிவை ஆராய்ந்து பார்த்தாயாயின், சிறு தாயம் இடவேண்டிய அளவில் இடாமல், பெருக இட்டு வெல்லும் வழியற்ற வழியில் சூதாடுகையால் அதற்கென்று கட்டி வைத்த தன் பொருளை இழந்தவனைப் போல் மிக்க துன்பத்துள் வருந்தவோ?

நறு மணமுடைய மலரையுடைய புன்னை மரத்தின் கீழே நீ விரும்பிக் கூட இருகாற் சிறுதாயம் இட வேண்டிய அளவில் ஒருகாலன்றியே இருகாலாவதும் சிறு தாயம் இட்டவன் மனம் போல் ஆக்கம் பெருகியவள் இவள், நீ பிரிந்து போய் வந்து மணப்பேன் என்று எமக்கு அறிவித்துப் பிரிய எண்ணின உன் பொருட்டாய் அக் கவறு இருகால் சிறு தாயம் இட வேண்டின அளவிலே ஒரு கால் சிறு தாயம் இடப்பட்டவனைப் போல் செறிந்த துயரிலே வருந்தவோ?

நீ பலரும் தூற்றும் அலருக்கு அஞ்சாய்; இதைக் கைவிட்டு இவளை மணந்து கொண்டு கூடுதற்கு அருளி அதற்குரிய திறத்தை அறிந்து எழுந்து தேரில் ஏறுவாயாக

*இங்ஙனம் ஏறி வந்து மணந்தால் இவள் நலம் உழைப்பாளி இடத்துப் பெறும் பொருளைவிட அதிகமாகப் பெருகுவ தாகுக' எனத் தோழி தலைவனிடம் வரைவு கடாயினாள்*

## 328. இனிய உயிரைப் போக்கும்

அரிதே, தோழி நாண் நிறுப்பாம் என்று உணர்தல்;
பெரிதே காமம்; என் உயிர் தவச் சிறிதே;
பலவே யாமம்; பையுளும் உடைய;
சிலவே, நம்மோடு உசாவும் அன்றில்;
அழல் அவிர் வயங்கு இழை ஒலிப்ப உலமந்து,
எழில் துஞ்சு மயிலின் நடுங்கி, சேக்கையின்
அழல் ஆகின்று, அவர் நக்கதன் பயனே.

மெல்லிய நெஞ்சு பையுள் கூர, தம்
சொல்லினான் எய்தமை அல்லது, அவர் நம்மை
வல்லவன் தைஇய வாக்கு அமை கடு விசை
வில்லினான் எய்தலோ இலர்மன்; ஆயிழை!
வில்லினும் கடிது, அவர் சொல்லினுள் பிறந்த நோய்.

நகை முதலாக, நட்பினள் எழுந்த
தகைமையின் நலிதல் அல்லது அவர் நம்மை
வகைமையின் எழுந்த தொல் முரண் முதலாக,
பகைமையின் நலிதலோ இலர்மன்; ஆயிழை!
பகைமையின் கடிது, அவர் தகைமையின் நலியும் நோய்.

'நீயலேன்' என்று என்னை அன்பினால் பிணித்து, தம்
சாயலின் சுடுதல் அல்லது, அவர் நம்மைப்
பாய் இருள் அற நீக்கும் நோய் தபு நெடுஞ் சுடர்த்
தீயினால் சுடுதலோ இலர்மன்; ஆயிழை!
தீயினும் கடிது, அவர் சாயலின் கனலும் நோய்.
ஆங்கு
அன்னர் காதலராக, அவர் நமக்கு
இன் உயிர் போத்தரும் மருத்துவர் ஆயின்,
யாங்கு ஆவதுகொல்? – தோழி! – எனையதூஉம்
தாங்குதல் வலித்தன்று ஆயின்
நீங்கரிது உற்ற அன்று, அவர் உறீஇய நோயே. – *கலி 137*

தோழியே! நம்முடைய நாணத்தை நம்மிடத்தில் நிறுத்து வோம் என்று உணர்ந்திருத்தல் அரிது. அதன் காரணம் என்னவென்றால் வேட்கை பெரிதாக உள்ளது. அதனால் தேய்ந்த உயிர் மிகவும் சிறியதாக இருக்கின்றது. நமக்கு வருத்தத்தைத் தரும் இரவுகளும் பல உள்ளன. அந்த இரவு களில் உறங்கதாபடி துணையைப் பிரிந்து வருந்தி நம்மோடு பேசும் அன்றில் பறவைகளும் சில உள்ளன. ஆதலால் அந்த உயிர் தாங்குவது அரிது. முடிவில் அவர் நம்முடன் கூடியதால் பெற்ற பயன், இறகை உதிர்த்திட்ட அழகற்ற மயிலைப் போன்று பொலிவற்ற காரணத்தால், நாம் நடுங்கப் படுக்கை யில் கிடந்து உடல் நெருப்பில் ஓட வைத்த பொன்னால் செய்த சிலம்பு முதலியன ஒலிக்கும் படி உலவி வருந்தக் காமத்தீ உண்டாகிய ஒன்று மட்டுமே!

அவர் நெஞ்சம் போல் வலிவுடையதாய் இருப்பதன்றி நம் வலியற்ற நெஞ்சம் வருத்தம் மிகுமாறு உன்னைப் பிரியேன் எனத் தெளிவித்த சொல்லால் வருந்தியது அல்லாது அவர் நம்மை, தொழில் வல்லவனால் செய்யப்பட்ட வடிவு அமைந்த மிக்க விசையுடைய வில்லால் எய்யும் தொழிலைச் செய்வதை உடையவர் அல்லர், என்றாலும் தலைவியே, அவர் தெளிவித்த சொல்லால் பிறந்த நோய் வில்லை விடக் கடிதாக உள்ளது.

'நகு நயம் மறைத்தல்' என்ற மெய்ப்பாடு காரணமாய் நாம் கொண்ட நட்பில் உண்டான தகுதிப்பாடுகளால் வருத்துதல் ஒழிய, அவர் நம்மைப் பொருள்களின் தன்மை யால் உண்டான பழைய மாறுபாடு காரணமாய் உண்டான பகையால் வருத்தவில்லை. ஆயினும், தோழியே, அவர் தம் தகுதியால் வருத்துவது நிற்க, அவர் நம்மை வருத்தும் நோய் பகைமையை விடக் கடியதாய் உள்ளது.

'உன்னைப் பிரியேன்' என்று கூறி, என்னைத் தன் அன்பால் பிணித்தவர் மென்மையால் சுடுதல் நீங்க, அவர் நம்மைப் பரந்த இருளை அவ் இடத்தினின்றும் போகுமாறு நீக்கும் நீண்ட கொழுந்தையுடைய தீயால் சுடுதல் இலர். ஆனால் தலைவியே, அவர் அங்குச் செய்த காம நோய், கெடுவதற்குக் காரணமான மென்மையால் நின்று எரியும் காமநோய் தீயைவிடக் கடிதாக உள்ளது.

*தோழியே! அத் தன்மையுடைய நெஞ்சினர் நம்மிடம் காதல் கொண்டவராய் எண்ணி, முன்பு நம்மை நீங்குதற்கு அரிய இயற்கைப் புணர்ச்சியினின்று அவர் நம்மை வருத்திய நோயைத் தான் பொறுத்தலைத் துணிந்த துணிவை ஆராய்ந்து பார்த்தால், எப்படியும் நம் இனிய உயிரைப் போக்கும் அவர் நமக்கு உயிர் நீங்காமல் மீட்கும் மருத்துவராய் இருந்தால், அந்நிலை எப்போது அவர்க்கு உண்டாவது? என்று வன்புறை எதிரழிந்து சொன்னாள்.*

## 329. மடலூர இன்பம் வாய்த்தது

எழில் மருப்பு எழில் வேழம் இகுதரு கடாத்தால்
தொழில் மாறித் தலை வைத்த தோட்டி கைநிமிர்ந்தாங்கு,
அறிவும், நம் அறிவு ஆய்ந்த அடக்கமும், நாணொடு,
வறிதாகப் பிறர் என்னை நகுபவும், நகுபு உடன்,
மின் அவிர் நுடக்கமும் கனவும் போல், மெய் காட்டி—
என் நெஞ்சம் என்னோடு நில்லாமை நனி வெளவி,
தன்நலம் கரந்தாளைத் தலைப்படும் ஆறு எவன்கொலோ?
மணிப் பீலி சூட்டிய நூலொடு, மற்றை
அணிப் பூளை, ஆவிரை, எருக்கொடு, பிணித்து, யாத்து,
மல்லல் ஊர் மறுகின்கண் இவட் பாடும், இஃது ஒத்தன்—
எல்லீரும் கேட்டீமின் என்று.

படரும், பனை ஈன்று மாவும் சுடர் இழை,
நல்கியாள், நல்கியவை

பொறை என் வரைத்து அன்றி, பூநுதல் ஈத்த
நிறை அழி காம நோய் நீந்தி, அறை உற்ற
உப்பு இயல் பாவை உறை உற்றது போல,
உக்குவிடும் என் உயிர்.

பூளை, பொல மலர் ஆவிரை – வேய் வென்ற
தோளாள் எமக்கு ஈத்த பூ

உரிது என் வரைத்து அன்றி, ஒள்ளிழை தந்த
பரிசு அழி பைதல் நோய் மூழ்கி, எரி பரந்த
நெய்யுள் மெழுகின் நிலையாது, பை பயத்
தேயும் அளித்து என் உயிர்.

இளையாரும், ஏதிலவரும் உளைய, யான்
உற்றது உசாவும் துணை.
என்று யான் பாடக் கேட்டு,
அன்புறு கிளவியாள் அருளி வந்து அளித்தலின்—
துன்பத்தில் துணையாய மடல் இனி இவள் பெற
இன்பத்துள் இடம்படல் என்று இரங்கினள்— அன்புற்று,
அடங்கு அருந் தோற்றத்து அருந் தவம் முயன்றோர் தம்
உடம்பு ஒழித்து உயர் உலகு இனிது பெற்றாங்கே.

*– கலி 138*

*'தலைவி மின்னின் நுடக்கமும் கனவின் தோற்றமும் போன்ற தன் வடிவைக் காட்டினாள் என்னுடன் முற்படக் கூடினாள் பிறர் என்னை இகழ்ந்து சிரிப்பனவற்றையும் எனக்குக் காட்டினாள் என் நெஞ்சம் என்னுடன் கூடி நில்லாமல் அழகிய மருப்பையும் அழகையும் கொண்ட யானை மதத்தால் பாகனுக்குச் செய்யும் தொழில்களைத் தவிர்த்து வேண்டியபடியே நடக்காதபடி தன்னை விலக்கும் தோட்டியையும் கை கடந்தது போன்று, தன் மீது ஏற்பட்ட வேட்கையால் என் ஏவலைச் செய்தலை விட்டு வேண்டிய வண்ணம் நடக்காதபடி தனக்குக் காவலான அறிவும், நம் அறிவாய் ஆராய்ந்த அடக்கமும் இயல்பான நாணத்துடனே பொருந்தி என் நெஞ்சைக் கைக் கொண்டாள் தன் நலத்தை நான் காணாமல் மறைத்தாள், அவளைக் கூடும் வழி எது என்று ஆராய்ந்து இனி மடல் ஏறுதலே அவளைக் கூடும் வழி என்று எண்ணினேன் (நான் ஏறும்) மடல் குதிரையில் சூட்ட வேண்டி நூலால் நீலமணி போன்ற நிறம் கொண்ட மயிற் பீலியையும் பூளைப் பூவையும் ஆவிரம் பூவையும் எருக்கம் பூவுடன் சேர்த்துத் தொடுத்து அம் மடல் மாவில் கட்டி வளமையுடைய ஊரின் தெருவில் இவன் இவளை (தலைவியை)ப் பாடும்; இதனை எல்லாரும் கேட்பீர்! என்று கூறிப் பாடத் தொடங்கினேன்.*

*"விளங்கும் அணியையுடைய என்னால் விரும்பப்பட்டவள் எனக்குக் காதலித்தத் தந்தவை வருத்தமும் வருத்தத்தால் உண்டான பனைமரம் ஈன்ற மடலால் செய்த குதிரையும் ஆகும்*

"என் உயிர் பொறுக்கும் எனது எல்லை மீற, பொலிவுடைய நெற்றியையுடையவள் தந்த நிறை என்னும் குணம் அழிதற்குக் காரணமான காம நோயை நீந்தி, உப்புப் பாத்தியில் இருந்த உப்பு மழைத்துளியை அடைந்த தன்மையைப் போலக் கரைந்தது.

"மூங்கிலை வென்ற தோளையுடையவள் எனக்கு அளித்த பூக்கள் பூளைப் பூவும், பொன் போன்ற ஆவிரம் பூவுமாகும்

"ஒளி பொருந்திய அணியை உடையவள் என்னால் பொறுத்துக் கொள்ள இயலாதபடி எனக்குத் தந்த என் இயல்புகள் அழிவதற்குக் காரணமான, வருத்தத்தை உடைய காம நோயால், என் உயிர் அழுந்தி, நெருப்புப் பரவிய நெய்யுள் கிடந்த மெழுகு மெல்லெலன உருகித் தேய்வது போல, நிலையில்லாது மெத்தென மெத்தெனத் தேய்கின்றது இஃது எல்லாராலும் அருளத்தக்க தன்மை கொண்டது

"நான் அடைந்த காம நோய்க்கு நான் வருந்தும்படி உரையாடும் துணை இளைய பிள்ளைகளும் இக் காம நோய்க்கு அப்பாற்பட்ட வருமே இவர்கள் தவிர பிறர் இல்லை.

"இவ்வாறு நான் பாட, அன்புடைய சொல்லையுடையவள், அதைக் கேட்டு அருளி அதன் பின் அன்பு கொண்டு வந்து என்னை அளித்தலால், மன வேட்கை அடங்கிய செய்தற்கு அரிய தவத்தை முயன்றவர், தம் உடலை இந்த உலகத்தில் விடுத்துச் சுவற்க்கத்தை இனிதாகப் பெற்றதைப் போல், துன்பத்துக்குத் துணையாக விளங்கிய மடல், இனி இவளைப் பெறும்படியாய் இன்பத்துக்கு இடம் உண்டாகக் கடவன் என்று இரக்கம் கொண்டாள்" என்றான், தலைவன்.

## 330. துயர் நீத்தல் உம் கடமை!

சான்றவிர், வாழியோ! சான்றவிர்! என்றும்
பிறர் நோயும் தம் நோய் போல் போற்றி, அறன் அறிதல்
சான்றவர்க்கு எல்லாம் கடன் ஆனால், இவ் இருந்த
சான்றீர்! உமக்கு ஒன்று அறிவுறுப்பேன்; மான்ற
துளி இடை மின்னுப் போல் தோன்றி, ஒருத்தி,

ஒளியோடு உரு என்னைக் காட்டி, அளியள், என்
நெஞ்சு ஆறு கொண்டாள் அதற்கொண்டும் துஞ்சேன்,

அணி அலங்கு ஆவிரைப் பூவோடு எருக்கின்
பிணையல் அம் கண்ணி மிலைந்து, மணி ஆர்ப்ப,
ஓங்கு இரும் பெண்ணை மடல் ஊர்ந்து, என் எவ்வ நோய்
தாங்குதல் தேற்றா இடும்பைக்கு உயிர்ப்பாக
வீங்கு இழை மாதர் திறத்து ஒன்று, நீங்காது,
பாடவேன், பாய் மா நிறுத்து.

யாமத்தும் எல்லையும் எவ்வத் திரை அலைப்ப,
'மா மேலேன்' என்று, மடல் புணையா நீந்துவேன்—
தே மொழி மாதர் உறாஅது உறீஇய
காமக் கடல் அகப்பட்டு.

உய்யா அரு நோய்க்கு உயவாகும் — மையல்
உறீஇயாளள் ஈத்த இம் மா.

காணுநர் எள்ளக் கலங்கி, தலை வந்து, என்

ஆண் எழில் முற்றி உடைத்து உள் அழித்தரும் —
'மாண் இழை மாதராள் ஏஎர்' என, காமனது
ஆணையால் வந்த படை .

காமக் கடும் பகையின் தோன்றினேற்கு ஏமம்—
எழினுதல் ஈத்த இம் மா.

அகை எரி ஆனாது, என் ஆர் உயிர் எஞ்சும்
வகையினால், உள்ளம் சுடுதரும் மன்னோ—
முகை ஏர் இலங்கு எயிற்று இன் நகை மாதர்
தகையால் தலைக்கொண்ட நெஞ்சு!

அழல் மன்ற, காம அரு நோய்; நிழல் மன்ற
நேரிழை ஈத்த இம் மா.
ஆங்கு அதை,
அறிந்தனிர்ஆயின், சான்றவிர்! தான் தவம்
ஒரீஇ, துறக்கத்தின் வழீஇ, ஆன்றோர்
உள் இடப்பட்ட அரசனைப் பெயர்த்து, அவர்
உயர் நிலை உலகம் உறீஇயாங்கு, என்
துயர் நிலை தீர்த்தல் நும்தலைக் கடனே. — *கலி 139*

"நற்குணங்கள் அமையப் பெற்றவரே! நற்குணங்கள் அமையப் பெற்றவரே, வாழ்க! பிறரது துன்பமும் தம்முடைய துன்பம் போல எந் நாளும் பேணி அதனால் பெறும் அறத்தை அறிந்து செய்தல் உலகத்தில் உள்ள சான்றோர்க் கெல்லாம் முறைமையானால், உமக்கும் அது முறைமை என எண்ணி உமக்கு ஒன்றைத் தெரிவிப்பேன். அஃது யாது என்றால் ஒருத்தி மழைக்கு நடுவில் மின்னலைப் போல் வந்து தோன்றித் தன்னொளியுடன் தன் வடிவையும் என்னைக் காணச் செய்து, என்னை அளிக்கும் தன்மை உடையவளாய் அளித்துப் பின்பு என் நெஞ்சைத் தான் வரும் வழியாகக் கொண்டு விட்டாள். அதனால் துயில் கொள்ளாமல் அசையும் அழகையுடைய ஆவிரம்பூவுடனே எருக்கம்பூ மாலையையும் சூடி, வளர்கின்ற பனை மடலால் செய்த குதிரையை மணிகள் ஒலிக்க ஏறி, அந்தப் பாயும் குதிரையை மனத்தில் நிறுத்தி, யான் நீங்காமல் நின்று வருத்தத்தைத் தரும் என் காம நோயைத் தாங்க மாட்டாமல் உண்டான வருத்தத்திற்கு இளைப்பாறுதலாய், இறுகின அணியை அணிந்த மங்கை என்னை வருத்தியதில் ஒரு பகுதியை நான் பாடுவேன். அதைக் கேளுங்கள்.

"தேன் போன்ற சொல்லையுடைய மங்கை தான் காமு றாது என்னைக் காமம் கொள்ளச் செய்து, காமக்கடலில் அகப்படுத்தி, உசாத்துணை இல்லாத நள்ளிரவிலும், உசாத் துணையுள்ள பகலிலும் மன வருத்தம் என்ற அலைகள் வந்து வருத்துதலால் மாவின்மீது இருக்கின்றேன் என்று மனத்தால் எண்ணியிருந்து, அம் மடல் மா ஒரு தெப்பமாக அந்தக் கடலை நீந்துவேன். அதுவே என் நிலையாகும் என்றான்.

"என்னை மயங்கச் செய்தவள் அதற்கு மருந்தாக இம் மடல் மா. நான் பிழையாமைக்குக் காரணமான காம நோய்க்குப் பிழைக்கும் வழியாய்ச் செய்வதாய் உள்ளது.

"சிறந்த அணியை உடைய மங்கை அழகால் வந்த வருத்தம் என்று நான் கூறும் படியாய்க், காமனின் ஏவலால் வந்த காம நோயாம் படை, என்னைக் கண்டார் இகழுமாறு, நான் கலங்க, என்னிடம் வந்து என் ஆண் தன்மையான மதிலைச் சூழ்ந்து புறப் பகுதியை எல்லாம் உடைத்துப் பின் உள்வாயை அழிக்கும்" என்றான்.

"காமம் என்ற கடிய பகை ஆண்மையை உள்ளும் புறமும் அழிப்பதலால் இங்ஙனம் வடிவு கொண்டு தோன்றின எனக்கு அழகிய நெற்றியை உடையவள் தந்த இந்த மடல் மா பரிகாரம் ஆயிற்று" என்றான்

"முல்லை அரும்பைப் போன்று விளங்கும் பற்களையும் இனிய மகிழ்ச்சியையும் உடைய மங்கையின் அழகால் அவளிடத்தைப் பற்றிக் கொண்ட என் நெஞ்சால் உள்ளத்தைச் சுடப்பட்டு எரியும் காமம் என்னும் தீ என் அரிய உயிர் போகும் தன்மையால் அமையாதே நின்று சுடும். ஐயோ! நான் எங்ஙனம் ஆற்றுவேன்!" என்றான்.

"காமம் என்ற பொறுத்தற்கு அரிய நோய் உறுதியான நெருப்பாகும்; ஒத்த அணியை உடையவள் அதற்குக் கழு வாயாகத் தந்த இந்த மடல் மா அதற்கு ஒரு நிழலாக இருந்தது" என்றான்

"பின் என்னிடத்துப் பொருந்திய வருத்தத்தை நீவிர் அறிந்தீர் என்றால், சான்றோராய் உள்ளீர்! 'சான்றோர், இவன் தவம் செய்தற்கு உரியவன் என்று கொள்ளப்பட்ட மன்னனை, அவன் தவம் செய்தலினின்று விலக்கித் துறக்கத் தில் செல்வதினின்று தவறுதலால், அவனை அந் நிலை யினின்று மீட்டுத் தவம் செய்வித்து உயர்ந்த துறக்கத்துக்கே போகவிட்டுத் துன்பத்தைத் தீர்த்தது போன்று, என் துயரின் இயல்பைப் போக்குதலும் உம்மிடத்து முறைமையாகும்" என்று சான்றோரை நோக்கிச் சொன்னான் காமுற்ற தலைவன்

## 331. உமக்குப் புகழும் அறமும்

கண்டவிர் எல்லாம் கதுமென வந்து, ஆங்கே
பண்டு அறியாதீர் போல நோக்குவீர்; கொண்டது
மா என்று உணர்மின்; மடல் அன்று மற்று இவை
பூ அல்ல; பூளை; உழிஞையோடு யாத்த
புன வரை இட்ட வயங்கு தார்ப் பீலி,
பிடி அமை நூலொடு பெய்ம் மணி கட்டி,
அடர் பொன் அவிர் ஏய்க்கும் ஆவிரங் கண்ணி,
நெடியோன் மகன் நயந்து தந்து, ஆங்கு அனைய
வடிய வடிந்த வனப்பின், என் நெஞ்சம்

இடிய இடைக் கொள்ளும் சாயல், ஒருத்திக்கு
அடியுறை காட்டிய செல்வேன்; மடியன்மின்;
அன்னேன் ஒருவனேன், யான்
என்னானும், 'பாடு' எனில், பாடவும் வல்லேன், சிறிது ஆங்கே
'ஆடு' எனில், ஆடலும் ஆற்றுகேன்; பாடுகோ–
என் உள் இடும்பை தணிக்கும் மருந்தாக,
நன்னுதல் ஈத்த இம் மா?

திங்கள் அரவு உறின், தீர்க்கலார் ஆயினும்,
தம் காதல் காட்டுவர், சான்றவர் – இன் சாயல்
ஒண்டொடி நோய் நோக்கில் பட்ட என் நெஞ்ச நோய்
கண்டும், கண்ணோடாது, இவ் ஊர்.

தாங்காச் சினத்தோடு காட்டி உயிர் செகுக்கும்
பாம்பும் அவைப் படில், உய்யுமாம் – பூங் கண்
வணர்ந்து ஒலி ஐம்பாலாள் செய்த இக் காமம்
உணர்ந்தும், உணராது, இவ் ஊர்.

வெஞ் சுழிப் பட்ட மகற்குக் கரை நின்றார்

அஞ்சல் என்றாலும் உயிர்ப்பு உண்டாம் – அம் சீர்ச்
செறிந்த ஏர் முறுவலாள் செய்த இக் காமம்
அறிந்தும், அறியாது, இவ் ஊர்.
ஆங்க
என் கண் இடும்பை அறீஇயினென்; நும்கண்
தெருளுற நோக்கித் தெரியுங்கால், இன்ன
மருளுறு நோயொடு மம்மர் அகல
இருளுறு கூந்தலாள் என்னை
அருளுறச் செயின், நுமக்கு அறனுமார் அதுவே.

*– கலி 140*

*"என்னைப் பார்த்த நீங்கள் எல்லாம் விரைய வந்து அவ் ஊரில் முன்னம் அறியாதீர் போன்று பார்க்கின்றீர் நா அமைக்கப் பட்ட மணியைக் கழுத்தில் கட்டிக் கையினால் பிடித்து அமைந்த கயிற்றோடு நான் எனது கையிலே கொண்டது 'மடல் மா' இல்லை ஏறுபவர் ஏறும் குதிரை என்றும் தலையிலும் மார்பிலும் உள்ள இவை தகட்டுப்*

பொன்னின் விளக்கம் போன்ற ஆவிரம் பூவாற் செய்த கண்ணியும் உழிஞைப்பூவுடன் பூளைப் பூவும். மயில் உதிர்த்த பீலியும் விளங்கும் பூ அன்று. என் உள்ளத்தால் நன்று என்று எண்ணி நான் கட்டிய பூந்தார் என்றும் அறிவீராக! திரு மாலின் மகனான காமன் என் தலைமையை அழிக்க விரும்பிக் கொடுக்கப்பட்டுத் தன் உடலில் அத்தகைய நன்மைகள் எல்லாம் தோன்றிய வனப்பாலும் சாயலாலும் வடுவகிரின் தன்மை கொண்ட விழிகளாலும் என் மனம் என்ற அரண் இடிந்து விடும்படி நடுவே வந்து என்னைக் கவர்ந்து கொள்ளும் ஒப்பில்லாதவளுக்கு நான் வழிபட்டு உறைதலை உலகத் தார்க்குக் காட்ட வேண்டிச் செல்கின்றேன். இதைக் கண்டு நீவிர் மனத்தில் வெறுத்துத் தளராதீர். நான் அத் தன்மையுடைய ஒருவன்" என்றான்.

"நீங்கள் என்னை நீ ஒன்றைப் பாடு எனக் கூறுவீராயின் எப்படியேனும் சிறிது பாடவும் வல்லேன், அம் மடல் மா மேலிருந்து, அம் மடல் மா இடமாகவும் வலமாகவும் அசையு மாறு உன் உடலை அசைப்பாய் என்று எனக்குச் கூறுவீரா யின், நான் அங்ஙனமே செய்வேன், இப்போது என் நெஞ்சின் காம நோயை ஆற்றும் மருந்தாக நன்னுதல் தந்த இந்தக் குதிரையைப் பாடுவேனா" என்றான்.

(அவர்கள் பாடு என்று கூறாததால் அவன் தலைவி தன்னை வருத்தியதைக் கூறுகிறான்.)

"திங்களைப் பாம்பு மறைக்கும் போது சான்றோர் அதனைக் கண்டு அதன் வருத்தம் தீர்க்க மாட்டாராயினும் அதன் மீது தமக்குள்ள அன்பைக் காட்டித் துன்பம் அடைவர். அதைப் போன்று இனிய மென்மையை உடைய மாதின் துன்பம் செய்யுப் பார்வையில் அகப்பட்ட என்னுடைய நெஞ்சில் காம நோயினைக் கண்ணால் பார்த்தும் இந்த ஊரில் உள்ளவர் அதைத் தீர்க்க மாட்டார் என்றாலும் கண் ணோட்டம் செய்யவில்லையே.

"மற்றவரால் தாங்க முடியாத சினத்துடன் தன் வடிவைக் காட்டி உயிரைப் போக்குகின்ற பாம்பும் பலர் நடுவில் அகப்பட்டால் சாகாது என்பது உலக வழக்கு, அதற்கு ஏற்பச் சான்றோர் அவையில் அகப்படின் உயிர் பிழைக்கவும் கூடும்.

அத்தயைன்மையன் நான் அல்லேன் இத்தகைய எனக்குப் பூப் போன்ற கண்ண்ணையும் கடைப்பகுதி குழன்ற கூந்தலையும் உடையவள் செய்த காம நோயின் வருத்தத்தை அறிந்திருந்தும் அதனைத் தீர்க்கும் வழியை அறியவில்லை

"கடுமையான வெள்ள நீர்ச் சுழியில் அகப்பட்ட ஒருவனுக்குக் கரையில் நின்றவர் நீருள் போய் மீட்காமல், 'அஞ்சாதே' என்று கரையில் நின்று கூறினாலும், அவனுக்கு வருத்தம் தீர்வது உண்டு அது போன்று, அழகிய சீரான பற்களை உடையவள் உண்டாக்கிய இக் காம நோயை அறிந்தும் இவ் ஊரவர் அதைத் தீர்க்க முடியாதவராயினும் கருணை காட்டவும் அறியவில்லையே!

என்னிடம் உண்டாகும் வருத்தத்தை நான் தெரிவித்தேன் இனி இதை நீங்கள் தெளிய ஆராயும் போது என் காம நோய் நீங்கும்படி இருண்ட கூந்தலையுடையவள் எனக்கு அருள் செய்யும்படி செய்வீராயின், அச் செயல் உங்களுக்கு அறமும் புகழும் ஆகும் என்றான் காமுற்ற தலைவன்.

### 332. அவனுக்கு அவளை தந்தார்!

அரிதினின் தோன்றிய யாக்கை புரிபு தாம்
வேட்டவை செய்து, ஆங்கு, காட்டி மற்று ஆங்கே,
அறம் பொருள் இன்பம் என்று அம் மூன்றின் ஒன்றன்
திறம் சேரார் செய்யும் தொழில்கள் அறைந்தன்று—
அணி நிலைப் பெண்ணை மடல் ஊர்ந்து, ஒருத்தி
அணி நலம் பாடி வரற்கு.

ஓரொருகால் உள்வழியள் ஆகி, நிறை மதி
நீருள் நிழல் போல், கொளற்கு அரியள் – போருள்
அடல் மாமேல் ஆற்றுவேன் என்னை மடல்மாமேல்
மன்றம் படர்வித்தவள் வாழி, சான்றீர்!

பொய் தீர் உலகம் எடுத்த கொடிமிசை,
மை அறு மண்டிலம் வேட்டனள் – வையம்
புரவு ஊக்கும் உள்ளத்தேன் என்னை இரவு ஊக்கும்
இன்னா இடும்பை செய்தாள் அம்ம, சான்றீர்!

கரந்தாங்கே இன்னா நோய் செய்யும்; மற்று இஃதோ
பரந்த சுணங்கின் பணைத் தோளாள் பண்பு?

**இடி உமிழ் வானத்து, இரவு இருள் போழும்**
**கொடி மின்னுக் கொள்வேன் என்றன்னள் — வடி நாவின்**
**வல்லார் முன் சொல் வல்லேன் என்னைப் பிறர் முன்னர்க்**
**கல்லாமை காட்டியவள் வாழி, சான்றீர்!**
**என்று ஆங்கே,**
**வருந்த மா ஊர்ந்து, மறுகின்கண் பாட,**
**திருந்திழைக்கு ஒத்த கிளவி கேட்டு, ஆங்கே,**
**பொருந்தாதார் போர் வல் வழுதிக்கு அருந் திறை**
**போல, கொடுத்தார், தமர்.** — *கலி 141*

*"பெறுவதற்கு அரிய மக்கள் உடல், முன் பிறப்பில் உள்ளம் மாறுபட்டு விரும்பிய தீவினைகளை ஆற்றி, அறம் பொருள் இன்பம் எனக் கூறப்பட்ட அந்த மூன்றில் அறம் செய்யாதவர்கள், இந்தப் பனை மடலை ஏறி அவ் ஊரிடத்தே எல்லாருக்கும் காட்டி, ஒரு மங்கையின் அழகைப் பாடி வருபதற்கு நூல்கள் விதிகளைப் கூறின ஆதலால் நானும் அதனையே துணிந்து மடல் ஏறிப் பாடுவேன் என்று சொன்னான்.*

*"சான்றோரே! வாழ்க! போரிடும் வெற்றியை உடைய குதிரையின் மீது இருந்து போர்த் தொழிலை நடத்துவோனான என்னை அந்தக் குதிரையல்லாத மடல் மாவிலே ஏறி அந்தக் களத்திலன்றி மன்றில் தன்னைச் செலுத்தியவள், ஒருகால் என் நெஞ்சுள், உள்ளிருந்து பின்பு நீரில் தோன்றிய முழுமதி யினுடைய நிழல் வாங்கிக் கொள்வதற்கு அரியவாறு போல் பெற்றுக் கொள்வதற்கு அரியவளாய் இருக்கின்றாள்" என்றான்*

*"சான்றோரே, கேளுங்கள், உலகத்தை எல்லாம் காக்க முயலும் உள்ளத்தை உடைய என்னை ஒருவரிடம் போய் இரக்கும் இன்னாத வருத்தத்தைச் செய்தவள், கிழக்குத் திக்கில் தோன்றின பொய்யில்லாத நன் மக்கள் உயர்த்திய புகழ்ந்த மாசில்லாத ஞாயிற்று மண்டிலத்தை நான் வாங்கிக் கொள்வதற்கு விரும்பியவளாய் உள்ளாள்*

*"பரவிய தேமலை உடைய மூங்கில் போன்ற தோளை உடையவள் தான் மறைந்த போதே பொறுப்பதற்கரிய நோயைச் செய்வாள் அவள் குணம் எக் காலமும் இந்தத் தன்மையுடையதோ?" என்றான்*

*சான்றீரே, வாழ்க! குற்றமுடைய சொற்களைச் சொல்லாத படி தெள்ளிய நாவினால் சொல்லைச் சொல்ல வல்லார் முன், சொல்லுதல் வல்லவனாகிய என்னைப் பிறர் முன் ஒன்றையும் கல்லாத தன்மையனாகக் காட்டியவள், இரவுக் காலத்தில் இடியை உமிழும் முகிலின் இருளைப் பிளக்கும் மின்னலை வாங்கிக் கொள்வேன் என்று எண்ணிய ஒருவன் தன்மையளாய் விளங்குகிறாள்" எனக் கூறி அவ் ஊர்த் தெருவில் கண்டவர் வருத்த மடல் மாவை ஏறிப் பாடிட, திருந்திய அணியையுடைய வளைத் தன் பெறுதற்குரிய சொற் களைச் சொல்லைக் கேட்டனர். பகைவர் போர்த் தொழிலில் வல்ல பாண்டிய மன்னனுக்கு அஞ்சி அரிய திறை கொடுக்கு மாறு போல், தம் குடிக்குப் பழுதாம் என்று அஞ்சி, அவளை அங்கேயே தந்தனர். இந்த மகட் கொடை இருந்தவாறு என்னே! எனக் கண்டார் வியந்து சொன்னார்.*

### 333. மார்பனைச் சார்ந்து நலம் பெற்றாள்

புரிவுண்ட புணர்ச்சியுள் புல் ஆரா மாத்திரை,
அருகுவித்து ஒருவரை அகற்றலின், தெரிவார்கண்
செய நின்ற பண்ணினுள் செவி சுவை கொள்ளாது,
நயம் நின்ற பொருள் கெடப் புரி அறு நரம்பினும்
பயன் இன்று மன்றம்ம, காம இவள் மன்னும்
ஒள் நுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்,
முள்நுனை தோன்றாமை முறுவல் கொண்டு அடக்கி, தன்
கண்ணினும் முகத்தினும் நகுபவள்; பெண் இன்றி
யாவரும் தண் குரல் கேட்ப, நிரை வெண் பல்
மீ உயர் தோன்ற, நகாஅ நக்காங்கே,
பூ உயிர்த்தன்ன புகழ் சால் எழில் உண்கண்
ஆய் இதழ் மல்க அழும்.

ஒஒ! அழிதகப் பாராதே, அல்லல் குறுகினம்
காண்பாம் கனங்குழை பண்பு.

என்று, எல்லீரும் என் செய்தீர்? என்னை நகுதிரோ?
நல்ல நகாஅலிர் மற்கொலோ – யான் உற்ற
அல்லல் உறீஇயான் மாய மலர் மார்பு
புல்லிப் புணரப் பெறின்.

'எல்லா! நீ உற்றது எவனோ மற்று?' என்றீரேல், 'எற்சிதை
செய்தான் இவன்' என. 'உற்றது இது' என,
எய்த உரைக்கும் உரன் அகத்து உண்டாயின்
பைதல ஆகிப் பசக்குவமன்னோ – என்
நெய்தல் மலர் அன்ன கண்?

கோடு வாய் கூடாப் பிறையை, பிறிது ஒன்று
நாடுவேன், கண்டனென்; சிற்றிலுள் கண்டு, ஆங்கே,
ஆடையான் மூஉய் அகப்படுப்பேன்; சூடிய,
காணான், திரிதரும் கொல்லோ – மணி மிடற்று
மாண் மலர்க் கொன்றையவன்?

'தெள்ளியேம்' என்று உரைத்து, தேராது, ஒரு நிலையே
'வள்ளியே ஆக!' என நெஞ்சை வலியுறீஇ,
உள்ளி வருகுவர்கொல்லோ ? வளைந்து யான்
எள்ளி இருக்குவேன் மற்கொலோ? நள்ளிருள்
மாந்தர் கூடி கொண்ட கங்குல், கனவினான்,
தோன்றினனாக, தொடுத்தேன்மன், யான்; தன்னைப்
பையெனக் காண்கு விழிப்ப, யான் பற்றிய
கையுளே மாய்ந்தான், கரந்து.

கதிர் பகா ஞாயிறே! கல் சேர்தி ஆயின்,
அவரை நினைத்து, நிறுத்து என் கை நீட்டித்
தருகுவைஆயின், தவிரும்–என் நெஞ்சத்து
உயிர் திரியா மாட்டிய தீ.

மை இல் சுடரே! மலை சேர்தி நீ ஆயின்,
பௌவ நீர்த் தோன்றிப் பகல் செய்யும் மாத்திரை,
கைவிளக்காகக் கதிர் சில தாராய்! என்
தொய்யில் சிதைத்தானைத் தேர்கு.

சிதைத்தானைச் செய்வது எவன் கொலோ? எம்மை
நயந்து, நலம் சிதைத்தான்.

மன்றப் பனைமேல் மலை மாந் தளிரே! நீ
தொன்று இவ் உலகத்துக் கேட்டும் அறிதியோ?
மென்தோள் ஞெகிழ்த்தான் தகைஅல்லால், யான் காணேன்–
'நன்று தீது என்று பிற.

நோய் எரியாகச் சுடினும், சுழற்றி, என்
ஆய் இதழ் உள்ளே கரப்பன்—கரந்தாங்கே
நோய் உறு வெந் நீர்; தெளிப்பின், தலைக் கொண்டு
வேவது, அளித்த இவ் உலகு.

மெலியப் பொறுத்தேன்; களைந்தீமின்—சான்றீர்!—
நலிதரும் காமமும் கௌவையும் என்று, இவ்
வலிதின் உயிர் காவாத் தூங்கி, ஆங்கு, என்னை
நலியும் விழுமம் இரண்டு.
எனப் பாடி,
இனைந்து நொந்துஅழுதனள்; நினைத்த நீடு உயிர்த்தனள்
எல்லையும் இரவும் கழிந்தன என்று எண்ணி, எல்லிரா
நல்கிய கேள்வன் இவன்—மன்ற, மெல்ல
மணியுள் பரந்த நீர் போலத் துணிவாம்—
கலம் சிதை இல்லத்துக் காழ் கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து, நலம் பெற்றாள்
நல் எழில் மார்பனைச் சார்ந்து. — *கலி 142*

*இது கண்டோர் கூற்று "கேட்பீராக! இவளுடனே விளையாடும் ஆயத்தார் எல்லாம் ஒன்று கூடி விளையாடும் அளவிலும் முள்ளைப் போன்று கூர்மையான தன் பல்லினது ஒளி தோன்றாமல் சிரிப்பதை உள்ளடக்கி, அச் சிரிப்பதற்குக் குறிப்பு - பிறர் அறியாமல் தன் கண்ணாலும் முகத்தாலும் சிரிப்பவள்; இப்போது பெண் தன்மை இன்றிப் பிறர் கேளாது சொல்லும் மென்மையான சொற்களை எல்லாரும் கேட்குமாறு சொல்லி, வரிசையான வெண்மையான முத்தாம் மேற் பற்கள் தோன்றப் பெரிதாய்ச் சிரித்து, சிரித்த அப் போதே பூ வெடித்த தன்மையைப் போன்ற புகழ்ச்சி யுற்ற தன் விழிகள் இமை நீர் மல்குமாறு அழுவாள்.*

*இவள் இங்ஙனம் அழும்படிக் காம இன்பத்தை ஊழானது ஒருவரது மனம் ஒருவரிடம் புரிதல் உண்டான புணர்ச்சி தழுவிக் கொள்வதில் நிறைவு பெறாத அளவிலேயே இருவரில் ஒருவரை அரியராகும்படிச் செய்து நீக்குகிறது அதனால் இந்த நிலைமையை ஆராய்வாரிடத்து அஃது உறுதியாக யாழில் நரம்பு வீக்குதலைச் செய்ய அதனிடத்துத்*

தோன்றிய பண்ணுள், இனிமையைச் செவியால் கேட்டு இன்பம் அடைவதற்கு முன்பே விருப்பம் கொண்ட இனிமை என்ற பொருள் கெட்டுப் போக அறுகின்ற நரம்பினை விடப் பயனற்றுப் போயிற்று.

(இது முதல் வரும் அடிகள் அவளது கூற்றைக் கண்டோர் தாம் மேற்கொண்டு கூறுவது) "ஓ! இவளது அல்லலையுடைய குணம் நம்மை வருத்தும் என்று அறியாதே இவளைக் குறுகினோம்.

"அங்ஙனம் குறுகிய நாம் இதை முடியக் காண்போம் என்று எண்ணி வந்தீர், நீங்கள் என்ன செய்தீர்? என்னை இகழ் கின்றீரோ! இகழ்வீர் என்றால் யான் அடைந்த வருத்தத்தை எனக்குச் செய்தவனின் மாயத்தைச் செய்த மலர்ந்த மார்பை நான் முயங்கி அவனைச் சேரப் பெற்றாலும் அஃது இகழ் வானது அன்று. இவ்வாறு என்னைச் சிதைத் தலைச் செய்த வன் இவன் என்று நான் முன்னம் சொன்னதைக் கேட்டீர் நீவிர் 'அவனால் அடைந்ததுதான் எத்தன்மை யுடையது? என்று கேட்பீரானால், நான் அடைந்தது இதுவென, ஏழு வகைப்பட்ட அறத்தோடு நிற்கும் நிலைகளில் ஒன்றை உம் நெஞ்சத்துக்குச் சொல்லும் என் உள்ளத்துக்கு உண்டானால் நான் இங்ஙனம் வருந்துவேனா? வருந்த மாட்டேன். அந்த அறிவு கெட்டதால் யான் அடைந்த வருத்தம் இத்துணைய வருத்தம் என்று உங்கட்குச் சொல் வேன். அதைச் சொல்லக் கேளுங்கள்!" என்று சான்றோரைப் பார்த்துக் கூறுகின்றாள்.

"என் சிற்றிலில் கூடல் இழைத்து அவனைக் கூடு வேனோ என ஆராய்கின்ற நான் அந்தக் கூடலில் ஒரு பகுதியை இழைத்த அளவில் அந்த ஆராய்ச்சி வேறொன்றான வளைவு தன்னிடத்தில் முழுவதும் கூடப் பெறாத இளம்பிறையைக் கண்டேன். கண்டு அந்தப் பிறை பின்பு முழு மதியாய் ஆகி வருத்தும் என்று எண்ணினேன். நான் உடுத்திய துகிலால் அதை மூடிக் கொள்ளும் நான். அதை அகப்படுத்தினால் நீலமணியைப் போன்ற திருக்கழுத்தை உடைய சிவன் அப் பிறையைச் சூடிக் கொள்ள எண்ணி அஃது எங்கே எனத் தேடுவானோ என்று நினைத்தேன். அதனால் நெஞ்சே, இது பின்பு வருத்தம் என ஆராய்ச்சி இன்றி இதை அச் சிவனுக்குக்

கொடுத்து உதவி செய்ததாய் ஆகுக யாம் தெளிவுடையோம் என்று சொல்லி நெஞ்சை வலியுறுத்தி அதைக் கைவிட்டு, பின்பும் அவர் வருவாரோ, வரின் நான் அவர்க்கு உடம் படாது அவரை இகழ்ந்திருப்பேனோ? என்று நினைத்துச் சூழ்ந்த இருளையுடைய, ஊர்க் காவலர் காவலையுடைய இரவில் கனவில் வந்து நான் எண்ணியபடியே தோன்றினான் நான் அவனை வளைந்து பிடித்துக் கொண்டேன் ஆனால் பயன் யாது? நான் அவனைப் பிடித்துக் கொண்டதாக எண்ணி மெல்ல விழிக்க, நான் பிடித்த கையுள்ளே மறைந்து தோன்றாமல் போய் விட்டான் இனி ஞாயிற்றைக் கொண்டே (பகலில்) அவனைக் காண்பேன் என நினைத்து இருந்தேன்

மறுநாள் மாலையில் ஞாயிற்றை நோக்கிக் "கதிர்களைப் பிறர்க்குப் பகுத்துக் கொடுக்காத ஞாயிறே! நின் அந்தக் கதிர்களுடனே மறைமலையை அடைவாயானால், அவரை நினைத்துத் தேடிப் பிடித்து என் முன்கொண்டு வந்து நிறுத்தி, என் கையில் நின் கையை நீட்டித் தவறாது தருவாயானால், உயிரே திரியாய், என் நெஞ்சம் என்ற அகலில் ஏற்றிய காமத்தீ அவியும் என்றேன் அதற்கு அஞ் ஞாயிறு விடை கூறாது மறைமலைக்கே போனது அங்ஙனம் போவதால் அதைப் பார்த்து, 'களங்கம் இல்லாத சுடரே, மறைமலைக்குச் சேர் கின்றாயாயின் நீ கடலின் நீரில் மீண்டும் தோன்றிப் பகற் பொழுதை உண்டாக்கும் அளவும், தொய்யிற் கோலம் எழுதுபவனை எழுதாமல் விட்டவனை நான் தேடுவேன். நான் தேடும்படி உன் கதிர்களை எனக்குக் கை விளக்காய் அமையப் பகுத்துத் தருவாயாக' எனச் சொன்னேன் அஞ் ஞாயிறும் தான் அதை எனக்குத் தந்தால் அவனை (தலைவனைக் கண்டு) ஊடல் கொண்டு வருந்தவேன் என எண்ணி அவனைத் தராமல் போனான்

அதையுணர்ந்து அவன் எம்மை முன்பு விரும்பிப் பார்த்த பின்பு என் நலத்தைச் சிதைத்தான் இவ்வாறு சிதைத்தவனைக் கண்டால் நான் கூடாமல் என்ன செய்வது? என்று எண்ணி மறைமலையில் விழும் போது மன்றத்தின் பனை மேல் தோன்றும் மலையில் மாந்தளிரைப் போன்ற நிறம் கொண்ட வெயிலே, என் மென்மையான தோளை மெலியச் செய்த

வனின் வடிவழகின் தன்மையை யான் விரும்பிக் காண்ப தல்லது அவன் செய்த நன்மை தீமை ஆகிய எவற்றையும் காணேன் என்னை அல்லாது கூடுவதல்லாது ஊடல் கொண்டிருந்தார் என்று கேட்டு அறிந்ததுண்டோ எனச் சொன்னேன் அவ்வாறு சொல்லி, காம நோய் என் மனத்தைச் சுழலுமாறு செய்தது; நெருப்பாய் நின்று சுட்டது ஆனாலும் அதைத் தோன்றாமல் மனத்துள்ளேயே மறைப்பேன் அதை மறைத்தாற் போல அழகிய மலர் இதழ் போன்ற கண் கொண்ட காம நோயை அடையும் வெப்பமான நீரையும் மறைப்பேன் அதற்குக் காரணம் யாது என்றால் அதைத் தெளித்தால் இந்த உலகம் வேகும் அதனால் மறைத்தேன் என்று நான் ஆற்றிய அருமையையும் சொன்னேன் இது காறும் யான் அடைந்த வருத்தம் இது தான் என்று நின்ற சான்றோரை நோக்கிக் கூறினாள். பின்பும், "சான்றோரை' வருத்தும் காமமும் கௌவையும் எனக் கூறப்படும் இரண்டு துன்பம் உயிரே காவடி மரமாக இரு பக்கத்தும் தொங்கி என்னை வருத்துகின்றன இதனை உயிர் மெலியும் அளவும் வலிதில் பொறுத்துக் கொண்டேன் இனி இறப்பதற்கு முன்னம் இதனைப் போக்குவீராக எனச் சொன்னாள்'' என்று இப்படிச் சொல்லி, பகலும் இரவும் கூட்டம் இல்லாமல் கழிந்தன என எண்ணி வருந்தி அழுதாள் நீள நினைத்து உயிர்த்தாள் அதன் பின் விளக்கம் பொருந்திய இரவில் வந்து மணந்து கொண்ட கேள்வனின் நல்ல மார்பினைப் புணர்ந்தாள் தேய்க்கும் காலத்தில் சிதைக்கும் தேற்றாவின் விதையைக் கொண்டு கலத்தில் மெல்லத் தேற்றக் கலங்கிய நீர் தெளிவது போல் தன் சிதைவு தெளித்த பழைய நலத்தைப் பெற்றாள் ஆதலால் யாமும் இவர்களை மணியும் அதில் பிறந்த நீரும் ஒளியும் போல் வேறு அல்லர் என்று துணியக் கடவோம் இவ்வாறு கண்டவர் உரைத்தார்

## 334. இழந்த நலத்தை அடைந்தாள்

"அகல் ஆங்கண், இருள்நீங்கி, அணிநிலாத் திகழ்ந்த பின்
பகல் ஆங்கண் பையென்ற மதியம் போல், நகல் இன்று
நல் நுதல் நீத்த திலகத்தள், "மின்னி

மணி பொரு பசும் பொன்கொல் மா ஈன்ற தளிரின்மேல்
கணிகாரம் கொட்கும்கொல் என்றாங்கு அணி செல,
மேனி மறைத்த பசலையள், ஆனாது
நெஞ்சம் வெறியா நினையா, நிலன் நோக்கா,
அஞ்சா, அழாஅ, அரற்றா, இஃது ஒத்தி
என் செய்தாள்கொல்?" என்பீர்! கேட்டீமின்
பொன் செய்தேன்
மறையின் தன் யாழ் கேட்ட மானை அருளாது,

அறை கொன்று, மற்று அதன் ஆர் உயிர் எஞ்ச,
பறை அறைந்தாங்கு, ஒருவன் நீத்தான் அவனை
அறை நவ நாட்டில் நீர் கொண்டு தரின், யானும்
நிறை உடையேன் ஆகுவேன்மன்ற – மறையின் என்
மென் தோள் நெகிழ்த்தானை மேஎய், அவன் ஆங்கண்
சென்று, சேட்பட்டது, என் நெஞ்சு.

'ஒன்றி முயங்கும்' என்று, என் பின் வருதிர் மற்று ஆங்கே
'உயங்கினான்' என்று, ஆங்கு உசாதீர்; 'மற்று அந்தோ
மயங்கினாள்!' என்று மருடீர்; கலங்கன்மின்–
இன்உயிர் அன்னார்க்கு எனைத்து ஒன்றும் தீது இன்மை
என் உயிர் காட்டாதோ மற்று?

'பழி தபு ஞாயிறே! பாடு அறியாதார்கண்
கழியக் கதழ்வை' எனக் கேட்டு, நின்னை
வழிபட்டு இரக்குவேன் வந்தேன் என் நெஞ்சம்
அழியத் துறந்தானைச் சீறுங்கால், என்னை
ஒழிய விடாதீமோ என்று.

அழிதக மாஅந்தளிர் கொண்ட போழ்தினான், இவ் ஊரார்
தாஅம் தளிர் சூடித் தம் நலம் பாடுப,
ஆஅம் தளர்க்கும் இடைச் சென்றார் மீள்தரின்,
யாஅம் தளிர்க்குவேம்மன்.

நெய்தல் நெறிக்கவும் வல்லன்; நெடு மென் தோள்
பெய் கரும்பு ஈர்க்கவும் வல்லன்; இள முலைமேல்
தொய்யில் எழுதவும் வல்லன்; தன் கையில்
சிலை வல்லான் போலும் செறிவினான்; நல்ல
பல வல்லன் தோள் ஆள்பவன்.

நினையும் என் உள்ளம்போல், நெடுங் கழி மலர் கூம்ப;
இனையும் என்நெஞ்சம்போல், இனம்காப்பார் குழல் தோன்ற;
சாய என் கிளவிபோல், செவ்வழி யாழ் இசை நிற்ப;
போய என் ஒளியேபோல், ஒரு நிலையே பகல் மாய;
காலன் போல் வந்த கலக்கத்தோடு என்தலை
மாலையும் வந்தன்று, இனி.

இருளொடு யான் ஈங்கு உழப்ப, என் இன்றிப் பட்டாய்
அருள் இலை; வாழி! சுடர்!

ஈண்டு நீர் ஞாலத்துள் எம் கேள்வர் இல்லாயின்
மாண்ட மனம் பெற்றார் மாசு இல் துறக்கத்து
வேண்டிய வேண்டியாங்க எய்துதல் வாய்எனின்,
யாண்டும், உடையேன் இசை.

ஊர் அலர் தூற்றும்; இவ் உய்யா விழுமத்துப்
பீர் அலர் போலப் பெரிய பசந்தன—
நீர் அலர் நீலம் என, அவர்க்கு, அஞ்ஞான்று,
பேர் அஞர் செய்த என் கண்.

தன் உயிர் போலத் தழீஇ, உலகத்து
மன் உயிர் காக்கும் இம் மன்னனும் என்கொலோ—
இன் உயிர் அன்னானைக் காட்டி, எனைத்து ஒன்றும்
என் உயிர் காவாதது?
என ஆங்கு
மன்னிய நோயொடு மருள் கொண்ட மனத்தவள்,
பல் மலை இறந்தவன் பணிந்து வந்து அடி சேர,
தென்னவற் தெளித்த தேஎம் போல,
இன் நகை எய்தினள், இழந்த தன் நலனே. — *கலி 143*

*"பெரிய ஊரிலிருந்து கன வில் அவனுடன் புணர்ந்து இன்பம் அடைந்த காலத்து, இரவில் இருள் நீங்க விளங்கிய நிலவொளியை உடைய திங்கள் போன்று விளக்கம் பொருந்தி அவன் அகன்று போன பின்பு, பகற் பொழுதில் ஒளி குன்றிய மதியைப் போல் ஒளி கெட்டு நெற்றியின்று போன திலகம் உடையவளாக நீலமணியைத் தன் ஒளிவிட்டு மாறுபடும்*

பசிய பொன் ஒளியோ? மா மரத்தின் கொழுந்தின் மீது கோங்கம் மலரின் தாது பரந்த ஒளியோ? என மற்றவர் கூறும் தன் அணி தன் இடத்தினின்றும் நீங்கும்படி தன் மேனியை மறைந்த பசலை உடையாள், அமையாமல் தன் நெஞ்சம் இன்பத்தை அளிக்கும் பொருள்களுடன் அஞ்சி, அந்த இன்பம் நீங்கிய மையை எண்ணினாள் நாணத்தால் பிறர் எதிர் முகம் நோக்காது நிலத்தை நோக்கி நாணத்துடன் செல்ல அஞ்சி அழுதாள் பலவற்றையும் கூறினாள்: தன் குறை பலவற்றையும் சொன்னாள் இவள் ஒருத்தி எத்தகைய வருத்தம் அடைந் தாளோ என்று சொல்கின்றவர்களே! யான் பொன் செய்தேன் நான் அடைந்ததைக் கேட்பீராக:

அப்படிச் சொல்பவள், வஞ்சனையால், தன் வாசித்த யாழின் ஒலியைக் கேட்ட அசுணமாவை இந்த இன்பம் அடைந்தது என்று அருளாது, முன் செய்த வஞ்சனையைக் கெடுத்துப் பின்னை அதன் அரிய உயிர் நீங்கும்படி பறையை அடித்ததைப் போன்று, ஒருவன் முன் வஞ்சித்து இன்பத்தை ஏற்படுத்திப் பின்பு அந்த இன்பம் நீங்கும்படி என்னைக் கைவிட்டு விட்டான். அந்தக் களவொழுக்கத்தால் என் மென்மையான தோளினை மெலியச் செய்தவனை அவன் இருக்கின்ற இடத்தில் போய் வருவதற்கு நீண்ட காலம் ஆயிற்று, எனச் சொன்னாள்.

அங்ஙனம் சொன்னவள் அதைக் கொண்டு வரவும் கூடும் அதனுடன் நீங்களும் கூடி ஒன்பது கண்டமுடைய உலகத்தில் அவனை ஆராய்ந்து நீர் பிடித்துக் கொண்டு எனக்குத் தந்தால், நானும் மற்ற மகளிரைப் போன்று உறுதியாய் நிறை என்ற குணம் உடையேன், ஆவேன் எனவும் சொன்னாள்

அதைக் கேட்டவர் அதற்குப் விடை கொடாமல் பின்னால் வந்தனர் அதனால் இவள் ஒரு நாளிலேனும் அவனைச் சேர்ந்து முயங்குவாள் என்று எண்ணி என் பின் வருகின்றீர் இவ்வாறு உண்மையை உணர்ந்து கொள்ளாமல் கலங்காதே என் இனிமையான உயிரை ஒத்தவனுக்கு யாதொன்றும் தீமை இல்லாமல் அவன் உள்ளமையை அவன் உயிருடன் ஒன்றான எனது உயிர், இங்குக் காட்டாது போகுமோ? அவன் உயிர் தான் இறந்து பட்டமையை காட்டவில்லையோ? என்றாள்

அதைக் கேட்டவர் தனக்கு ஒரு துன்பம் இல்லாது நின்று நின்னை இவ்வாறு வருத்தினவனை ஞாயிறு வருத்தும் என்றார். அதைக் கேட்டு நடுவு நிலை செய்யாமல் உண்டாகும் பழி நீங்கும் ஞாயிறே! உலகியல் அறியாதவரிடத்து மிகவும் சினப்பதற்கு விரைவாய்ப் போவாய் என்று இவர்கள் சொல்லக் கேட்டு உன்னை வழிபட்டு நீ அவரை மிகச் சீறாத படி இரந்து கொள்ள வந்தேன். நீ என் மனம் கெடும்படி என்னைக் கை விட்டவனைப் பார்த்துச் சினம் கொள்ளும் படி என்னை நீங்க விடாதே! அதற்குக் காரணம் என்ன வென் றால் நீ அந்தக் காலத்து அவனிடம் மிகவும் சினந்தால் நான் இறக்கும்படி நேரும் எனவும் சொன்னாள். அப்படிக் கூறிய அளவில் கதிரவன் மறைகின்றமையைக் கண்டு பிரிந்தவர்க்கு வருத்தம் தரும்படியாய் மாந்தளிர் போன்ற நிறம் கொண்ட மாலைப் பொழுதுக்கு முன்புள்ள இக் காலத்தில் இந்த ஊரின் மங்கையர் மாலைகளைச் சூடி, ஆடவர் மீது தாம் வைத்த நலத்தைப் பாடி அன்பு காட்டுவர். அவர்களைப் போன்று ஆச்சா மரம் தளிர்க்கும் காட்டில் சென்றவர் மீண்டு வந்தால் நாம் மனம் மகிழ்ச்சி அடைவோம். ஆயினும் என்! அவர் வரக் காணவில்லையே எனவும் சொன்னாள். சொல்லி, யாம் மகிழும் வகை எவ்விதம் என்பீராயின் என் தோளைத் தழுவும் அவன் நெய்தற் பூவைப் புற இதழ் ஒடித்து மாலை யாய்க் காட்டிக் சூட்டவும் வல்லவன். மென் தோளில் காமனின் வில்லான கரும்பை எழுதவும் வல்லன். இளைய முலைமீது தொய்யில் குழம்பால் கொடியை எழுதவும் வல்லவன். இவ் வகையால் என் மனம் தளிர்க்கும் என்று அவள் சொன்னாள்.

அவ்வாறு அவள் சொன்ன அளவில் மாலைக் காலம் வந்தது. “அதைக் கண்டு அவனை நினையும் என் மனம் குவிவது போல் நீண்ட கழியின் மலர்கள் குவிய, இரங்கும் என் மனத்தைப் போன்று கோவலர் குழல் ஓசை உண்டாக, அலைவு பெற்ற என் மொழிகள் போன்று வண்டுகள் செவ் வழி பாடி அடங்கக், கெட்டுப் போன என் அழகைப் போல் பகற்காலத்தில் ஒளி மழுங்கக், கலக்கத்துடன் வந்த இயமனைப் போன்று என் மீது மாலைக் காலம் வந்தது. இனி எப்படி நான் ஆற்றவேன்” என்று சொன்னாள்.

அங்ஙனம் சொல்லி அம் மாலைப் போதை வரும்படி விட்ட ஞாயிற்றை நோக்கிச் சொல்லலானாள்: "சுடரே! நான் என்ற ஒரு தன்மையில்லாது இங்கு இரவில் வருந்தும்படி போனாய்! நீ அருள் உடையை அல்லை! இத் தன்மையால் நீ வாழ்க!" எனச் சொன்னாள்

சொல்லி, "இவ் இரவில் நான் இறந்துவிடினும் தீமை இல்லை என எண்ணி, மிக்க நீரையுடைய உலகத்தில் வாழ் கின்ற கேள்வர் இல்லையாயின் தம் கணவர் மேல் உள்ள வேட்கையுடனே இறந்துவிடும் மாட்சிமையுடைய மனத்தைப் பெற்றவர்கள் குற்றம் இல்லாத துறக்கத்தில் போய் அவர்கள் தாம் விரும்பியபடியே அடைவது மெய் என்று நூல்கள் கூறும் என்னின், நானும் அங்ஙனம் அவன் மீது விருப்பத் தோடு போய் அவனைப் பெற்று எங்கும் புகழ் உடையேன் ஆவேன் இனி வருத்தம் இல்லை" எனவும் சென்னாள் சொல்லி, 'முற்பகல் செய்தான் பிறன் கேடு, தன் கேடு பிற்பகல் கண்டுவிடும்' என்று கூறிய பழமொழி உள்ளது ஆதலால் நீரில் மலர்ந்த நீல மலர் என்று அவர் புகழ அவர்க்கு அந்த நாளில் அவர்க்கு வருத்தம் செய்த என் கண்கள் இப்போது பீர்க்கின் பூப்போன்று மிகுதியாய்ப் பசலை கொண்டன அதையும், என் வருத்தலையும் பார்த்தும் அருள் இல்லாததால் அவனை எனக்குக் காட்டாது இவ் ஊர் அலர் கூறும்'

"இனி நீங்காத இந்த இடும்பையில் உயிர் காத்தற்கு நாளே அரசன் என்று கருதித் தனது உயிரைக் காப்பது போல் உலகத்துப் பெரிய உயிர்களை எல்லாம் தழுவிக் காக்கும் இம் மன்னனும் எனக்கு இனிமையான உயிரைப் போன்ற வனைக் காட்டி எனது உயிரைச் சிறிதும் காவாமல் இருக்கும் தன்மை என்ன பயனை எண்ணியோ? காம நோயினால் மயக்கத்தை உடையவன் பல மலைகளைக் கடந்து போனான் அவன் மணம் செய்து கொள்ள வந்து பணிந்து தன்னடியைச் சேர்ந்தான் அதனால் பாண்டியனை உறவாக அவன் உள்ளத்தைத் தெளிவித்த நாட்டவர் இன்பம் அடைந்து வாழ்வது போல் அவனால் இழந்த நலத்தை அக மகிழ்ச்சி யுடன் அடைந்தாள் இஃது என்ன வியப்பு!" என்று கண்டவர் கூறினர்

## 335. நீங்கியது காம நோய்

நன்னுதாஅல், காண்டை; நினையா, நெடிது உயிரா!
என் உற்றாள்கொல்லோ? இஃது ஒத்தி பல்மாண்
நகுதரும் தன் நாணுக் கைவிட்டு, இகுதரும்
கண்ணீர் துடையா, கவிழ்ந்து, நிலன் நோக்கி,
அன்ன இடும்பை பல பெய்து, தன்னை
வினவுவார்க்கு ஏதில சொல்லி, கனவுபோல்
தெருளும் மருளும் மயங்கி வருபவள்
கூறப கேளாமோ, சென்று
'ஏல்லா! நீ என்அணங்கு உற்றனை யார்நின் இது செய்தார்?
நின் உற்ற அல்லல் உரை' என, என்னை
வினவுவீர்! தெற்றெனக் கேண்மின்; ஒருவன்
'குரற்கூந்தால்! என் உற்ற எவ்வம் நினக்கு யான்
உரைப்பனைத் தங்கிற்று, என் இன் உயிர்' என்று
மருவு காட்டி, மாறியதற்கொண்டு, எனக்கு
மருவு உழிப் பட்டது, என் நெஞ்சு.

எங்கும் தெரிந்து, அது கொள்வேன், அவன் உள்வழி.

பொங்கு இரு முந்நீர் அகம் எல்லாம் நோக்கினை
திங்களுள் தோன்றி இருந்த குறு முயால்!—
எம் கேள் இதன் அகத்து உள்வழிக் காட்டீமோ?
காட்டீயாய்ஆயின், கத நாய் கொளுவுவேன்;

வேட்டுவர் உள்வழிச் செப்புவேன்; ஆட்டி
மதியொடு பாம்பு மடுப்பேன் – மதி திரிந்த
என் அல்லல் தீராய்எனின்.

என்று, ஆங்கே, உன் நின்ற எவ்வம் உரைப்ப, மதியொடு
வெண் மழை ஓடிப் புகுதி, சிறிது என்னைக்
கண்ணோடினாய் போறி, நீ.

நீடு இலைத் தாழைத் துவர் மணற் கானலுள்
ஓடுவேன், ஓடி ஒளிப்பேன், பொழில்தொறும்
நாடுவேன்; கள்வன் கரந்திருக்கற்பாலன்கொல்?
ஆய் பூ அடும்பின் அலர்கொண்டு உதுக் காண், எம்
கோதை புனைந்த வழி.

உதுக்காண் சாஅய் மலர்காட்டி, சால்பிலான், யாம் ஆடும்
பாவை கொண்டு ஓடியுழி.

உதுக் காண்—தொய்யில் பொறித்த வழி.

உதுக்காண்—'தையால்! தேறு' எனத் தேற்றி, அறனில்லான்
பைய முயங்கியுழி.

அளிய என் உள்ளத்து, உயவுத் தேர் ஊர்ந்து
விளியா நோய் செய்து, இறந்த அன்பிலவனைத்
தெளிய—விசும்பினுள் ஞாலத்தகத்தும்
வளியே! எதிர்போம் பல கதிர் ஞாயிற்று
ஒளி உள்வழி எல்லாம் சென்று; முனிபு எம்மை
உண்மை நலன் உண்டு ஒளித்தானைக் காட்டீமோ;
காட்டாயேல், மண்ணகம் எல்லாம் ஒருங்கு சுடுவேன், என்
கண்ணீர் அழலால் தெளித்து.

பேணான் துறந்தானை நாடும் இடம் விடாயாயின்—
பிறங்கு இரு முந்நீர்! வெறு மணலாகப்
புறங்காலின் போக இறைப்பேன்; முயலின்,
அறம் புணையாகலும் உண்டு.

துறந்தானை நாடித் தருகிற்பாய்ஆயின், நினக்கு ஒன்று
பாடுவேன், என் நோய் உரைத்து.

புல்லிய கேளிர் புணரும் பொழுது உணரேன்—
எல்லி ஆக, 'எல்லை' என்று, ஆங்கே, பகல் முனிவேன்;
எல்லிய காலை, இரா முனிவேன்; யான் உற்ற
அல்லல் களைவார் இலேன்.
ஓஒ கடலே! தெற்றெனக் கண்ணுள்ளே
தோன்ற இமை எடுத்து
'பற்றுவேன்' என்று, யான் விழிக்குங்கால், மற்றும் என்
நெஞ்சத்துள் ஓடி ஒளித்து, ஆங்கே, துஞ்சா நோய்
செய்யும், அறனில்லவன்.

ஓஒ கடலே! ஊர் தலைக்கொண்டு கனலும் கடுந் தீயுள்
நீர் பெய்தக்காலே சினம் தணியும்; மற்று இஃதோ
ஈரம் இல் கேள்வன் உறீஇய காமத் தீ

நீருள் புகினும், சுடும்.
ஓஒ கடலே! 'எற்றமிலாட்டி என்ஏமுற்றாள்?' என்றுஇந் நோய்
உற்று அறியாதாரோ நகுக! நயந்தாங்கே
இற்றா அறியின், முயங்கலேன், மற்று என்னை
அற்றத்து இட்டு ஆற்று அறுத்தான் மார்பு.
ஆங்கு—
கடலொடு புலம்புவோள் கலங்கு அஞர் தீர,
கெடல் அருங் காதலர் துணைதர, பிணி நீங்கி,
அறன் அறிந்து ஒழுகும் அங்கணாளனைத்
திறன் இலார் எடுத்த தீ மொழி எல்லாம்
நல் அவையுள் படக் கெட்டாங்கு,
இல்லாகின்று அவர் ஆய் நுதல் பசப்பே. — *கலி 144*

*நல்ல நெற்றியை உடையவளே! இவள் ஒருத்தி நாணத்தைக் கைவிட்டுத் தன் மனத்தில் ஒன்றை எண்ணிப் பெருமூச்சு விட்டு விழும் கண்ணீரைத் துடைப்பாள்; பிறரை நோக்காமல் நிலத்தைக் கவிழ்ந்து நோக்குவாள்; 'நீ உற்றது எது?' வெனக் கேட்பவர்க்குக் கனவில் வாய் அஞ்சிக் கூறுப வரைப் போல் விடையல்லாத சிலவற்றைச் சொல்லிப் பல முறையும் நகைப்பாள். இவ்வாறு தெளிவும் மயக்கமுமாய் மயங்குவாள். பிற அத் தன்மையவான துன்பங்கள் பலவற்றை யும் தன்னிடத்தே ஏற்பட 'இவள் என்ன துன்பத்தை அடைந் தாளோ? இவளைக் காண்பாய்! நாம் போய் இவள் சொல்லும் சொற்களைக் கேட்டலைச் செய்யாமோ என்றார்' என்று சொன்னாள்*

*அங்ஙனம் சொன்னவள், கேட்டோம் என்று உமக் குள்ளே கூறிவந்து, "ஏன்அடி நீ என்ன வருத்தம் அடைந்தாய்! உனக்கு இந்த வருத்தத்தைச் செய்தவர் யார்? உன் வருத்தத்தை எங்களுக்குக் கூறுக என்று வினவுகின்றவர்களே, எனக்குத் துன்பம் நேர்ந்த விதத்தைக் கேட்பீராக கொத்தான கூந்தலைக் கொண்டவளே! எனக்கு உண்டான வருத்தத்தை நான் உனக்குச் சொல்லும் அளவும் என் உயிர் போகாமல் தங்கிற்று என்று, இங்ஙனம் என, இவ்வாறு தன்னுடன் மருவுதலைச் செய்து அம் மருவுதலை அவன் கைவிட்டுப் போனான் அக் காலம் தொடங்கி என் நெஞ்சு எனக்கு*

அவன் தழுவின இடத்தே அகப்பட்டு நின்று விட்டது இனி அவன் இருக்கும் இடம் எங்கும் தேடித் தெரிந்து என் மனத்தை என்னிடத்தே கூட்டிக் கொள்வேன் என் உரைத்தாள்

அவ்வாறு உரைத்து, மாலை பொழுதில் துன்பத்தை அடைந்து உரைத்தவள், இனி இப்போது தான் தேடுவது அரியதாகும் எனக் கருதினாள் திங்களைக் கண்டு அதனுடன் செறிந்த முயல் தேடித் தரும் என்று என்று எண்ணினாள் மிகுந்து எழும் கரிய கடல் சூழ்ந்த உலகம் எல்லாம் பார்த்துத் திங்களுள் விளங்கியிருந்த குறிய முயலே! அறிவு வேறுபட்ட என் நெஞ்சை நான் தேடிக் கொள்ள எண்ணிய வருத்தத்தை நீ கூட்டித் தருதல் வேண்டும் அங்ஙனம் தாராயானால் யான் வாங்கிக் கொள்ளும்படி இந்த உலகத்தில் எம் காதலன் உள்ள இடத்தை எனக்குக் காட்டுவாய் நீ காட்டாயானால் உனக்குப் பகையான நாயை உன்னிடம் ஏவுவேன் அது அல்லாது வேட்டுவர் உள்ள இடத்தில் போவேன்; ஒரு முயல் திங்களில் இருக்கிறது எனச் சொல்வேன். அதுவே அல்லாமல் நீ உள்ள திங்களுடன் உன்னை வருந்திடப் பாம்பைச் செலுத்துவேன் என்று மாலைக் காலத்தில் தன் நெஞ்ச வருத்தத்தைச் சொன்னாள் அது வெண் முகிலில் மறைவதைக் கண்டு நீ திங்களுடன் வெண் முகிலில் சென்று ஓடிப் புகுகின்றாய். ஆதலால் சிறிது கண்ணோட்டம் செய்து அவனைத் தேடிப் போவதைப் போன்று உள்ளாய் எனச் சொன்னாள்.

அங்ஙனம் சொல்லி, அது கரிய கொண்டலில் மறைந்து விடுதலால் அதை நோக்கித் தேடுமாறு அதற்குச் சொல்ல எண்ணி, அக் கள்வன் மறைந்திருப்பனோ என்று காட்டும்படி நீண்ட இலைகளை உடைய தாழைச் செடிகள் பொருந்திய சிவந்த மணலையுடைய கானலில் சோலை தோறும் ஓடிப் போய் அவனை ஒளித்தபடியிருந்து காண்பேன் என்று ஒளிந்தி ருப்பேன் நீயும் ஒளிந்திருந்து தேடுவாய் எனச் சொன்னாள்

அங்ஙனம் கூறிப் பின்னர் அவன் இருக்கும் இடங்களைச் சொல்லத் தொடங்கிப் பூவையுடைய அரும்பு மலரைக் கொண்டு எமக்குத் தரும் மாலையைக் கட்டின இடத்தைக் காண்பாய்!

அமைதியில்லாதவன் யாம் விளையாடும் கோரைப் புல் பாவையையும் மலர்களையும் கொணர்ந்து நமக்குக் காட்டி யான் தன் பின்னே செல்லும்படி அவற்றைக் கொண்டோடிய உவ் இடத்தைக் காணாய்

எனக்கு அவன் தொய்யில் எழுதினான் அத்தகைய இடத்தைப் பாராய்

மனத்தில் அறமற்ற அவன், 'தையலே, நின்னைப் பிரியேன்' என்று என்னைத் தெளிவித்தான் பின்பு மெல்ல முயங்கினான். முயங்கிய உவ் இடத்தைப் பாராய்!

அங்ஙனம் சொன்ன அளவில் அந்த முயல் கரிய முகிலுக் குள் மறைந்து போனது ஆதலால் அதைக் கைவிட்டு இடையே தன்மீது வந்த காற்றை விளித்தாள் "காற்றான தெய்வமே திங்களின் ஒளி போலன்றி வானத்திலும் உலகத் திலும் பரவும் பல செங்கதிர்களை உடைய ஞாயிற்றின் ஒளியுள்ள இடம் எங்கும் போய்த் தேடுதற்குரிய உயவுத் தேரை ஊர்ந்து வந்து, தன்னால் அருளத்தக்க என் உள்ளத்தில் கெடாத காம நோயைச் செய்து என்னைக் கைவிட்டுச் சென்ற அன்பு அற்றவனை அந்த நோய் நீங்கி மனம் தெளிவு கொள்ளும்படி எதிர்ப்படுவாய் அவ்வாறு செய்து வேட்கை மிகுதியான் எம்முடைய இயற்கை நலத்தை உண்டவன் பின்பு ஒரு காரணமும் இல்லாது போனவனைக் காட்டுவாய் அங்ஙனம் நீ காட்டாயாயின் எழும் தீயால் நின் மேனியை எல்லாம் சுடுவேன் என்று மொழிந்தாள்

அவ்வாறு கூறி அதைப் பின்பு காணாததால், தான் அதைத் தேட எண்ணிக் கடலை நோக்கி,"கடல் தெய்வமே! என்னைப் பாதுகாவாமல் துறந்தவனை நான் தேடிக் காணும் இடத்தில் விட்டுப் போகாமல் ஏறுவாயாயின் உன் இடம் எங்கும் வெறும் மணலாய் என் புறங்காலால் உன்னுடைய நீரையெல்லாம இறைப்பேன் அது முடியுமோ என்றால் அது முடிதற்கு அறக் கடவுள் எனக்குத் துணையாகவும் கூடும் என்று சொன்னாள்

அவ்வாறு மொழிந்து ஓதம் வடிந்ததைக் கண்டு என்னைத் துறந்து போனவனை நீ தேடிக் கொண்டு வந்து தருவா

யாயின் அதற்குக் கைம்மாறாக என் நோயினைக் கூறி உனக்கு ஒரு பாட்டைப் பாடுவேன் என்றாள்

அவ்வாறு உரைத்துப் பாடுபவள் என்னைக் கூடின உறவினர் வந்து சேரும் காலம் இரவோ பகலோ அறியேன் ஆதலால் என்னைத் துன்பப்படுத்தும் பகற் பொழுது போய் இரவு ஆகுக என எண்ணிப் பகற் போதை வெறுப்பேன் அது போய் இரவான காலத்தில் அந்த இரவுக் காலத்தை அப் போதே வெறுப்பேன்!

ஓ கடலே! அறமற்ற என் தலைவன் தெளிய என் கண்ணுள் வந்து தோன்றுதலால் கூடிய இமையை விழித்து அவனைப் பிடித்துக் கொள்ள நான் விழித்தேன் விழிக்க அவன் என் மனத்துள் மறைந்து நின்றான் அப்போதே நான் உறங்காத காம நோயை அளிப்பான்

கடலே, ஊரையெல்லாம் தன்னதாக்கிக் கொண்டு மறைந்து கடிய நெருப்பு தன்னை அவிக்கும் நீரைச் சொரியச் சினமாறும் அதைப் போல அல்லாது அருள் அற்ற என் கேள்வன் எனக்கு உண்டாக்கிய இந்தக் காமமான தீ தனக்குப் பகையான நீருள் புகுந்தாலும் வேகும்படி சுடும்

தன் மனத்தில் ஒரு துணிவு இல்லாதவள் என்ன பித்து ஏறினாள் எனச் சொல்லி இக் காமநோய் அறியாதவர் என்னை இகழ்ந்து சிரிக்க. இந் நோய்க்குத் துணையான ஓர் ஆளறுதி யிலே என்னை இட்டுவைத்து என் வன்மையை அறுத்தவன் நான் விரும்பிய அக் காலத்தில் பின்னால் இப்படி வருத்தும் என்று அறியின் முயங்கேன்' அக் காலத்தில் இதை அறியேன் நான்! என்று இயம்பினாள்

காதலி அப்படிக் கடலுடன் வருந்திக் கூறினாள் அத் தகையவளது மனம் கலங்கும் வருத்தம் காட்டித் தீரும்படி அவர் காதலர் விரைந்து வரக் கெட்ட காமநோய் நீங்கியது இவளது நெற்றிப் பசலை, அறநெறி அறிந்து கண்ணோட்டம் உடையவனை அத் திறமில்லாதோர் உண்டாக்கிச் சொன்ன தீய மொழிகள் எல்லாம் என் மக்கள் இருக்கின்ற அவைக் குள்ளே ஆரரய அவை கெட்டாற் போல் இல்லையாயிற்று! என்ன வியப்போ! என்று கண்டோர் கூறினர்

## 336. செங்கதிர் முன் இருட் துன்பம்

'துனையுநர் விழை தக்க சிறப்புப்போல், கண்டார்க்கு
நனவினுள் உதவாது நள்ளிருள் வேறாகும்
கனவின் நிலையின்றால், காமம்; ஒருத்தி
உயிர்க்கும்; உசாஅம்; உலம்வரும் ஓவாள்,
கயல் புரை உண்கண் அரிப்ப அரி வார,
பெயல் சேர் மதி போல, வான் முகம் தோன்ற,
பல ஒலி கூந்தலாள், பண்பு எல்லாம் துய்த்துத்
துறந்தானை உள்ளி, அழூஉம், அவனை
மறந்தாள்போல் ஆலி நகூஉம்; மருளும்;
சிறந்த தன் நாணும் நலனும் நினையாது,
காமம் முனைஇயாள், அலந்தாள் என்று, எனைக் காண,
நகான்மின்; கூறுவேன், மாக்காள்! மிகாஅது,
மகளிர் தோள் சேர்ந்த மாந்தர் துயர் கூர நீத்தலும்,
நீள் சுரம் போகியார் வல்லை வந்து அளித்தலும்,
ஊழ் செய்து, இரவும் பகலும் போல் வேறாகி,
வீழ்வார்கண் தோன்றும்; தடுமாற்றம் ஞாலத்துள்
வாழ்வார்கட்கு எல்லாம் வரும்.

தாழ்பு, துறந்து, தொடி நெகிழ்த்தான் போகிய கானம்
இறந்து எரி நையாமல், பாஅய் முழங்கி –
வறந்து என்னை செய்தியோ, வானம்? சிறந்த என்
கண்ணீர்க் கடலால், கனை துளி வீசாயோ,
கொண்மூக் குழீஇ முகந்து?

நுமக்கு எவன் போலுமோ? ஊரீர்! எமக்கும் எம்
கண்பாயல் கொண்டு, உள்ளாக் காதலவன் செய்த
பண்பு தர வந்த என் தொடர் நோய் வேது
கொள்வது போலும், கடும் பகல்? ஞாயிறே!
எல்லாக் கதிரும் பரப்பி, பகலொடு
செல்லாது நின்றீயல் வேண்டுவல்; நீ செல்லின்,
புல்லென் மருள்மாலைப் போழ்து இன்று வந்தது என்னைக்
கொல்லாது போதல் அரிதால்; அதனொடு யான்
செல்லாது நிற்றல் இலேன்

ஒல்லை எம்காதலர்க் கொண்டு, கடல்ஊர்ந்து காலைநாள்
போதரின் காண்குவேன்மன்னோ – பனியோடு
மாலைப் பகை தாங்கி, யான்?

இனியன் என்று ஓம்படுப்பல், ஞாயிறு! இனி.

ஒள் வளை ஓடத் துறந்து, துயர் செய்த
கள்வன்பால் பட்டன்று, ஒளித்து என்னை, உள்ளி–
பெருங் கடல் புல்லென, கானல் புலம்ப,
இருங் கழி நெய்தல் இதழ் பொதிந்து தோன்ற,
விரிந்து இலங்கு வெண்நிலா வீசும் பொழுதினான்,

யான் வேண்டு ஒருவன், என் அல்லல் உறீஇயான்;
தான் வேண்டுபவரோடு துஞ்சும்கொல், துஞ்சாது?
வானும், நிலனும், திசையும், துழாவும் – என்
ஆனாப் படர் மிக்க நெஞ்சு.

ஊரவர்க்கு எல்லாம் பெரு நகை ஆகி, என்
ஆர் உயிர் எஞ்சும்மன்; அங்கு நி சென்றீ–
நிலவு உமிழ் வான் திங்காள்! ஆய் தொடி கொட்ப
அளி புறம் மாறி, அருளான் துறந்த அக்
காதலன் செய்த கலக்குறு நோய்க்கு ஏதிலார்
எல்லாரும் தேற்றார், மருந்து.

வினைக் கொண்டு என் காம நோய் நீக்கிய ஊரீர்!
எனைத்தானும் எள்ளினும், எள்ளலன், கேள்வன்;
நினைப்பினும், கண்ணுள்ளே தோன்றும்; அனைத்தற்கே
ஏமராது, ஏமரா ஆறு.

கனை இருள் வானம்! கடல் முகந்து, என்மேல்
உறையொடு நின்றீயல் வேண்டும், ஒருங்கே
நிறை வளை கொட்பித்தான் செய்த துயரால்
இறை இறை பொத்திற்றுத் தீ.
எனப் பாடி
நோயுடை நெஞ்சத்து எறியா, இனைபு ஏங்கி,
'யாவிரும் எம் கேள்வற் காணீரோ?' என்பவட்கு,
ஆர்வுற்ற பூசற்கு அறம்போல, ஏய்தந்தார்;

பாயல் கொண்டு உள்ளாதவரை வரக் கண்டு
மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர,
ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்தது என்
ஆயிழை உற்ற துயர். – *கலி 145*

*மக்கள் விரைந்து விரும்பும் தலைமை போல் இருக்கும் காமமானது நள்ளிருளில் கண்டவர்க்கு நனவில் உதவாமல் வேறுபட்டுப் போகும் கனவிலும் நிலைபெறாததாக உள்ளது எப்படி என்றால் பலவாய்த் தழைத்த கூந்தலை உடைய ஒருத்தி அவள் தன் குணங்களை யெல்லாம் நுகர்ந்து தன்னைக் கைவிட்டவனை நினைத்துப் பெருமூச்சு விடுவாள் அவனுடன் கூடும் விதத்தைப் பற்றிச் சிலரை வினவுவாள்; நெஞ்சு கலங்கு வாள்; பெய்யும் மழையைச் சேர்ந்த திங்கள் போல் தன் முகம் தோன்றும்படி கயலைப் போல் விளங்கும் தன் விழி களினின்று விழும் நீர் முகத்தில் வடியுமாறு ஒழியாமல் அழுவாள்; அவனை மறந்தவளைப் போல் ஆரவாரித்து இடையே சிரிக்கவும் செய்வாள்; ஆதலால் தனக்குச் சிறந்த தன் நாணத்தையும் மற்ற நற்குணங்களையும் நிலைபெற நினையாது காமம் ஒன்றை மட்டுமே எண்ணி வருந்துவாள் என்று இங்ஙனம் இகழ்ந்து கூறி எல்லாரும் காண என்னைச் சிரிக்காதீர், ஐந்து அறிவினை உடையவர்களே, நான் சுருக்க மாய்க் கூறுவேன் அதன் தன்மையாக் கேளுங்கள்" என்று சொன்னாள் அங்ஙனம் கூறுபவள் மங்கையர் தோளைச் சேர்ந்த ஆடவர் அவர்கள் வருத்தம் அடையும்படி பிரிதலும், பின்பு நீண்ட சுரத்தில் சென்றவர்கள் விரைவாய் வந்து அருள் செய்தலுமான இரண்டும் இரவும் பகலும் போல ஒருவரை ஒருவர் விரும்புபவரிடம் தோன்றும் இன்பம் நிலையில்லாமையான தடு மாற்றமாய் இருக்கும் அது தனக்கே அன்றி உலகத்தில் கூடியிருந்து வாழ்பவர்க்கெல்லாம் வரவும் செய்யும் என்று அவள் அதன் தன்மையைச் சொன்னாள்*

*அவ்வாறு கூறி, நாம் இங்ஙனம் ஆனோம் என்று எண்ணி அழுபவள், அங்கு எழுந்த வெண்மையான முகி லினைப் பார்த்து, "முகிலே, நீ பெய்யாமல் வறண்டு என்னை என்ன காரியம் செய்கின்றாய்? உன் இனத்துடன் கூடி என்*

கண்ணீரால் சிறந்த கடலில் முகந்து பரவி ஒலித்து முன்பு என்னிடம் தாழ்ந்து பின்பு என்னைத் துறந்து தொடியை நெகிழச் செய்தவன் போன காட்டில் நெருப்பு மிக்குச் சுடராம் செறிந்த துளியை வீச மாட்டாயோ? வீசுவாய்!" என்று மழையைப் பார்த்துச் சொன்னாள்

அங்ஙனம் சொன்னவள், மீண்டும் அந்த ஊரில் உள்ளவர்களைப் பார்த்து, "ஊரவரே இக் கடும்பகல் எமக்கு எம் உறக்கத்தைத்தான் கொண்டு எம்மை நினையாத காதலை உடையவன் என்னிடத்துச் செய்த குணங்கள் தருவதால் வந்த என் இடையறாத நோயினால் வருகின்ற குளிரை வேது கொண்டு என்னைக் காக்கும் கடும்பகலே, ஞாயிறே, நீ எல்லாக் கதிர்களையும் பரப்பி இப் பகற்பொழுதுடன் போகாது நிற்றலை விரும்புகிறேன் நீ சென்றால் பொலிவற்ற மயக்கத்தை உடைய மாலைப்போது இன்று வந்து என்னைக் கொல்லாது போவது அரியதாகும் அதனுடன் என் உயிர் போகாமல் இராது, என்றாள்

எனச் சொல்லி மேலும் அவள், 'ஞாயிறே, நீ எம் காதலரை விரையக் கொண்டு கடல்மீது தோன்றிக் காலையில் இந்த உலகத்துக்கு வருவாயாயின், நான் என் நோயின் நடுக்கத்துடன் உன்னிடத்து அவன் இனியன்; அவனை நீ தனித்திராதே கொள் என் நெஞ்சைப் பாதுகாப்பதும் செய்வேன். அங்ஙனம் பாதுகாத்துப் பின்பு அவனைக் காண்பேனோ?" என்று வினவினாள்.

அங்ஙனம் ஞாயிற்றை நோக்கிச் வினவின அளவிலே மாலைக்காலமும் திங்களும் வந்தன. அவற்றால் வருத்தம் மிக்கு என் வருத்தம் கொண்ட நெஞ்சு முன்னம் வளை கழலும்படி என்னைக் கைவிட்டுப் பின்பு வருந்திய கள்வனை எண்ணி என்னிடமிருந்து ஒளித்துப் போய் அவனிடம் பொருந்தியது அதுதான் மீண்டும் வந்து பெரியகடல் தன் நிறம் தோன்றாது பொலிவுறக் கானல் பறவைகள் முதலியவை இல்லாமல் தனித்திருக்க, கழியில் உள்ள நெய்தல் மலர் இதழ் குவிந்து தோன்ற வந்த மாலை, பின்பு விளங்கும் வெண்ணிலவு பரவும் பொழுதில் வானத்தையும் திசைகளையும் அவனைத் தேடித் துழவும் இவ்வாறு எனக்குத் துன்பம் செய்தவன், தான்

விரும்பாமல் நான் விரும்பப்பட்ட ஒருவன். அவன் தன்னை விரும்பும் என்னுடனே உறங்காமல் தனியே உறங்குவானோ உறங்கானோ?" என்று சொன்னாள்.

அப்போது தோன்றிய திங்களை நோக்கி "ஒளியை உமிழும் திங்களே, தோள் மெலிந்த காலத்தில் செருகலாம் என்று ஆராய்ந்த தொடி உட்படச் சுழலும்படி அளித்தலை என்னிடம் மாறி, பின்பு எனக்கு அருளாமல் கைவிட்ட காதலன் செய்த மனக்கலக்கம் அடைகின்ற காம நோய்க்கு நின்னைத் தவிர மற்றவர் எல்லாரும் அதற்கு ஒரு மருந்தைத் தெளிந்து சொல்லமாட்டார்கள். ஆதலால் ஊரவர்க்கு எல்லாம் பெரிய இகழ்ச்சி உண்டாகும்படி என் அரிய உயிர் போகின்றது இதை நோக்கித் திங்களான புத்தேளே, நீ அவனிடம் போய் என் குறையை முடிப்பாயாக," எனச் சொன்னாள்.

அங்ஙனம் சொன்னபோது திங்கள் போகாது நிற்றலால், அதைக் கைவிட்டாள்; "இன்னும் நம் வருத்தம் உணர்ந்து வினவிய ஊரில் உள்ளவரே நமது வருத்தத்தைத் தீர்ப்பதற்கு உரியவர்," என்று அவள் எண்ணினாள் "ஊரவரே, நீவிர் என்னை இகழ்ந்திருப்பினும் என் கேள்வன் என்னைச் சிறிதும் இகழ்ந்திருக்கமாட்டான். அதற்குக் காரணம் என்னவெனில் மெய்யைப் புணர்ந்து யான் பரிகாரம் அற்ற நெறியிலே நின்று நெஞ்சால் நினைப்பிடத்துத் தோன்றுதலைவிடக் கண்ணிலே தோன்றுவான். என் நெஞ்சம் அவ்வளவு அருள் செய்வதற்குப் பரிகாரப்படுகின்றதில்லை இதை உம் தொழிலாய்க் கொண்டு என் காமநோயை நீக்குதற்கு இது நல்ல காலம்," எனச் சொன்னாள்

அவ்வாறு சொல்லி, "இருளையுடைய முகிலே! நிறைந்த வளையல் கழலச் செய்தவன் உண்டாக்கிய வருத்தத்தால் எனக்குச் சந்து தோறும் சந்து தோறும் (உறுப்பின் பொருந்து வாய் தோறும்)

காமத்தீ உண்டாயிற்று இதன் வெப்பம் ஆறும்படி கடலில் முகந்து என்மீது இடைவிடாது பெய்யும் நீர்த் துளியோடே நிற்றலைச் செய்ய வேண்டும்," என்று சொன்னாள்

என அவ்வாறு கூறிக் காம நோயையுடைய நெஞ்சில் அடித்துக் கொண்டு வருந்தி அழுதாள். "நீங்கள் யாவரும்

*தேடிச் சென்றும் எம் கணவரைக் காணப் பெறவில்லையோ" எனச் சொன்னாள் அவளுக்கு ஏற்பட்ட வருத்தமானது, தன் துயிலை வாங்கிக் கொண்டு தன்னை நினையாதவரைத் தன்னிடம் வரக்கண்டு, அவர் மார்பிடத்தே திருமாலின் மார்பில் திருமகள் சேர்ந்தாற் போல் சேர்ந்தாள் அவ்வளவில் ஞாயிற்றின் முன் இருள் கெடுவது போல் அவள் துன்பம் கெட்டது ஆகவே 'இவள் பசலை அடைந்த வருத்தத்தில் கடவுள் உதவித் தீர்த்தாற் போல அவரும் உதவித் தீர்த்தார்" எனக் கண்டவர் வியந்து தமக்குள் கூறிக் கொண்டனர்*

## 337. அல்லல் தீர்ந்தது

உரை செல உயர்ந்து ஓங்கி, சேர்ந்தாரை ஒரு நிலையே
வரைநில்லா விழுமம் உறீஇ, நடுக்குஉரைத்து, தெறல்மாலை
அரைசினும் அன்பு இன்றாம், காமம்; புரை தீர,
அன்ன மென் சேக்கையுள் ஆராது, அளித்தவன்
துன்னி அகல, துறந்த அணியளாய்

நாணும் நிறையும் உணர்கல்லாள், தோள் நெகிழ்பு,
பேர் அமர் உண் கண் நிறை மல்க, அந் நீர் தன்
கூர் எயிறு ஆடி, குவிமுலைமேல் வார்தர,
தேர் வழி நின்று தெருமரும்; ஆயிழை
கூறுப கேளாமோ, சென்று?

'எல்லிழாய்! எற்றி வரைந்தானை, நாணும் மறந்தாள்' என்று
உற்றனிர் போல, வினவுதிர்! மற்று இது
கேட்டீமின், எல்லீரும் வந்து.

வறம் தெற மாற்றிய வானமும் போலும்;
நிறைந்து என்னை மாய்ப்பது ஓர் வெள்ளமும் போலும்—
சிறந்தவன் தூ அற நீப்ப, பிறங்கி வந்து
என்மேல் நிலைஇய நோய்.

நக்கு நலனும் இழந்தாள், இவள்' என்னும்
தக்கவிர் போலும்! இழந்திலேன்மன்னோ—
மிக்க என் நாணும், நலனும், என் உள்ளமும்,
அக் கால் அவனுழை ஆங்கே ஒழிந்தன!
உக் காண்—இஃதோ உடம்பு உயிர்க்கு ஊற்றாக

செக்கர் அம் புள்ளித் திகிரி அலவனொடு, யான்
நக்கது, பல் மாரண் நினைந்து.

கரை காணா நோயுள் அழுந்தாதவனைப்
புரை தவக் கூறி, கொடுமை நுவல்வீர்!
வரைபவன் என்னின் அகலான் – அவனை,
திரை தரும் முந்நீர் வளாஅகம் எல்லாம்,
நிரை கதிர் ஞாயிற்றை நாடு என்றேன்; யானும்
உரை கேட்புழி எல்லாம் செல்வேன்; புரை தீர்ந்தான்
யாண்டு ஒளிப்பான்கொல்லோ மற்று?

மருள் கூர் பிணை போல் மயங்க, வெந்நோய் செய்யும்
மாலையும் வந்து, மயங்கி, எரி நுதி
யாமம் தலை வந்தன்றுஆயின், அதற்கு என் நோய்
பாடுவேன், பல்லாருள் சென்று.

யான் உற்ற எவ்வம் உரைப்பின், பலர்த் துயிற்றும்
யாமம்! நீ துஞ்சலைமன்.

எதிர்கொள்ளும் ஞாலம், துயில் ஆராது ஆங்கண்
முதிர்பு என்மேல் முற்றிய வெந் நோய் உரைப்பின்,
கதிர்கள் மழுங்கி, மதியும், அதிர்வது போல்
ஓடிச் சுழல்வதுமன்.

பேர்ஊர் மறுகில் பெருந் துயிற் சான்றீரே!
நீரைச் செறுத்து, நிறைவுற ஓம்புமின் –
கார் தலைக்கொண்டு பொழியினும், தீர்வது
போலாது, என் மெய்க் கனலும் நோய்.

இருப்பினும் நெஞ்சம் கனலும்; செலினே,
வருத்துறும் யாக்கை; வருந்துதல் ஆற்றேன்;
அருப்பம் உடைத்து, என்னுள் எவ்வம் பொருத்தி,
பொறி செய் புனை பாவை போல, வறிது உயங்கிச்
செல்வேன், விழுமம் உழந்து.

என ஆங்குப் பாட, அருள் உற்று,
வறம் கூர் வானத்து வள் உறைக்கு அலமரும்
புள்ளிற்கு அது பொழிந்தாஅங்கு, மற்றுத் தன்

நல் எழில் மார்பன் முயங்கலின்
அல்லல் தீர்ந்தன்று, ஆயிழை பண்பே. – *கலி 146*

*மன்னன் தனக்குப் புகழ் உயர்வதற்காக, அறிவால் மிக்க தம் அமைச்சரை முதலில் நடுங்கத் தக்க சொற்களைச் சொல்லிப் பின்பு ஒரு நிலையில் எல்லையற்ற துன்பங்களை அடையும்படி கொல்வதை இயல்பாய்க் கொண்ட கொடுங் கோல் மன்னனை விட, கணவர்க்கு மகளிர்க்கு உண்டான காமத்தாலும் அவர்மீது உண்டாகும் அன்பு இல்லாமல் இருந்தது எவ்வாறு என்றால் அவள் தன் தலைவன் அன்னப் பறவையின் தூவியால் செய்த மென்மையான படுக்கையில் அருளி இரவில் வந்து கூர்மையான எயிற்றின் நீரைப் பருகிக் குற்றம் நீங்க அன்பு காட்டி நீங்கினன் ஆதலால் அத்தகைய அன்பால் நிறையாமல் நீங்கிய அணிகளை உடையவளாய்த் தன் நாணையும் நிறை என்ற குணத்தையும் தாங்க வேண்டும் என்று அறியாமல் தன் தோள் மெலிந்து பெரிய மையுண்ட கண் நீர் நிறைகையால் அந்த நீர் தன் குவிந்த முலை மேல் வடிய, அவனைத் தேடுதற் பொருட்டு மனம் சுழல்வாள். எனவே இனி நாம் இவளிடம் போய் இவள் கூறுவனவற்றைக் கேளாது இருப்போமா? கேட்போம் என்று உமக்குள் சொல்லி என்னிடத்தில் வந்து 'ஒளியுடைய அணியை உடையவளே,' என்று விளித்துப் பிரியேன் எனக் கூறி விட்டுப் பிரிய எண்ணியவனைப் பிரியமாட்டான் என்று எண்ணி அவன் பிரிதலால் நாணத்தையும் துறந்தாள் எனச் சொல்லி, எனக்கு அன்புடையவர் போல், 'நீ என்ன துன்பம் அடைந்தாய்? என வினவுகின்றவர்களே, என் வருத்தத்தை எல்லீரும் கேளுங்கள்:*

*"எனக்குச் சிறந்தவன் என் வலி நீங்கும்படி என்னைக் கைவிட்டமையால் பெருகி வந்து என் மீது வந்துள்ள இக் காம நோய், கோடைக் காலத்தில் உலகத்தைச் சுடும்படி பொய்யா மல் போன முகில் வருத்துவதைப் போலும் பெருகி, என் உயிரைப் போக்கும் நீர் வெள்ளம் வருத்துமாற்றையும் போலும்" என உரைத்தாள்*

*அவ்வாறு சொல்லி, அவன் அன்பு இல்லாதவன் ஆவதை அறியாமல் அவனைப் புணர்ந்து தன் அழகையும் நாணத்தையும் உள்ளத்தையும் இவள் இழந்தாள் என்னும்*

தன்மை யுடையவள் போல் இருந்தீர் அவன் அன்பற்றவன் அஃது என்னவென்றால் அவன் இந்த உடலினின்று போகும் உயிர்க்கு உறுதியாகுமாறு, சிவந்த நிறத்தையும் புள்ளிகளை யும் உடைய தேர்ச் சகடம் போன்ற ஆண் நண்டு பெண் நண்டோடு நிகழ்த்தும் பல சிறப்புகளையும் நான் உன்னிடத்தே நிகழ்த்து மாறு உன் நெஞ்சால் எண்ணி, அவை செய்வன வற்றையும் அங்குப் பாராய் என்றான் அதனால் அவனது அன்புடைமையை அறிந்தே நான் அவனொடு புணர்ந்தது. அக் காலத்தில் என் நாணமும் என் நலமும் என் உள்ளமும் புணர்ச்சியால் மிக்கன. அவை அவன் நீங்கிய போதே அவனிடம் நின்றுவிட்டன. ஆதலால்தான் நோய் மிகும் அவற்றைக் கடந்த தன்மை உடையேன் அல்லேன்" என்று சொன்னாள்.

அவ்வாறு அவள் சொன்னவள். பின் "என்னைப்போல ஓர் எல்லை அறிய முடியாத காம நோயில் மூழ்காதவனை உயர்வு கெடுமாறு அவன் பிரிந்து நாணம் முதலியவற்றைத் தாராத கொடுமையை நாடி அவள் வந்த காலத்தன்றே நீ அவற்றைப் பெறுவது உறுதி என மொழிபவர்களே, கதிர் களை உடைய ஞாயிற்றை நான் நோக்கி அலையைத் தரும் கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் தேடிக் கொண்டுவா எனக் கூறிவிட்டேன். அதுவே அன்றி அவன் இவ்விடத்தான் என்ற் சொல் கேட்கும் இடம் எல்லாம் போய்த் தேடுவேன் இவ்வாறு தேடும் அளவில் உயர்வு நீங்கிய அவன் எங்கு ஒளிந்திருப்பான்? அவனைக் கைப்பற்றிக் கொண்டு நாண முதலியவற்றைத் திரும்பப் பெற்றே தீர்வேன் என்னை நெஞ்சால் வரைந்துள்ளவன் என்னிடமிருந்து நீங்கான்!" என்றும் அவள் மொழிந்தாள்.

அவ்வாறு அவள் கூறிய அளவில், மாலையும் இரவும் வந்தன அவை வருவதை உணர்ந்தாள் "மயக்கம் மிக்க பெண்மான் போல் நான் மயங்கும்படி கொடிய காம நோயை உண்டாக்கும் மாலைக் காலமும் வந்து, அதனுடன் மயங்கி, தீக்கொழுந்துபோல் கொடிய இராக் காலமும் அங்கு வந்ததாயின், அதில் நான் பட்ட வருத்தத்தை என்போல் வருந்தும் பல மகளிருக்குள்ளே போய்ச் சொல்வேன் பலரை

யும் உறங்கச் செய்யும் இராக் காலமே! நீ மிகவும் வருந்தி உறக்கம் கொள்ளாய்! ஆகவே என் நோயை உனக்குச் சொல்லேன்" என்றும் கொடுமை சொல்கின்றவர்களை நோக்கிச் சொன்னாள்

"பின்பு திங்கள் வருத்தும் என உணர்ந்து உலகத்தில் உள்ளவரால் அவ் வானத்தில் இளம்பிறைப் பருவத்தில் எதிர் கொள்ளப்பட்டுப் பின்பு முதிர்ந்து நான் உறங்காமல் என்மீது வந்து வளைத்த மதியும், நான் அடைந்த கொடிய நோயை முறையாய்ச் சொன்னால், தனது கதிர்கள் ஒளி மழுங்கி நடுங்குவது போல் ஓடி மிகவும் சுழன்று திரியும் ஆதலால் உமக்கன்றி அதற்கும் என் நோயைத் கூறேன்" என்றும் சொன்னாள்

அப்படிச் சொல்லிப் "பெரிய ஊரின் தெருவிலே நான் அடையும் வருத்தத்துக்குக் கழுவாயாக எதையும் செய்யாமல் பெரிய உறக்கத்தைக் கொள்ள எண்ணிய சான்றோரே, என் உடலில் நின்று எரியும் காம நோய், மழையெல்லாம் என்னிடத்தே பெய்தாலும் ஆறுவதுபோல் இல்லை! இது தணியும்படி உலகத்தில் உள்ள நீரை என்னிடம் நிறையுமாறு அடைத்து வைத்து என் உயிரைக் காப்பீராக!" என்றும் சொன்னாள்

பின்பு தன் நோயின் செய்தியைச் சொல்பவள் "அவன் நெஞ்சில் நீங்காமல் இருப்பினும் அதனால் அமையாமல் காந்தும் அவன் ஒருகால் சென்றால், தான். அதற்கு வருத்தம் அடையும் அவ்வாறு என் மனம் வருந்துதலை ஆற்ற முடியாமல் பலவுறுப்புகளையும் கூட்டி இயக்கும் ஒரு பொறி யாகச் செய்த பாவைபோல் துன்பத்துள் அழுந்தித் தணியா என்னிடத்து உண்டான துன்பமானது, மற்றவரால் அழிப்ப தற்கு அரிய அரண் போன்ற தன்மையை உடையது இந்த அரணை அழித்தற்கான வழியை ஆராய்வீராக" எனவும் இயம்பினாள்

என அங்குச் சொல்ல, "கோடைக்காலம் பெரிய வானில் முகிலின் வளவிய மழைத்துளியைப் பெறுவதற்குச் சுழன்று திரியும் வானம்பாடிப் பறவைக்கு அம் முகில் பெய்தாற் போல், தன்னுடைய நல்ல அழகையுடைய மார்பன் அருளி வந்து

*முயங்குகையால், அம் மங்கையின் துன்பம் போயிற்று" இவ்வாறு கண்டோர் வியந்து தங்களுக்குள் கூறினார்கள்*

## 338. காதலன் மார்பில் காதலி சேர்ந்தாள்

ஆறு அல்ல மொழி தோற்றி, அற வினை கலக்கிய,
தேறுகள் நறவு உண்டார் மயக்கம்போல், காமம்
வேறு ஒரு பாற்று ஆனதுகொல்லோ? சீறடிச்
சிலம்புஆர்ப்ப, இயலியாள் இவள்மன்னோ, இனி மன்னும்
புலம்பு ஊரப் புல்லென்ற வனப்பினாள் – விலங்கு ஆக
வேல் நுதி உற நோக்கி, வெயில் உற, உருகும் தன்
தோள் நலம் உண்டானைக் கெடுத்தாள் போல்,
தெருவில் பட்டு
ஊண் யாதும் இலள் ஆகி, உயிரினும் சிறந்த தன்
நாண் யாதும் இலள் ஆகி, நகுதலும் நகூஉம்; ஆங்கே
பெண்மையும் இலள் ஆகி அழுதலும் அழூஉம்; தோழி! ஓர்
ஒண்ணுதல் உற்றது உழைச் சென்று கேளாமோ?

இவர் யாவர் ஏமுற்றார் கண்டீரே? ஓஒ!
அமையும் தவறிலீர் மற்கொலோ? நகையின்
மிக்கதன் காமமும் ஒன்று என்ப; அம் மா
புது நலம் பூ வாடியற்று, தாம் வீழ்வார்
மதி மருள நீத்தக்கடை.

என்னையே மூசி, கதுமென நோக்கன்மின் வந்து.

கலைஇய கண், புருவம், தோள், நுசுப்பு, ஏஎர்
சில மழைபோல் தாழ்ந்து இருண்ட கூந்தல், அவற்றை
விலை வளம் மாற அறியாது, ஒருவன்

வலை அகப்பட்டது என் நெஞ்சு–

வாழிய, கேளிர்!
பலவும் சூள் தேற்றித் தெளித்தவன் என்னை
முலையிடை வாங்கி முயங்கினன், நீத்த
கொலைவனைக் காணேன்கொல், யான்?

காணினும், என்னை அறிதிர்; கதிர் பற்றி
ஆங்கு எதிர் நோக்குவன் – ஞாயிறே! – எம் கேள்வன்

யாங்கு உளன் ஆயினும் காட்டீமோ? காட்டாயேல்
வானத்து எவன் செய்தி, நீ?

ஆர் இருள் நீக்கும் விசும்பின் மதி போல,
நீருள்ளும் தோன்றுதி, ஞாயிறே! அவ் வழித்
தேரை தினப்படல் ஓம்பு.

நல்கா ஒருவனை நாடி யான் கொள்வளை,
பல் கதிர் சாம்பிப் பகல் ஒழிய, பட்டீமோ—
செல் கதிர் ஞாயிறே! நீ.

அறாஅல் இன்று அரி முன்கைக் கொட்கும்
பறாஅப் பருந்தின்கண் பற்றிப் புணர்ந்தான்
கறாஅ எருமைய காடு இறந்தான்கொல்லோ?
உறாஅத் தகை செய்து இவ் ஊர் உள்ளான்கொல்லோ?
செறாஅது உளனாயின், கொள்வேன்; அவனைப்
பெறாஅது யான் நோவேன், அவனை எற் காட்டிச்
சுறாஅக் கொடியான் கொடுமையை, நீயும்,
உறாஅ அரைச! நின் ஓலைக்கண் கொண்டீ,
மறாஅ அரைச! நின் மாலையும் வந்தன்று,
அறாஅ தணிக, இந் நோய்.

தன் நெஞ்சு ஒருவற்கு இனைவித்தல் யாவர்க்கும்
அன்னவோ காம! நின் அம்பு?

கையாறு செய்தானைக் காணின், கலுழ் கண்ணால்
பையென நோக்குவேன்; தாழ் தானை பற்றுவேன்;
ஐயம் கொண்டு, என்னை அறியான் விடுவானேல்
ஒய்யெனப் பூசல் இடுவேன்மன், யான் – அவனை
மெய்யாகக் கள்வனோ என்று.

வினவன்மின் ஊரவிர்! என்னை எஞ்ஞான்றும்
மடாஅ நறவு உண்டார் போல, மருள
விடாஅது உயிரொடு கூடிற்று – என் உண்கண்
படாஅமை செய்தான் தொடர்பு.

கனவினான் காணிய, கண் படாஆயின்,
நனவினான், ஞாயிறே! காட்டாய் நீஆயின்

பனை ஈன்ற மா ஊர்ந்து, அவன் வர, காமன்
கணை இரப்பேன், கால் புல்லிக்கொண்டு.
என ஆங்கு
கண் இனைபு, கலுழ்பு ஏங்கினள்;
தோள் ஞெகிழ்பு, வளை நெகிழ்ந்தனள்;
அன்னையோ! எல்லீரும் காண்மின் மடவரல்
மெல் நடைப் பேடை துணைதர, தற் சேர்ந்த
அன்ன வான் சேவல் புணர்ச்சிபோல், ஒண்ணுதல்
காதலன் மன்ற அவனை வரக் கண்டு, ஆங்கு
ஆழ் துயரம் எல்லாம் மறந்தனள், பேதை.
நகை ஒழிந்து, நாணு மெய் நிற்ப, இறைஞ்சி,
தகை ஆகத் தையலாள் சேர்ந்தாள் நகை ஆக,
நல் எழில் மார்பனகத்து. *– கலி 147*

*தோழியே, அறநெறி அல்லாத தீய சொற்களைத் தம்மிடம் தோன்றி, அறமற்ற தொழில்களைத் தம்மிடம் தோன்றாமல் கலக்க வேண்டித் தெளிந்த கள்ளையும் நறவையும் உண்டவரின் உலகியல் கெட்ட மயக்கம் போல் நல்லவர் ஆற்றுகின்ற காமம் உலகியல் தவறி வேறு ஒரு பகுதியாகி விட்டதோ? அதற்குக் காரணம் என்ன என்றால் இப்போது கணவன் இல்லாத தனிமை பரவுகையால் பொலிவற்ற அழகையுடையளான இவள், வேலின் முனை செய்யும் கொடுமையை அடையுமாறு எதிரே நோக்காது விலக்குதல் உண்டாக நோக்குதலால் நெஞ்சம் உருகும் கணவனைப் பிரிந்தவளைப் போல் தெருவில் புறப்பட்டாள் வெளியில் தன் அடியில் சிலம்பு ஒலிக்க எவ் இடத்தும் திரிபவள் ஆனாள் அதுவே அல்லாது உணவு சிறிதும் இல்லாமல் மேனி வாடி உயிரை விடச் சிறந்த நாணமும் சிறிதும் இல்லாதவளாய்ச் சிரிக்கவும் செய்வாள் அப்போதே பெண்மையும் இல்லாதவளாய் அழவும் அழுவாள் இதை மனத்தால் ஆராய்ந்து பார் அங்ஙனம் ஆராய்ந்து இவள் அடைந்த வருத்தத்தை இவளருகில் போய்க் கேளேமோ? கேட்டோம் என்று சொல்லி மொய்த்து விரைவாய் வந்து என்னைப் பாராமல் கொள்ளுங்கள் உமக்கு முன்னம் இவரைச் சூழ்ந்து நின்ற இவரைக் கண்டீரே, ஓஓ! இவரே நிற்க அமையும்*

நீவிர் இதற்கு முன்பு நான் அடைந்த தவறு இல்லாதவர் போலிருந்து உமக்கும் ஒரு காலத்தே உண்டாகும் இனிமேல் நான் சொல்வதைக் கேட்பீராக தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் ஒரு காமம் என்று நூல்களில் உரைப்பர் ஆதலால் அதனை யுற்று நின்ற என்னை இகழாமல் கொள்ளுங்கள். இங்கு ஏமுற்றார் யார்? யார் ஏமுற்றது என்று தாம் விரும்பிய ஆடவர் தம் அறிவு மயங்கும்படி கைவிட்டபோது அவர் பெற்ற நலம் கெடும் தன்மையானது வண்டு நுகர்ந்து தன் புதிய நலம் கெட்ட பூவின் நிலைமையுடையது! காணுங்கள்!" என்றாள்

('இவர் யாவர்? என்றது முதல் தலைவியின் கூற்று தன்னைச் சேர்ந்து வரும் மகளிரை நோக்கி 'இவர் யார்?' என்றாள் என்க. அதன்பின்பு அவள் தன்னை வியப்புடன் பார்க்கும் அப் பெண்டிரை நோக்கி, 'நீங்கள் எதைக் கண்டு வியக்கின்றீர்? இங்குப் பித்துக் கொண்டவரைக் கண்டீரோ?' என்று கடிபவள் 'ஏமுற்றார் கண்டீரோ' என்றாள் மேலும் அவர்கள் தன்னை நோக்குதலால் மகளிர்க்கெல்லாம் இது பொருந்தும் என்பதால் 'ஓ, அமையும்' என்றாள்)

அவ்வாறு சொல்லி, "அவனுடன் கலந்த கண், புருவம், தோள், இடை, நீண்ட இருண்ட கூந்தல் என்பனவற்றின் அழகைப் பெறும் விலையின் வளப்பத்தை அறிந்து கொடுத்த வனிடத்து உள்ளவற்றைக் கொள்ளுதல் அறியாமல் ஒருவன் கூறிய பொய்யான வலையிலே என் நெஞ்சு அகப்பட்டு விட்டது!" எனச் சொன்னாள் சொல்லி, மேலும், "கேளீர், வாழ்க!" என்று அவர்க்கு முகமன் கூறி, "அவன் இயற்கைப் புணர்ச்சியிலும் பல சூள் சொல்வதாலும் எனது மனத்தைத் தேற்றித் தெளியச் செய்தவன் என்னை அணைத்து முலையில் முயங்கினான் பின்பு தெளிவு பொய்யாகுமாறு கைவிட்ட கொலைத் தொழில் வல்லவன் அத்தகையவனைத் தேடிக் காண்பேனோ?

அவன் என்னைக் கண்டாலும் அவனால் நான் அடையும் பொலிவை அறியமாட்டீர்" என அவரைப் பார்த்துச் சொன்னாள்

அவர்கள் விடை சொல்லவில்லை

அதனால் ஞாயிற்றைப் பார்த்து, "ஞாயிறே, போக்கு வதற்கு அரிய இருளைப் போக்கும் வானத்தில் திங்கள் தோன்றுவதைப் போல் நீயும் நீருக்குள்ளே தோன்றுவாய். அவ்வாறு தோன்றிய இடத்து அந் நீரில் வாழும் தேரை இரை என உன்னை உண்டுவிடும் ஆதலால் அதனின்று உன்னைப் பாதுகாத்துக் கொள்" என அதற்கு முகமன் கூறினாள்

"வானத்திலிருந்து எங்கும் பார்க்கின்ற நீ எனக்கு என்ன செயலைச் செய்வாய்? ஒன்றையும் செய்யாயினும் இப்போது என் கேள்வன் எங்கு இருந்தாலும் எனக்குக் கொண்டு வந்து காட்டுவாய். அங்ஙனம் நீ காட்டாது போயின் நான் உன் கதிர்களைப் பிடித்துக் கொண்டு அந்த வானத்திலே ஏறிப் பார்ப்பேன். அதற்கு நீ செய்யும் காரியம் எனக்கு அருள் செய்யாதவனை நாடி நான் பிடித்துக் கொள்ளும்வரை ஞாயிறே, உன் பல கதிர்கள் பகற்காலத்துடன் இங்கு நிற்கச் சில கதிர்களுடன் மறைவாயாக!" எனச் சொன்னாள்.

"உலகத்தவர் வேண்டிக் கொண்ட செயல்களை மறுக்காத ஞாயிறே! என் கையிலிருந்து நீங்காமல் அழகிய மயிரை யுடைய முன் கையில் கிடந்து சுழலும் வளையிடத்தைப் பற்றித் தெளிவித்து என்னைக் கூடினான் அத் தகையவன் பாலின் பயனைப் பெறுவதற்குச் சிலவற்றைக் காட்டிக் கறக்கப்படாத காட்டெருமைகள் உள்ள காட்டைக் கடந்து போனானோ? என்னிடம் அன்புகொள்ளாத செயலைச் செய்து இந்த ஊரிலேயே இருந்தானோ? இரண்டையும் நான் அறியேன்! அவனை முயங்கப் பெறாது வருந்துகின் றேன். அதனுடன் உன்னால் மாலைக் காலமும் வந்தது இனி இந்த நோய் என்னிடமிருந்து நீங்காது அவன் இங்கு இருப்பா னானால் எனக்குக் காட்டு. காட்டினால் அவனைச் சினவா மல் மனத்தால் ஏற்றுக்கொள்வேன்," என்ற உரைத்தாள்.

ஞாயிறு அவனைக் காட்டாமல் மறைந்தது ஆதலால் அதனைக் கை விட்டு, "நடுவு நிலைமையாய் இருத்தலின்று ஒருபால் பொருந்தாத கூற்றமே! சுறவுக் கொடியை உடை யாமன் செய்கின்ற கொடுமைகளையும் நீயும் நின் ஓலையில் எழுதி வைத்துக் கொண்டு தண்டிப்பாய் அவன் நமக்கு

வணங்கும் தெய்வமாதலால் அவனைத் தண்டியாமல் தணி வாயாக!" எனச் சொன்னாள்

அவ்வாறு சொல்லிக் காமனை நோக்கி, "காமனே! உன் அம்புள் தனக்கு உரிய நெஞ்சைத் தன்மேல் அன்பில்லாதவன் ஒருவன் பொருட்டு வருந்தும்படி செய்தல் சிலர்க்கே அல்லாது எல்லார்க்கும் பொருந்தும் தன்மையை உடைய வையோ, அல்லவோ?" என்றும் இயம்பினாள்.

அவ்வாறு இயம்பி, இனிவரும் இரவில் உன் அம்புகளால் நான் இறந்துபடுமாறு செய்யாது, நான் உயிர் கொண்டு இருக்குமாறு அருள் செய்தால், அவசத்தால் சிறிது துயின்று கலங்கிய கண்ணால் எனக்குத் துன்பம் செய்தவனைக் கனவில் கண்டேனாயின், அப்போது என் கண்ணைக் கடுக விழித்துப் பாராமல் மெத்தெனப் பார்ப்பேன். பார்த்த பின்பு அவன் தப்பிப் போகாதபடி அவனது துகிலைப் பிடித்துக் கொள் வேன். எனது மேனி வேறுபாட்டைக் கண்டு, 'இவள் நம் தலைவியோ!' என்ற ஐயத்தை மனத்தில் அவன் கொள்வான். கொண்டு என்னைக் கைவிடுவான். கைவிடின், என் நாணம் முதலிய குணங்களையும் மேனி நலத்தையும் மெய்யாய்க் கொண்டு போன கள்வன் என்று எல்லாரும் கேட்குமாறு விரைந்து கூப்பிடுவேன்," என்ற அவள் காமனை நோக்கிச் சொன்னாள்

பின் அவள் ஊரவரைப் பார்த்து, "ஊரிலுள்ளவர்களே! எங்களை நோக்கிக் கூறும் நீவிர் ஞாயிற்றையும் காமனையும் பார்த்துக் கூறியதற்கு அவை என்ன செய்யும் என்று என்னைக் கேட்காதீர் எந் நாளும் என் கண் உறங்காமையைச் செய்தவன் தந்த நட்பால் உண்டான நோய் சமைக்காத கள்ளை உண்டவரைப் போல் மயங்கும்படி விடாது உயிரைப் பொருந்தும் தன்மையுடன் கூடிவிட்டது இனி இந்த உயிரைக் காக்கும் வழி உண்டாயின் காப்பீர் என்றும் மொழிந்தாள் அவள்

அதற்கு அவர்கள் மறுமொழி சொல்லவில்லை அதனால் முன் சொன்ன ஞாயிற்றையும் காமனையுமே திரும்பவும் நினைத்தாள் "வருகின்ற இரவில் கனவில் அவனைப் பார்த்து ஆற்றுவதற்குக் காமன் அம்பு செய்கின்ற கொடுமையால்

கண்கள் உறங்கவில்லையாயின், கதிரவனே, எல்லாப் பொருளையும் காட்டுகின்ற நீ நனவில் வந்தேனும் அவனைக் காட்டாயயானால் இப்படியே வருத்தம் அடைந்து பனை ஈன்ற குதிரை மீது ஏறி அவன் என்னிடம் தானே வரும் படியாக, அந்தக் காமன் காலைக்கட்டிக் கொண்டு 'உன் அம்புகளை எனக்குத் தருதல் வேண்டும்,' என்று காமனை இன்னும் இரந்து கொள்வேன்" என்றும் அவள் சொன்னாள்

"அன்னோ! இந்த ஒண்ணுதல்!" என்று வருந்திக் கண் கலங்கி அழுதாள். தோள் வாடி மெலிந்து வளையல் கழலப் பெற்றாள் இந்தப் பேதை, மடம் பொருந்திய மெல்லிய நடையையுடைய அன்னப்பறவை விரைந்து செல்ல, அதைச் சேர்ந்த அன்னச் சேவலின் கூட்டம் போல, பின் அவள் காதலன் வந்தான். வர, அங்கே அவனைக் கண்டு தான் பட்ட துயரம் எல்லாம் மறந்தாள் மறந்து இம் மங்கை பின்பு ஊரவர் நகைத்த நகையையும் போக்கிப் போன நாணமும் தன் உடலிடத்தே வந்து நிற்கையிலே தலைவணங்கித் தன் உடலிடத்தே அழகுண்டான மனத்தில் நகை ஏற்பட அந்த நல்லெழில் மார்பனிடத்தே சேர்ந்தாள் அம் மகிழ்ச்சியையும் எல்லாரும் காணுங்கள்!" எனக் கண்டவர் வியந்து தமக்குள் கூறினர்

## 339. செய்வினை முடித்து வந்தர் காதலர்!

தொல் இயல் ஞாலத்துத் தொழில் ஆற்றி, ஞாயிறு,
வல்லவன் கூறிய வினை தலை வைத்தான்போல்,
கல் அடைபு, கதிர் ஊன்றி, கண் பயம் கெடப் பெயர;
அல்லது கெடுப்பவன் அருள் கொண்ட முகம் போல,
மல்லல் நீர்த் திரை ஊர்பு மால் இருள் மதி சீப்ப;
இல்லவர் ஒழுக்கம் போல், இருங் கழி மலர் கூம்ப;
செல்லும் என் உயிர்ப் புறத்து இறுத்தந்த மருள் மாலை!
மாலை நீ
இன்புற்றார்க்கு இறைச்சியாய் இயைவதோ செய்தாய்மன்;
அன்புற்றார் அழ, நீத்த அல்லலுள், கலங்கிய
துன்புற்றார்த் துயர் செய்தல் தக்கதோ, நினக்கு?
மாலை நீ

**கலந்தவர் காமத்தைக் கனற்றலோ செய்தாய்மன்;**
**நலம் கொண்டு நல்காதார் நனி நீத்த புலம்பின்கண்**
**அலந்தவர்க்கு அணங்கு ஆதல் தக்கதோ, நினக்கு?**
**மாலை நீ**
**என் கேள்வற் தருதலும் தருகல்லாய்; துணை அல்லை;**
**பிரிந்தவர்க்கு நோய்ஆகி, புணர்ந்தவர்க்குப் புணை ஆகித்**
**திருந்தாத செயின் அல்லால் இல்லையோ, நினக்கு?**
**என ஆங்கு**
**ஆய் இழை மடவரல் அவலம் அகல,**
**பாய் இருட் பரப்பினைப் பகல் களைந்தது போல,**
**போய் அவர் அன் வெளவி வந்தனர்—**
**சேய் உறை காதலர் செய் வினை முடித்தே.** — ***கலி 148***

*ஞாயிறு தன் கதிர்களால் உலகத்தில் தான் செய்து வரும் பொருள்களை விளக்குபவன் அத் தொழிலில் அவன் ஊன்றி நடத்தி வந்தனன் அவனைக் காமன் நான் தலைவரைப் பிரிந்திருந்தாரை வருத்துவதற்கு நீ செல் என்று கூறினான். அச் செயலை மேற்கொண்ட ஞாயிறு போவான் போல் மறை மலையைச் சேர்ந்தான் பல உயிர்களும் தன் கண்களால் கொள்ளும் பயன் கெடுமாறு போனான் தீவினையைப் போக்குகின்றவனின் அருளுடைய முகம் போன்று திங்கள் கடல் மலைமேல் தோன்றி மயக்கத்தையுடைய இருளைப் போக்கினான் போக்க, பொருள் இல்லாதவர் நடத்தும் இல்லறம் போல் கரிய கழியின் பூக்கள் குவிந்தன அவ் அமயத்துத் தலைவனைப் பிரிந்த தலைவி தேயும் என் உயிர்ப் புறத்தில் வந்துவிட்ட மாலையே! நீ அறிவு மயங்குதலை யுடைய மாலையாய் இருந்தாய் என்று சொன்னாள்*

*அவ்வாறு சொன்னவள், "அதற்குக் காரணம் என்ன வென்றால், மாலையே! தலைவருடன் கூடி இன்பம் அடைந்த வர்க்கு அன்பாய், அவர்கள் தங்களுக்குள் ஒன்று கூடும் நிலைமையை முன்னம் செய்து போனாய் இப்போது ஆடவர் தம் மீது அன்பு கொண்ட மகளிர் அழும்படி தம்மைக் கை விட்டதால் உண்டான அல்லலிடத்தே பொருந்தித் துன்புற்ற மங்கையரை வருத்துதல் உனக்குத் தகுதியன்று"*

"மங்கையர்ரைச் சேர்ந்த கணவருடைய உள்ளத்து விருப்பத்தை அம் மகளிர்க்குத் துணையாய் நின்று அவர் உள்ளத்திலிருந்து நீங்காது காந்தி எரியும் தன்னையை முன்னம் செய்தாய் இப்போது அம் மகளிர் நலத்தைக் கைக் கொண்டு பின் அவர்க்கு அருளாத ஆடவரால் தம் நலம் போன தனிமையிடத்தே நின்று வருந்திய மகளிர்க்குத் துணை யாகாமல் வருத்தம் செய்தல் உனக்குத் தக்கதன்று".

"மாலையே! நீ அறிவு மயங்கினை! எம் கேள்வரை முன்பு போல் மனத்தைக் கனலுமாறு செய்து இங்குத் தரவும் இல்லை எனவே நீ எனக்குத் துணையில்லை. தான் பிரிந்தி ருந்த மகளிர்க்கு அப் பிரிவால் தோன்றிய நோயின் வடிவு நீயாவாய். கூடியவர்க்கு அவர் பெறும் இன்பத்துக்குத் தெப்ப மாய் உள்ளாய். இவ்வாறு நன்மையாகாத செயல்களைச் செய்து ஒழுகும் செயல்களே அல்லாது உனக்கு நன்மையாய்ச் செய்யும் செயல்களே இல்லையோ!" என்றாள்

"திருத்தமான அணிகளையுடைய மடப்பம் உடையவள் வருந்தியவிடத்தே தொலைவான நிலத்தில் உள்ள காதலர் பகைவரிடம் செய்கின்ற போர்த் தொழில்களைப் போய் முடித்து, அவரது மண்ணைக் கைக்கொண்டு, பரவிய இருள் பரப்பை ஞாயிறு போக்கியதைப் போன்று, அவளது வருத்தம் நீக்க வந்தார் இஃது என்ன வியப்போ!" இவ்வாறு கண்டவர் கூறினர்

## 340. வருந்தினள் நெஞ்சமொடு பெரிதே

நிரை திமில் களிறாக, திரை ஒலி பறையாக,
கரை சேர் புள்ளனித்து அம் சிறை படையாக,
அரைசு கால்கிளர்ந்தன்ன உரவு நீர்ச் சேர்ப்ப! கேள்:
கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான்
விச்சைக்கண்
தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்,
ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான்; மற்று அவன்
எச்சத்துள் ஆயினும், அஃது எறியாது விடாதே காண்.
கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்
தாள் இலான் குடியேபோல், தமியவே தேயுமால்,

சூள்வாய்த்த மனத்தவன் நினைபொய்ப்பின் மற்று அவன்
வாள்வாய் நன்று ஆயினும், அஃதுஎறியாது விடாதே காண்.
ஆங்கு
அனைத்து, இனி பெரும! அதன்நிலை; நினைத்துக் காண்:
சினைஇய வேந்தன் எயிற்புறத்து இறுத்த
வினை வரு பருவரல் போல,
துனை வரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

*- கலி 149*

*வரிசையான திமில்கள் யானைகளாகவும், அலையின் ஒலி முரசமாகவும், இனத்தையும் அழகையும் உடைய கரையைச் சேர்ந்துள்ள பறவைகள் காலாட் படையாகவும் பாண்டியன் பகைவர் மேல் படையெடுத்துச் சென்றதைப் போன்ற வலிமையையுடைய கடலைச் சேர்ந்த நிலத்தை உடையவனே, நான் கூறுவதைக் கேட்பாயாக:*

*தனக்கு ஒரு வருத்தம் உண்டானவிடத்து உதவினவர் களுக்கு ஒரு வருத்தம் ஏற்பட்டால் உதவி செய்யாதவன், தனக்கு நூல் முதலியவற்றைக் கற்பித்தவன் தன்னிடம் ஒன்றும் பெறாமல் மனம் வருந்த, தனது கைப் பொருளை அக் கல்விப் பொருளுக்குக் கைம்மாறாகக் கொடுத்து உண்ணாதவனாகத் தான் கற்ற கலையில் தவறு செய்து கொண்டவனின் கல்விப் பொருள் நாள்தோறும் தேய்வதைப் போன்று தானே தானாகத் தேய்வான் அதுவே அல்லாமல் அந்தச் செய்ந்நன்றி கொல்லலான அது தான் உடலை ஒழித்து உயிர் சென்றவிடத்தே யாயினும் அனுபவிக்கச் செய்யாமல் போகாது*

*தான் சொல்லும் சூளைக் காண்கின்றவர் மனம் கொள்ளும்படி சூள் உரைத்த மனத்தையுடையவன், தான் சொன்ன சூளை நிறைவேற்றாது, கைவிட்டுப் பொய்ப்பவன் ஆனால், தன்னைச் சேர்ந்து வாழும் உறவினர் நெஞ்சைதான் ஒன்றை அறியாமல் வருத்துமாறு தன்னிடம் பொருந்திய செல்வத்தில் நின்று மேன்மேலும் வளர்க்கும் முயற்சி இல்லாத வனின் குடியானது நாள்தோறும் தேயும் அதுபோல் தானே தானாகத் தேய்வன் அதுவுமே அல்லாது பின் அச் சூளைப் பொய்த்த தீவினை மறுமையில் விரவி, அது வாளினது*

கூர்மையைப் போல் கூர்மை உடையதாய், அவன் புத்தேளில் புகுந்தாலும் அவனை நுகருமாறு செய்யாமல் விடாது

பெருமையனே! செய்ந்நன்றி கேடானது பொய்ச் சூளுற வான தீவினையின் இயல்பு முன் கூறிய அத்தகைய இயல் புடையது இனி நீ அத் தன்மைமையுடையவனாய் உள்ளாய் இதை நினைந்து பார் இவள்தான் தன் பகைவனுடன் சினம் கொண்ட மன்னன் அவன் மதிற்புறத்தே போய்விட்ட வினையினால் முற்றுகையிட்டுள்ளவனுக்கு வந்த வருத்தம் போன்று, மணம் விரைவில் முடிவதற்கு விரைதல் வரும் மனத்தால் பெரிதும் வருத்தம் அடைந்தாள் இனி அந்த வருத்தம் நீங்கும்படி விரைந்து தலைவி மணந்து கொள் வாயாக என்று வரைவு வேண்டினாள்

## 341. பருவம் கழிதற்கு முன்வருவர்

அயம் திகழ் நறுங் கொன்றை அலங்கல் அம் தெரியலான்
இயங்கு எயில் எயப் பிறந்த எரி போல, எவ்வாயும்,
கனை கதிர் தெறுதலின், கடுத்து எழுந்த காம்புத் தீ
மலை பரந்து தலைக் கொண்டு முழங்கிய முழங்கு அழல்
மயங்கு அதர் மறுகலின், மலை தலைக் கொண்டென,
விசும்பு உற நிவந்து அழலும், விலங்கு அரு, வெஞ் சுரம்—

இறந்து தாம் எண்ணிய எய்துதல் வேட்கையால்,
அறம் துறந்து ஆயிழாய்! ஆக்கத்தில் பிரிந்தவர்
பிறங்கு நீர் சடைக் கரந்தான் அணி அன்ன நின் நிறம்
பசந்து, நீ இனையையாய், நீத்தலும் நீப்பவோ?

கரி காய்ந்த கவலைத்தாய், கல் காய்ந்த காட்டகம்
'வெருவந்த ஆறு' என்னார், விழுப்பொருட்கு, அகன்றவர்
உருவ ஏற்று ஊர்தியான் ஒள் அணி நக்கன்ன, நின்
உரு இழந்து இனையையாய், உள்ளலும் உள்ளுபவோ?
கொதித்து உராய்க் குன்று இவர்ந்து,
கொடிக் கொண்ட கோடையால்

'ஒதுக்கு அரியநெறி' என்னார், ஒண்பொருட்கு அகன்றவர்
புதுத்திங்கட் கண்ணியான் பொன்பூண் ஞான்று அன்ன நின்
கதுப்பு உலறும் கவினையான், காண்டலும் காண்பவோ?

ஆங்கு
அரும் பெறல் ஆதிரையான் அணி பெற மலர்ந்த
பெருந் தண் சண்பகம் போல, ஒருங்கு அவர்
பொய்யார் ஆகுதல் தெளிந்தனம்—
மை ஈர் ஓதி மட மொழியோயே! — *கலி 150*

*நீர்நிலையின் அண்மையில் மாலைபோல் விளங்கும் கொன்றை மலர் மாலையையுடைய சிவனின் திரிபுரத்தை எய்தலால் தோன்றின முழங்கும் வெப்பத்தையுடைய தீ வானில் உயர்ந்து விளங்குவது போல், செறிவான கதிர்களை யுடைய ஞாயிறு எங்கும் சுடும் அதனால் காய்ந்த மூங்கில் தம்மிலே இழைதலைக் கைக்கொண்டு வானிலே பொருந்த உயர்ந்து வெப்பத்தைச் செய்யும். விலங்குகள் பலகாலும் திரிதலால் மயங்கிய வழிகளை உடைய மலைகள் பரந்து குறுக்கிட்டு விளங்கும் இத்தகைய இயல்பு கொண்ட அரிய சுரத்தை ஆராய்ந்தெடுத்த அணிகலன் அணிந்தவளே, தாம் எண்ணிய செயல்களை அடைவதால் உண்டான விருப்பத்தால் அறத்தைக் கைவிட்டுக் கொடிய காட்டைக் கடந்து விளங்கும் நீரைச் சடையில் மறைத்தவனைப் போன்ற பொருளை ஈட்ட எண்ணிப் பிரிந்தவர், அழகை அடைய உன் நிறம் பசலை கொண்டு இத் தன்மையாக உன்னைக் கை விடுதலும் செய்வாரோ! அவ்வாறு செய்யார்*

*வெந்த யானையை உடைய பல வழிகளை உடையதாய்க் கற்கள் காய்ந்த காட்டை அஞ்சத்தக்க வழி என்று எண்ணாத வராய்க் காளையான ஊர்தியை உடைய சிவனைப் போன்ற சிறந்த பொருளின் பொருட்டுப் பிரிந்து போனவர் ஒளி யுடைய உன் வடிவை இழந்து நீ இத் தன்மையுடைய அப் பொருளை நினைக்கவும் செய்வாரோ? செய்யார்!*

*"ஞாயிறு கிழக்கில் தோன்றிக் கொதித்துப் பரந்து தான் கொண்ட கோடைக் காலத்தில் போவதற்கு அரியது என்று எண்ணாதவராய்ப் புதிய திங்களான சிறந்த பொருளுக்குப் பிரிந்து போனவர், பொன்னால் செய்த தலைக் கோலங்கள் தாழ்ந்து விளங்கிய நின் மயிர் அவ்வாறின்றிக் காய்கின்ற இயல்புடையாய் நீ விளங்க அந்தப் பொருள் ஆசையை மனத்தால் காணவும் செய்வாரோ! அவ்வாறு செய்யார்!*

"கருமை நெய்ப்பு ஆகியவற்றை உடைய கூந்தலையும் மடப்பமுடைய மொழியையும் உடையவளே, பெறுவதற்கு அரிய ஆதிரை நாளை உடைய சிவபெருமான் திருமேனி அழகை அடையுமாறு மலர்ந்த பெரிய இந்தச் சண்பகம் பருவம் பொய்க்காதது போல அவர்தம் கூறிய பருவத்தைப் பொய்க்காமல் வருவார் என்பதை அவர் சொல்லால் நானும் நீயும் தெளிந்தோம் அப் பருவம் கழிவதற்கு முன் அவர் வருவார். அவர் மொழியை உண்மை எனத் தெளிவாயாக" என்று தோழி தலைவியை ஆற்றுவித்தாள்

